உ

கடவுள் துணை

புலிப்பாணி முனிவர் அருளிச்செய்த

# வயித்தியம் - ருா

## மூலமும்-உரையும்

ஆத்ரேய ஆயுர்வேத சா...
தென்னூர்ரோடு, திருச்சிராப்பள்ளி.
இது

தமிழ்ப்பண்டிதரும், சித்த வயித்தியருமான

மாங்காடு. வடிவேலு முதலியார் அவர்களால்

கைபாக, செய்பாக மர்மங்களுடன்

எழுதப்பட்டு,

சென்னை - சூளை,

எஸ். துரைசாமி முதலியார் அவர்களால்

தமது

ஸ்ரீ "பாரதி" அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

ரெஜிஸ்தர் செய்தது] 1934. [விலை அணு 12.

உ

கடவுள் துணை.

புலிப்பாணி முனிவர் அருளிச்செய்த

# வயித்தியம் ௫௱

## மூலமும்—உரையும்.

இது

தமிழ்ப்பண்டிதரும், ஆயுர்வேத வயித்தியருமான

ராங்காடு. வடிவேலு முதலியார் அவர்களால்

கைபாக, செய்பாக மர்மங்களுடன்

எழுதப்பட்டு,


சென்னை - சூளை,

எஸ். துரைசாமி முதலியார் அவர்களால்

தமது

ஸ்ரீ "பாரதி" அச்சுக்கூடத்தில்

பிரசுரிக்கப்பட்டது.

[ரிஜிஸ்தர் செய்தது]  1925  [விலை அணா 12

# நூலாசிரியர் வரலாறு.

புலிப்பாணி முனிவர் என்பவர் தம்முடைய சொல்லால் போக முனிவர் மாணவர் என்பது மாத்திரம் நன்கு விளங்குகிறதேயன்றி, அவருடைய நாடு, நகரம், குலம், பெற்றோர் முதலியவை ஒன்றும் விளங்கவில்லை. இவர் பரம்பரை மாணவரேயன்றி, நிகண்டு, திவாகரம் முதலிய நூற்கள் கற்றபின்னர், இலக்கிய இலக்கணம் கற்றுப் பின்னர் பொருளாராய்ச்சியில் வந்தவரென்று எவ்வாற்றானுஞ் சொல்லுதற்கில்லை. இதற்கிவர் செய்யுட்களே சான்றாம். ஆயின், இவர் மந்திரம், ஜாலம், சித்து, வயித்தியம், வாதம், சோதிடம், முதலியவை உணர்ந்தவரென மாத்திரம் உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்குகின்றது. இவர் உலக முழுமைக்கும் யாத்திரை செய்தவராகத் தெரிகிறது, அது மேருமலையின் நாற்பாங்குகளிலுள்ள மனிதர் முதலியோர் பெருமைகளை விளக்குகின்றமையின். கலியுகம் இருநூற்றைந்தில் சிவகிரியில் குடத்திற் சலந்திரட்டிக் கையிலேந்திப் புலியின்மேலேறிச் சென்று "ஸ்ரீ தண்டபாணி"யைப் பூசித்த காரணத்தால் "புலிப்பாணி முனிவர்" என்று இவருக்குப் பேர் வந்ததாக,

"கேளே நீ கலியுகத்தி லிருநூற் றைந்தில்
கேசரிபோற் புலிப்பாணி பேரும் பெற்றேன்
சூளேநீ சலந்திரட்டிக் கரத்தி லேந்திச்
சுகமாக வேங்கையின்மே லேறிச் சென்று
நாளேநீ சிவகிரியிற் றண்ட பாணி
நாதருக்குப் பூசித்தே யருளைப் பெற்றும்
ஆளேநீ போகரிட குகைமே லையா
அஷ்டசத்தி பதிதனிலே வாழ்ந்தேன் பாரே." என்னும்

இச்செய்யுளா லுணரக்கிடக்கின்றது. இவர் செய்த நூல்கள், சூத்திரம் பதினாறு, இருபத்தைந்து, ஐம்பது, நூறு, சண்முகபூசை, ஜாலம் 200, பலதிரட்டு 300, சோதிடம் 300, கொக்கோகம் 300 என்பன.

# நூலாசிரியர் வரலாறு.



புலிப்பாணி முனிவர் என்பவர் தம்முடைய சொல்லால் போக முனிவர் மாணவர் என்பது மாத்திரம் நன்கு விளங்குகிறதேயன்றி, அவருடைய நாடு, நகரம், குலம், பெற்றோர் முதலியவை ஒன்றும் விளங்கவில்லை. இவர் பரம்பரை மாணவரேயன்றி, நிகண்டு, திவாகரம் முதலிய நூற்கள் கற்றபின்னர், இலக்கிய இலக்கணம் கற்றுப்பின்னர் பொருளாராய்ச்சியில் வந்தவரென்று எவ்வாற்றானுஞ் சொல்லுதற்கில்லை. இ[illegible]கிவர் செய்யுட்களே சான்றாம். ஆயின் இவர் மந்திரம், ஜாலம், சித்து, வயித்தியம், வாதம், சோதிடம், முதலியவை உணர்ந்தவரென மாத்திரம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குகின்றது. இவர் உலக முழுமைக்கும் யாத்திரை செய்தவராகத் தெரிகிறது, அது மேருமலையின் நாற்பாங்குகளிலுள்ள மனிதர் முதலியோர் பெருமைகளை விளக்குகின்றமையின். கலியுகம் இருநூற்றைந்தில் சிவகிரியில் குடத்திற் சலந்திரட்டிக் கையிலேந்திப் புலியின்மேலேறிச் சென்று ஸ்ரீ தண்டபாணியைப் பூசித்த காரணத்தால் "புலிப்பாணி முனிவர்" என்று இவருக்குப் பேர் வந்ததாக,

"கேளே நீ கலியுகத்தி லிருநூற் றைந்தில்
கேசரிபோற் புலிப்பாணி பேரும் பெற்றேன்

குளேநீ சலந்திரட்டிக் கரத்தி லேந்திச்
சுகமாக வேங்கையின்மே லேறிச் சென்று
நாளேநீ சிவகிரியிற் றண்ட பாணி
நாதருக்குப் பூசித்தே யருளைப் பெற்றும்
ஆளேநீ போகரிட குகைமே லையா

அஷ்டசத்தி பதிதனிலே வாழ்ந்தேன் பாரே.''

என்னும் இச்செய்யுளா லுணரக்கிடக்கின்றது. இவர் செய்த நூல்கள், சூத்திரம் பதினாறு, இருபத்தைந்து ஐம்பது, நூறு, சண்முக பூசை, ஜாலம் 200, பலதிரட்டு 300, சோதிடம் 300, கொக்கோகம் 300 என்பன.

# பொருள் அட்டவணை


| | விஷயம் | | பக்கம் |
|---|---|---|---|
| 1 | சுரக்குளிகை | ... | 12 |
| 2 | ஜன்னிக்குமேல் பூசத்தைலம் | ... | 13 |
| 3 | சூதக வலிக்கு சோற்றுப்பு செந்தூரம் | ... | 14 |
| 4 | பெரும்பாட்டுக்குச் சாறு | ... | 16 |
| 5 | குன்மம் ஆறுக்கும் உப்பு | ... | 16 |
| 6 | நீரடைப்புக்கு நீர் | ... | 18 |
| 7 | மெத்தலை வியாதிக் கெண்ணெய் | ... | 18 |
| 8 | அண்டவியாதிக்கு எண்ணெய் | ... | 19 |
| 9 | ஒருதலை நோய்க்கு நசியம் | ... | 20 |
| 10 | பீநசத்துக்கு நசியம் | ... | 21 |
| 11 | காது வலிக்கு எண்ணெய் | ... | 21 |
| 12 | கண்படலந் தீர ரத்திநாதி குளிகை | ... | 22 |
| 13 | மாலைக்கண்ணுக்கு மை | ... | 23 |
| 14 | கண்ணில் நீர்வடிதலுக்குப் பற்றும் வேதும் | ... | 24 |
| 15 | கண் வலிக்கு நீர் | ... | 25 |
| 16 | தந்த வியாதிப் பொடி | ... | 26 |
| 17 | பல் புழு சாவ வேர்பிடுங்கல் | ... | 27 |
| 18 | வாய்ப்புண்ணுக்கு எண்ணெய் | ... | 27 |
| | இதற்குக் கருக்குக் குடிநீர் | ... | 28 |
| 19 | மேகத்தடிப்புக்குப் பச்சிலைச்சாறு | ... | 29 |
| 20 | அரையாப்புக் கெண்ணெய் | ... | 30 |
| 21 | சகல ரணங்களுக்கும் களிம்பு | ... | 31 |
| 22 | விக்கலுக்குப் புகை | ... | 32 |
| 23 | அகத்தீசர் கலிக்கம் | ... | 32 |
| 24 | முகசந்நிக்கு எண்ணெய் | ... | 33 |
| 25 | சந்நிக்கு எண்ணெய் | ... | 34 |
| 26 | சோகை, காமாலை, வீக்கம், நீர்க்கோவை இவைகளுக்குக் கியாழம் | ... | 36 |
| 27 | பித்தவெடிப்புக்குப் பச்சிலைச்சாறு | ... | 38 |
| 28 | நீரில் இரத்தம் கண்டால் மா | ... | 38 |

| | விஷயம் | | பக்கம் |
|---|---|---|---|
| 29 | முழங்கால் வாதத்துக்குக் கட்டு | ... | 39 |
| 30 | இரணங்களுக்குப் புகை | ... | 39 |
| 31 | வாயுக் குத்தலுக்குக் கஷாயம் | ... | 41 |
| 32 | கிரந்திக்கெண்ணெய் | ... | 41 |
| 33 | மேகம் 21-க்கும் வாய்நாற்றத்திற்கும் எண்ணெய் | ... | 45 |
| 34 | நூல் தொகை | ... | 46 |
| 35 | எலிகடி 18-க்கும் மருந்து | ... | 46 |
| 36 | பேய் நரி, பேய் நாய்க் கடிக்கு மருந்து | ... | 47 |
| 37 | பூனை கடி தீர மூலிகை | ... | 47 |
| 38 | வண்டு கடிக்கு மருந்து | ... | 48 |
| 39 | பூரான் கடி தீர மருந்து | ... | 49 |
| 40 | செய்யான், பெருச்சாளி கடிகளுக்கு | ... | 49 |
| 41 | தேள் காலி விஷந்தீர | ... | 50 |
| 42 | சகல விஷங்களுந்தீர மருந்து | ... | 50 |
| 43 | விஷத்துக்கு நசியம், கலிக்கம் | ... | 50 |
| 44 | சிறுபாம்பு கடிக்கு மருந்து | ... | 51 |
| 45 | குஷ்டத்துக்கு மருந்து | ... | 51 |
| 46 | மருந் தீட்டுக்கு முரிப்பு | ... | 52 |
| 47 | நஞ்சுண்டவர்க்கு முரிப்பும் கர்ப்பமழிக்க மருந்தும் | ... | 53 |
| 48 | விதவையைக் கூடப் பிள்ளை யில்லாதிருக்க | ... | 54 |
| 49 | பார்வைக்குக் குளிகை | ... | 55 |
| 50 | சூனியந்தீரப் புகை | ... | 56 |
| 51 | பிரமைக்கு, பேரண்டபற்பமும், நசியமும்தேய்ப்புச் சாறும் | ... | 57 |
| 52 | கிரகசார சாந்தி | ... | 59 |
| 53 | சூந்யத்திற்கு எண்ணெய் | ... | 60 |
| 54 | மூலரோகத்திற்குச் சூரணம் | ... | 62 |
| 55 | கிரந்தி, அரையாப்புக் கெண்ணெய் | ... | 63 |
| 56 | நால் யுகங்களின் வரலாறு | ... | 65 |
| 57 | மேருமலையின் 4-பக்கமுள்ள மனிதர் வரலாறு | ... | 66 |
| 58 | மருந்தீட்டிற்கு முறிப்பு | ... | 68 |

| | விஷயம் | | பக்கம் |
|---|---|---|---|
| 59 | சூலைக்குக் கற்கம் | ... | 68 |
| 60 | கர்ப்ப மூண்டாக எண்ணெய் நசியம் | ... | 68 |
| 61 | மேற்படிக்குத் துவளை புகை | ... | 70 |
| 62 | சிவகிரி வளப்பம் | ... | 71 |
| 63 | வராககிரி வளப்பம் | ... | 72 |
| 64 | சதுரகிரி வளப்பம் | ... | 72 |
| 65 | இருமலுக்கு லேகியம் | ... | 72 |
| 66 | சூலைவாயு மேகத்துக்குத் தயிலம் | ... | 73 |
| 67 | பிரமேகத்திற்கு எண்ணெய் | ... | 74 |
| 68 | சிவதை சூரணம் | ... | 75 |
| 69 | விப்புருதிக்குக்களி | ... | 75 |
| 70 | மருந்தீட்டுக்கு முரிப்பு | ... | 76 |
| 71 | சாதிலிங்கக்கட்டு | ... | 77 |
| 72 | சூலை 18-க்கும் கஷாயம் | ... | 78 |
| 73 | செங்கிரந்தி தடிப்புக்கு | ... | 79 |
| 74 | மந்தார சந்நிக்குத் தயிலம் | ... | 80 |
| 75 | காதடைப்புக்குத் தயிலம் | ... | 81 |
| 76 | வயிற்றுக் கடுப்புக்கு | ... | 81 |
| 77 | பேதி மாத்திரை | ... | 82 |
| 78 | தலைவலி சந்நிக்குப் புகை | ... | 82 |
| 79 | கர்ப்பூரக் குளிகை | ... | 83 |
| 80 | சித்திரமூல ரசாயனம் | ... | 84 |
| 81 | பல்லுக்குப்பொடி | ... | 85 |
| 82 | வாயு, விக்கல் சோகைக்கு லேகியம் | ... | 86 |
| 83 | கடுகெண்ணெய் | ... | 86 |
| 84 | பஞ்சீகரண செந்தூரம் | ... | 87 |
| 85 | சோகை காமாலைக்கு லேகியம் | ... | 89 |
| 86 | பஞ்சீகரண மாத்திரை | ... | 90 |
| 87 | பஞ்சமுக செந்தூரம் | ... | 91 |
| 88 | இரச செந்தூரம் | ... | 92 |
| 89 | நீர் எரிவு மருந்து | ... | 93 |

| | விஷயம் | | பக்கம் |
|---|---|---|---|
| 90 | புரையோடும் விரணதைலம் | ... | 93 |
| 91 | பறங்கிப்பட்டைப் பதங்கம் | ... | 94 |
| 92 | வல்லாதி தைலம் | ... | 95 |
| 93 | இடிவல்லாதி | ... | 96 |
| 94 | நோய் நக்ஷத்திரம் | ... | 98 |
| 95 | ரசகந்தி மெழுகு | ... | 106 |
| 96 | பில்லிக்குத்துவளை | ... | 109 |
| 97 | குமட்டிக்காய்ப் பதங்கம் | ... | 110 |
| 98 | சூத செந்தூரம் | ... | 113 |
| 99 | கந்தக ரசாயனம் | ... | 114 |
| 100 | மூளை மூல வேது நீர், மருந்து | ... | 115 |
| 101 | பயித்தியத்திற்குப் பச்சிலை | ... | 116 |
| 102 | வேறு பச்சிலை | ... | 117 |
| 103 | வேறு நசியம் | ... | 117 |
| 104 | கெட்ட சகுனம் | ... | 117 |
| 105 | நல்ல சகுனம் | ... | 118 |
| 106 | பல சுரங்களுக்கும் குடி நீர் (கஷாயம்) சுரசப் பொடி, சுரசம் | ... | 118 |
| 107 | தளம் (கண்டேஷம்) | ... | 122 |
| 108 | தாகந்திர, விளாவிலை முதல் குடி நீர் | ... | 123 |
| 109 | வாயுக்களுக்குச் சங்கம் வேர்க்குடி நீர் | ... | 123 |
| 110 | சூட்டுக்கு நீர் | ... | 124 |
| 111 | வீரக்களிம்பு | ... | 125 |
| 112 | பூரக்களிம்பு | ... | 126 |
| 113 | உஷ்ணகாந்தல் குடி நீர் | ... | 126 |
| 114 | குடைச்சலுக்குத் தைலம் | ... | 127 |
| 115 | குடைச்சலுக்குப் பற்று, நீர் | ... | 127 |
| 116 | மாந்ததோஷத்துக்குக் குளிகை | ... | 129 |
| 117 | தாளக பற்பம் | ... | 131 |
| 118 | குன்மம்,வாந்தி,எப்பம்,வாய்நீர்,ஊறலுக்குக்குடிநீர் | ... | 133 |
| 119 | வயிற்றிறைச்சல், பேதிக்கு, மிளகு சூரணம் | ... | 134 |

| விஷயம் | பக்கம் |
|---|---|
| 120 வயிற்றிறைச்சல் இரத்தக் கடுப்புக்கு | ... 134 |
| 121 மூளை மூலத்திற்குக் கட்டு | ... 135 |
| 122 இராமபாண குளிகை | ... 135 |
| 123 கந்தக ரசாயனம் | ... 136 |
| 124 வலிகளுக்குச் சாதிலிங்கக்கட்டு | ... 138 |
| 125 பறங்கிப்பட்டை ரசாயனம் | ... 140 |
| சீரக சூரணம் | ... 141 |
| 126 அரிதார பற்பம் | ... 143 |
| 127 சகல நோய்களுக்கும் சூதக குளிகை | ... 143 |
| 128 பயித்தியத்திற்குப் பற்பம் | ... 144 |
| 129 பில்லி பயித்தியத்திற்குத் தைலம் | ... 145 |
| 130 சர்வ நோய்களுக்கும் சித்திரமூல எண்ணெய் | ... 145 |
| 131 ஆக்கிராணம் | ... 146 |
| 132 கண்டத்தின் மேலுள்ள நோய்களுக்குப் பொடி | ... 148 |
| 133 விரணங்களுக்குப் புகை | ... 149 |
| 134 சூட்டுக்குத் தாமரைத் தைலம் | ... 149 |
| 135 வயித்திய முப்பூ | ... 150 |
| 136 கர்ம சாந்தி | ... 154 |
| 137 நோய்க்கும், பேய்க்கும் ஓமசாந்தி | ... 156 |
| 138 கழிப்பு செய்யும் விதம் | ... 158 |
| 139 பில்லிவஞ்சனை நோய்களுக்குக் குளிநீர் | ... 162 |
| 140 இரத்தசாமுண்டி மந்திரம் | ... 163 |
| 141 ஆடாதபேய் ஆடத்தூபம் | ... 163 |
| 142 கணங்கள், பில்லி, வஞ்சனைகள் போகத்தீபம் | ... 164 |
| 143 பயித்தியத்திற்கு | ... 164 |
| 144 சகல பேய்க்கும் குளிசம் | ... 164 |
| 145 பேய், பூதம், ஓடிப்போக மை | ... 165 |
| 146 அக்கினி பிளாஸ்திரி | ... 167 |
| 147 இரணமாறுகிற பிளாஸ்திரி | ... 168 |
| 148 பிளாஸ்திரி | ... 168 |
| 149 ஷை | ... 169 |
| 150 மேக ராஜாங்கத்து நெய் | ... 169 |
| 151 அஞ்செண்ணெய்த் தைலம் | ... 172 |
| 152 விஷ முஷ்டி தைலம் | ... 174 |

| விஷயம் | பக்கம் |
|---|---|
| 153 விஷங்களுக்கு வரிக்குமட்டி மெழுகு | ... 178 |
| 154 அக்கினி மாந்தத்திற்கு லேகியம் | ... 178 |
| 155 சுத்தபலாதி எண்ணெய் | ... 179 |
| 156 ஈளை, காசம், மூத்திரக்கிரிச்சரம், நீரடைப்பு, பெரும்பாட்டுக்கு நெய் | ... 180 |
| 157 பீநசத்துக்கு எண்ணெய் | ... 183 |
| 158 மேகங்களுக்குத் தீப்புகை | ... 184 |
| 159 அகண்ட மெழுகு | ... 187 |
| 160 இலவண செந்தூரம் | ... 187 |
| 161 நமனுச மெழுகு | ... 189 |
| 162 ஆனைக்கால் தீர லேக்கியம் | ... 190 |
| 163 அர்த்தனரீசுர மத்திரை | ... 191 |
| 164 அமிர்த சஞ்சீவி மாத்திரை | ... 192 |
| 165 அக்கர சஞ்சீவி மாத்திரை | ... 193 |
| 166 பிள்ளைகட்குப் பேதி மாத்திரை | ... 194 |
| 167 கட்டுவாதி மாத்திரை | ... 195 |
| 168 பச்சைக் கர்ப்பூர மாத்திரை | ... 196 |
| 169 சிறுபிள்ளைகளுக்கு கட்டுவாதி மாத்திரை | ... 197 |
| 170 இரத்தக்கொட்டலுக்கும் சீதபோதிக்கும் சூரணம் | ... 197 |
| 171 அமிர்த சஞ்சீவி குளிகை | ... 198 |
| 172 சிறுபிள்ளைகள் காதில் சீக்குரவி தயிலம் | ... 199 |
| 173 சிறுபிள்ளைகள் பெருக்க நெய் | ... 199 |
| 174 குழந்தைகள் வாந்தி நிற்க | ... 200 |
| 175 குழந்தைகள் சிரங்குக்கு | ... 200 |
| 176 சிரங்குக்கு மேற்பூசுந் தயிலம் | ... 201 |
| 177 பிள்ளைபெற மாட்டாதவர்க்கு | ... 201 |
| 178 பிள்ளை கீழ்விழ வித்தை | ... 202 |
| 179 கற்றாழை நாற்றந்தீரக் கூட்டு | ... 202 |
| 180 தலைத் பேனுக்கு மாரணம் | ... 202 |
| 181 முப்பூ சிறப்பு | ... 203 |
| 182 நூற்றெருகுப்பு | ... 203 |
| 183 வயித்தியருக்குப் புத்தி கூறல் | ... 204 |
| 184 நோயாளிகட்குப் புத்தி கூறல் | ... 204 |

உ

கடவுள் துணை

புலிப்பாணி முனிவர் அருளிச்செய்த

# வயித்தியம் - ருா

## மூலமும் - உரையும்

(கைபாக செய்பாக மர்மங்களுடன்)

———*———

### தெய்வவணக்கம்

### காப்பு

எண்சீரடியாசிரிய விருத்தம்

அண்டரண்ட மாகிநின்ற வரனே காப்பு
ஆனந்த மாகிநின்ற உமையாள் காப்பு
குண்டமெனுங் குண்டலியின் குறியே காப்பு
குமரகுரு வேல்முருகர் பாதங் காப்பு
புண்டரிக மானதிரு மாலுங் காப்பு
புகழ்பிரமன் முதற்குலிச னவர் காப்பு
சண்டமெனு மாருதம்போல் வைத்தி யத்தில்
சாற்றுகிறேன் போகரிட பாதங் காப்பே.

(பொ-ரை) நான் சொல்லும் இவ்வயித்தியநூலை யாதொரு இடையூறும் வாராமல் காக்கவல்லவர்கள், சர்வேஸ்வரன், உமாதேவி, விக்நவிநாயகர், முருகர், விஷ்ணு, பிரமன், வைரவன் (அன்றி இந்திரன்) பஞ்சமூர்த்திகள், என்னுடைய ஆசிரியராகிய போகமுனிவர் முதலியோராவர். எ-று.

# நூல்

## 1. சுரக்குளிகை. (பா-4.)

காப்பாகச் சுரக்குளிகை சொல்லக் கேளு கருவான கௌரியது வராக னைந்து, சேப்பாகமிளகதுவு மதிலே பாதி திறமான வுழுந்ததுவு மிதுநே ரப்பா, வேப்பாகவிரு சரக்குங் கல்வத் திட்டு விதமாக எருக்கம்பால் தன்னா லாட்டிப், பாப்பாகக் கௌரிக்குக் கவசங்கட்டிப் பாங் காக ரவிமுகத்தில் வைத்திடாயே. (1)

வைத்தவுட னெடுத்துவந்து துணிமேற் சுற்றி வகை யாக வெள்ளாவி தன்னில் வைத்துக், கைத்தவுடனெடுத் துப்பின் கவசம் வாங்கிக் கனமாக அமுரியினால் கழுவிட் போட்டுச், செத்தவுடன் ரவிதனிலே கடிகை வைத்துச் செயலான கல்வத்தி லிட்டுநீயும், உய்த்தவுடன் பாச்சாலை வாட்டித் தண்ணீ ருத்தமனே நாற்சாம மறைத்துத்தீரே

தீரேநீ குளிகையது சிறுபயறு போலே திறமாக வுண்டைசெய்து நிழ லுலர்த்திச், சேரேநீ சிமிழ்தனிலே யடைத்துக்கொண்டு செகத்திலுள்ள மனிதருக்குச் சுரத் துக் கெல்லாம், பாரேநீ சுக்குடைய கியாழந்தன்னில் பண்பாகக் குளிகை யொன்று கொடுத்துப் பாரு, வீரேநீ மூன்றுபகல் கொடுக்கும் போது விதமான நால்முறை யின் சுரங்கள் போமே. (3)

போமேநீ பத்தியமா யறுநாள் காறு பொங்கமுடன் வெந்நீருஞ் சாதமாகும், ஆமேநீ மற்றொன்று மாகா தப் பா அடைவாக ஏழாநாள் சலத்தைவாரு, நாமேநீ மிளகு குடனே சிறுகீரை வேரும் நலமாகக் கியாழம் வைத்துக் கொள்ளச் சொல்லு, போமேநீ பத்தியந்தான் முரிக்கச் சொல்லிப் புனிதமுடன் மற்றுநா ளெல்லாஞ் சேரே. (4)

(செ-பா.) கௌரிபாஷாணம் $\frac{1}{2}$-பலத்துக்கு மிளகு $\frac{1}{4}$-பலம் உளுந்து $\frac{1}{4}$-பலம் ஆகிய இந்த இரண்டையும் எருக்கம்பாலால் நன்றாயரைத்துக் கவசஞ்செய்து வெயிலில் உலர்த்திக் கொஞ்ச நேரம் பொறுத்து எடுத்து அதின்மேல் கனக்கத் துணிசுற்றி வண்ணான் வெள்ளாவியில் வேகவைத்து எடுத்துக் கவசம்நீக்கிச் சிறு பிள்ளைகள் சிறுநீரால் அலம்பி, கள்ளிக் கொடியாகிய பாச்சான் கொடியை நெருப்பில் வதக்கிப் பிழிந்து அந்தச் சாற்றால் மேற்படி கௌரியை 4-சாமமரைத்துச் சிறுபயறுபோல் மாத்திரைசெய்து நிழலில் உலர்த்திச் சர்வ சுரங்களுக்கும் சுக்குக் கியாழத்தில் வேளைக்கு 1-மாத்திரையாக 3-நாள் 6-வேளை கொடுத்தால் நாலா முறைச்சுரமும் மற்ற சுரங்களும் தீரும். 6 நாள் வரைக்கும் உப்பில்லாத வெந்நீருஞ் சாதமும் ஆகும் மற்றவை ஆகா. 7-வது நாள் ஸ்நானஞ்செய்விக்கவேண்டும் அன்றைக்கே மிளகும், சிறுகீரைவேரும் கியாழம்வைத்துச் சாப்பிடவேண்டும். 8-வது நாள் முதல் எல்லாஞ் சேர்த்துக் கொள்ளலாம்.

நாலாமுறைச்சுரம் என்றது 4-நாளைக்கு 1-முறை வரும் முறைச்சுரத்தை. இப்படி சொன்னாலும் எந்த முறைச்சுரமும் இம் மாத்திரையில் தீரும். முறைச்சுரத்தை வடநூலார் ஆகிக சுரம் என்று சொல்லுவார்கள்.

## 2. ஜன்னிக்கு மேல்பூசத் தைலம் (பா-3)

சேரேநீ சன்னிக்குத் தயிலமொன்று செப்புகிறேன் புலிப்பாணி விளக்கமாக, வீரேநீ வேப்பெண்ணெய் படி தானென்று விதமான கார்த்திகையின் கிழங்குத் தண்ணீர், பாரேநீ படிதண்ணீ ரளந்துவாரு பாங்கான கருநாபி வராகனென்று, கூரேநீ வசம்பதுவும் வராகனைந்து கொடிதான வெள்ளுள்ளி வராகனஞ்சே. (5)

அஞ்சான காயமது வராகனென்று அப்பனே ஓமமது வராகனைந்து, தஞ்சான சதகுப்பை வராகனைந்து

சாதிக்காய் வெண்தோன்றி வராகன் பத்து, மஞ்சான விவையெல்லாங் கிழங்கு நீரில் மைந்தனே மைபோலே யரைத்துப் போட்டுத், தஞ்சான எண்ணெயிலே கலக்கிக் கொண்டு தயவான கடுகுபதந் தன்னில் வாங்கே. (6)

வாங்கியெண்ணெய் மேல்பூசச் சன்னிபோகும் வகையான குடைச்சல்முதல் வாதம் போகும். பாங்கியே யுள்ளுக்குக் கொடுக்கொணுது பாங்காக மஞ்சளிட்டுச் சாணமிட்டுத், தாங்கியே நீரிட்டுக் கழுவிப்போடு தயவாக இந்த எண்ணெ யுறுதிமெத்த, ஏங்கியே யலையாதே யப்பா சொன்னே னிதமாக வைத்தியந்தா னின்னங்கேளே.(7)

(செ-பா) வேப்பெண்ணெய் படி 1, கலப்பைக்கிழங்குச் சாறு படி 1, கருநாபி வரா 1, வசம்பு பலம் ½, உரித்த வெள்ளைப் பூண்டு பலம் ½, பெருங்காயம் வரா 1, ஓமம் பலம் ½, சதகுப்பை பலம் ½, சாதிக்காய் பலம் ½, வெள்ளைக் கலப்பைக்கிழங்கு பலம் ½, ஆகிய இவைகளையெல்லாம் ஷை கலப்பைக்கிழங்குச் சாற்ருல் நன்ருயரைத்து எண்ணெய்யில் போட்டு கடுகு திரளக் காய்ச்சி வடித்து மேலுக்குப் பூசிஞல் சந்நி, குடைச்சல், வாதம் இவைகள் குணமாம். கையை மஞ்சள் சாணம் இவைகளிட்டுக் கழுவவும்.

## 3. சூதகவலிக்குச் சோற்றுப்புச் செந்தூரம். (பா-5)

கேளேநீ சூதகத்தின் வலிதான் போகக் கெடியாகச் சொல்லுகிறே னன்ருய்க்கேளு, வீளேநீ போகாம லுப்பைவாங்கி விதமான கரந்தையிடச் சாற்ரு லாட்டி, நாளேநீ காயவிட்டுப் புடத்திற்போட்டு நாயகனே யிம்முறையா யைந்து தீரு, பாளேநீ போகாம லெடுத்துக்கொண்டு பண்பான ஆண்செருப் படியின் சாறே. (8)

சாற்ருலே யைந்துபுடம் போட்டா யாஞற் சார்வாகச் செங்கனீறு போலே யாகும், பார்த்தாலே குடோரி

யது இதற்கொவ்வாது பண்பான சூதகத்தின் வலியே கண்டால், மாற்றுலே எலுமிச்சம் பழச்சாற்றுலே மைந்தனே யகத்தியனுர் குழம்பைக் கேளு, ஏற்றுலே பணவெடைதான் சாற்றிற் சேர்த்து இதமாக வுள்ளுக்குக் கொடுத்திடாயே. (9)

கொடுத்திடவே பேதியது அதிகங்கண்டால் குணமாக வசம்பதனைக் கருக்கிக் கொண்டு, அடுத்திடவோர் படிசலந்தான் கூடவார்த்து அடைவாக எட்டொன்றுய்க் குறுக்கிக்கொண்டு, கடுத்துடனே கொடுத்துவிடு பேதி நிற்குங் கருவாகப் பத்தியமாய்க் காரு காரு, சடுத்தமில்லைப் பச்சரிசி பயற்றினேடு சார்வாகப் பத்தியந்தா னுப்பாகாதே. (10)

ஆகாது மற்றென்று மாகாதப்பா அடைவாக மற்றுநாள் மருந்தைக் கேளு, சாகாத வெள்ளுள்ளித் தயிலம் வாங்கிச் சாதகமாய்த் துட்டெடைதா னென்றில்வார்த்து, நோகாது முன்சொன்ன வுப்பைமைந்தா நோய்திர வராகனென்று பொடித்துப்போட்டுப், போகாத சூதகமாம் வலிதான் தீரப் புகட்டிவிடு தயிலமதைக் கொடுத்திடாயே. (11)

கொடுத்திடுவா யிந்தமுறை நாண்மூன்றப்பா குணமாகப் பத்தியமாய்க் காக்கச்சொல்லு, அடுத்திடுவாய் பச்சரிசி பருப்பினேடு அடைவாகப் புனற்பாகமாகக் காய்ச்சிச், சடுத்தமில்லை கொடுத்துவிடு உப்பாகாது சார்பாக வைந்தாநாள் தலையை மூழ்கு, நடுத்திடுவா யுப்பதும் வறுத்துக் கூட்டு நலமாக மற்றுநா ளெல்லா மாமே.

**(செ-பா.) போதுமான வரைக்கும் சோற்றுப்பை கொட்டைக் கரந்தைச்சாற்றல் நன்றுயரைத்துப்பில்லைதட்டி உலர்த்திப்பெரும் புடம் போடவேண்டும். இப்படி 5-புடம்போட்டு**

அதை மறுபடியும் சிறுசெருப்படியின் சாற்றால் 5-புடம்போட்டால் செங்கல் நிறமாகச் செந்தூரமாகும். குன்மகுடோரி இதற்கொப்பாகாது. பெண்களுக்குச் சூதகத்தினல் வயிற்றுவலி வந்தால் 1-நாளைக்கு அகத்தியர் குழம்பில் 1-பணவெடை எலுமிச்சம்பழச் சாற்றிற் கொடுக்க வேண்டும். பேதி அதிகரித்தால் வசம்பைச் சாம்பலாக்கிக் கியாழம் செய்து கொடுக்கப் பேதி நிற்கும். அன்றைக்குப் பச்சரிசியும் பச்சைப்பயறும் சேர்த்து உப்பில்லாமற் காய்ச்சியகஞ்சி கொடுக்கவேண்டும். வெருென்றுமாகாது. மறுநாள் காலையில் வெள்ளைப்பூண்டு தயிலம் 1-காசெடையில் ஷை உப்புசெந்தூரம் 1-வரா, பொடித்துப்போட்டுக் கொடுக்கவேண்டும். இவ்விதம் 3-நாள் கொடுத்து உப்பில்லாமல் முன் சொன்ன கஞ்சிகொடுத்து 5-வதுநாள் ஸ்நானஞ் செய்து அன்று உப்பு வறுத்தும் புளி சுட்டும் சேர்த்து, மறுநாள் முதல் எல்லாம் சேர்க்கலாம் இதனல் சூதகவயிற்றுவலி நீங்கும்.

### 4. பெரும்பாட்டுக்குச் சாறு. (பா-1.)

ஆமேநீ பெரும்பாடு வந்தபேர்க்கு அடைவாக நாவல்பட்டை யெருமை மோரில், தாமேநீ துவைத்திடித்துப் பிழிந்துகொண்டு தயவாகச் சந்தனந்தான் வராகனெந்து, நாமேதான் புளித்தமோர் தனிற் கலக்கி நாயகனே கொடுத்துவிடு நாண்மூன் றப்பா, வீமேநீ பெரும்பாடு எங்கேபோச்சு விதமாகப் பத்தியந்தா னில்லை தானே. (13)

(செ-பா.) நாவற்பட்டடையை புளித்த எருமைமோர் விட்டிடித்துப் பிழிந்து ஆழாக்கிருக்க எடுத்து அதில் நல்ல சந்தனம் பலம்-$\frac{1}{2}$ கலந்து 3-நாள் காலையில் மாத்திரம் கொடுத்தால் மேற்படி பெரும்பாடு குணமாம் பத்தியமில்லை.

### 5. குன்மம் ஆறுக்கும் உப்பு. (பா-3.)

தானேநீ குன்மவகை யாறுந் தீரத் தயவாக வுப்பொன்று சொல்லக் கேளு, மானேநீ யுப்பதுவும் படிதா

ளென்று மைந்தனே எருமைமோர் படிதாளென்று, வா
னேநீ வரிக்குமட்டிச் சாறு நாழி வகையான இந்துப்பு
வெடியுப்போடு, தேனேநீ சவுட்டுப்பு விளையலுப்பு தெளி
வாக வகைவகைக்கு வராக ளென்றே. (14)

ஒன்ருக விவையெடுத்துப் பாண்டத் திட்டு உத்த
மனே மோருடனே சாறும் விட்டுப், பன்ருக அக்கினியி
லெரிக்கும்போது பதரும லுப்பதுசர்க்கரைபோலாகுங்,
குன்ருகப் பாண்டத்தி லெடுத்து லர்த்திக் குணமாக வுத
யாதி யன்ன நீரில், நன்ருக விராகனெடை யுப்பி ரண்டு
நலமாகத் தான்போட்டுக் கொடுத்தி டாயே. (15)

கொடுத்திடுவாய் மண்டலந்தா னிந்த வீதங் குண
மாக அவரவர்க்கு நாள்தான் தள்ளு, தொடுத்திடுவாய்
வாயுவென்ற கட்டிபோகுந் தொந்திப்புச் சோகைபோம்
பொருமற் றீறும், படுத்திடுவாய் கவிகை யொடு கிரிச்ச
ரங்கள் பாழான கெண்டை முதற் பறந்து போகுங், கடுத்
திடுவாய் அகுவையென்ற கட்டி போகுங் கடலான உப்
புடைய திறந்தான் காணே. (16)

(செ-பா.)சோற்றுப்பு படி-1, எருமைமோர் படி-1, தும்மட்
டிக் காய்ச் சாறு படி-1,இந்துப்பு, வெடியுப்பு, த்வுட்டுப்பு, விளைய
லுப்பு இவைவகைக்கு வரா-1, ஷை சாறு, மோர் இவற்றைக்கலந்
து 1-பாண்டத்திலூற்றி அதில் உப்புகளைப் பொடித்துப்போட்டு
அடுப்பி லிட்டுச் சிறிதீயாய் எரித்தால் சர்க்கரைபோல் வரண்டு
வரும் பதத்தில் எடுத்து உலர்த்திக்கொண்டு 2-வரா. உப்பை
நீராகாரத்தில் கலந்து காலையில் மாத்திரம் 1-மண்டலம் கொண்
டால் குன்மம்-6 வாயு கட்டிகள், சோகை, வயிற்றுப்பொருமல்,
கவிகை, கிரிச்சரங்கள், கெண்டை, அரையாப்புக்கட்டி இவை
கள் குணமாம்.

இது பேதியாகிறதாகையாலும் 1-மண்டலம் அளவுசொல்
லப் பட்டிருக்கிறதாகையாலும் 2-வரா சாப்பிடக்கூடாது. 1-

மண்டலமும் வரிசையாகச் சாப்பிடக்கூடாது, 1-முறைக்கு 3-நாள் 5நாளாக விட்டுவிட்டு 1-மண்டலம் சாப்பிடவேண்டும். ½-வரா சாபிட்டால், சரீரம் கெடாமல் நோய் நீங்கும்.

## 6. நீரடைப்புக்கு நீர். (பா-1.)

காணேநீ நீர்டைப்பு கண்டபேர்க்குக் கனிவாக வாழையிடக் கிழங்கைத் தோண்டி, ஊனேநீ மற்றுநாட் பார்க்கும் போது உத்தமனே வாழையுள்ளே தண்ணீர் நிற்கும், வீணேநீ போகாமற் கிழங்குத் தண்ணீர் விதமாக அறைப்படிதா னெடுத்து வந்து, பூணேநீ வெடியுப்பு விராகன் ரண்டு போட்டதிலே கொடுக்கநீர்க் கட்டுபோமே.

(செ-பா) மரம் வெட்டிவிட்டு அடியிலிருக்கிற வாழைக்கிழங்கைப் பள்ளமாகத் தோண்டி மறுநாள் பார்த்தால் சலமிருக்கும் அந்த நீர்படி ½-யில் வெடியுப்பு 2-வரா, போட்டுக் கரைந்தவுடன் கொடுக்க நீர்க்கட்டுகுணமாம்.

இது ஜீவரட்சாமிர்தத்தில், "லவணவாழைக் குழிநீர்" என்று எழுதப்பட்டிருக்கிறது.

## 7. மேத்தலை வியாதிக்கெண்ணெய். (பா-2.)

போமேதான் மெத்தலையின் வியாதி தீரப் பொங்கமுடனல்லெண்ணெய் படிதா னென்று, தாமேதான் பசுவின்பால் படிதா னென்று தயவாகக் கம்பஞ் சோற்றினீரை விட்டு, வேமேதா னுதண்டை யிலையைத் தானும் விதமாகத் தான்துவைத்துச் சாறு நாழி, வாமேதான் மிளகதுவும் பலந்தான்ரண்டு வளமாகத் தானுடைத்துப் போட்டிடாயே, (18)

போட்டதொரு மிளகதுவு மிதக்கு மட்டும் பொங்கமுடனக்கினியி லெரிக்க வேண்டும், நாட்டவே யிறக்கி வைத்து வடித்துக் கொண்டு நலமான மிளகதனை யரைத்

துக் கூட்டு, ஊட்டவே யுதயாதி துடங்குமுன்னே உத்த மனே தலைமுழுகி யமுதுகொள்ளு, காட்டவே மண்டை யிடி கண்ணுக் குத்து காலமே முழுகிவர வோடிப் போமே. (19)

(செ-பா.)நல்லெண்ணெய் படி-1, பசும்பால் படி-1,கம்பஞ் சோற்றுச் சலத்தைவிட்டு ஆதண்டையிலையை யிடித்துப் பிழிந்த சாறு படி-1, எல்லாங்கலந்து மிளகு பலம்-2.உடைத்துப்போட்டு மிளகு மிதக்கும் பருவத்தில் காய்ச்சி வடித்து அம்மிளகை யரைத்து அதிற் கலந்து அதிகாலையில் ஸ்நானஞ்செய்துவந்தால் மண்டையிடி,கண்குற்றல் இவை குணமாம்.

மெத்தலைவியாதிஎன்பது மேற்றலைவியாதி என்று இருந் தால்சரி. மேற்றலை-மண்டை என்றுபொருள்படும். வழக்கத்தில் மெத்தலை என்று வழங்கிவருகின்றது.

### 8. அண்ட வியாதிக்கு எண்ணெய் (பா-3.)

போமப்பா அண்டத்தின் வியாதி வந்தாற் பொங்க முட னெண்ணெயொன்று சொல்லக்கேளு, ஆமப்பா போகரிட கடாட்சத் தாலே அடைவாகப் புலிப்பாணி முறையைச் சொல்வேன், தாமப்பா விளக்கெண்ணெய் படிதானென்று தயவான மிளகுதக் காளிச் சாறு, வாமப் பா படியொன்று அளந்து வாருவளமான வெந்தயந்தான் பலமும் ரண்டே. (20)

ரண்டான வெந்தயத்தைச் சும்மா போடு நினைவுகள் தான் பிசகாம லெரிப்பாய் நீயே, உண்டான வெந்தயந் தான் மொருமொருப் பானல் உத்தமனே கடுகோடு ஊற் றிக் கொள்ளு, பண்டான எண்ணெயைத் தான் கொள்ள வென்றால் பாங்காகப் படியரைக்கால் கொள்ளச்சொல் லு, திண்டான கற்கமது கரண்டி கொள்ளத் திறமாக மூன்றுநாள் முறையாய்க் கொள்ளே. (21)

கொள்ளவே பத்தியந்தா ஞென்று மகா கொடியதோ ராறுநாட் காரு காரு, தெள்ளவே யுப்பாகா புளியுமாகா தெள்ளிமையாய்ச் சாதமன்றிச் சுவைகளாகா, மெள்ளவே பத்தியந்தா னேழா நாளில் மேன்மையாய்த் தான்முரித்து எல்லாங் கொள்ளு, உள்ளவே அண்டமென்ற வியாதி போகும் உத்தமனே நாட்சென்றால் போகாதென்னே. (22)

(செ-பா.) விளக்கெண்ணெய் படி-1, மிளகுதக்காளிச் சாறு படி 1, (கசப்புதக்காளி) வெந்தயம் பலம் 2, பாண்டத்தில் ஊற்றி வெந்தயத்தைச் சும்மாபோட்டு வெந்தயம் மொறு மொறுப்பாகிற வரைக்கும் எரித்துக் கடுகோடு இருத்துக் கொண்டு காலையில் மாத்திரம் அரைக்காற்படி வீதங்கொண்டு உடனே 1-கரண்டி கற்கமுமாக 3-நாள் குடித்து உப்பில்லாப் பத்தியமாக 6-நாளிருந்தால் ஏழாவது நாள் ஸ்நானஞ்செய்து எல்லாப் பதார்த்தங்களும் சேர்க்கவும். அண்டவியாதி தீரும் நாட்பட்டதானல் தீராது.

அரைக்கால்படி இக்காலத்திற்குப் பொருந்தாது. குறைந்த அளவு கொடுக்கவேண்டும்.

## 9. ஒருதலைநோய்க்கு நசியம். (பா-1.)

போகுமப்பா ஒருதலையின் வியாதி ரோகம் பொங்கமுடன் சமுத்திராப் பழத்தை வாங்கி, ஆகுமப்பா பெருங்காயம் நேராய்ச் சேர்த்து அடைவான பெண்முலைப்பாலதனை லாட்டி, ஏகுமப்பா குளிகைபோல் செய்துகொண்டு இதமான பெண்முலைப்பால் தனிலுரைத்து, வேகுமப்பா நாசியிலே விட்டபோது விரண்டோடி யகன்றுவிடும் வீரந் தானே. (23)

(செ-பா.) சவுரிப்பழச் சதையும், பெருங்காயமும் சமமாகச் சேர்த்து முலைப்பாலினலரைத்துக் குளிகைசெய்துகொண்டு

அதை முலைப்பாலினாலுரைத்து நாசியில் நசியஞ்செய்தால் ஒரு தலைநோய் குணமாம்.

## 10. பீநசத்துக்கு நசியம். (பா-1)

வீரந்தா னின்னமொரு வுபாயங்கேளு விதமான மாதளம்பூ அருக்கம் பூவுங், காரந்தான் குங்குமப்பூ மூன்று நேராய்க் கல்வத்தி லாட்டியதை முலைப்பால் விட்டுச், சோரந்தா னில்லாமல் நாசியிலே பிழியச் சோரி யென்ற பீநசந்தா னேழுந் தீரும், பாரந்தா னில்லையப்பா சூட்சமாகப் பாடினேன் புலிப்பாணி விளங்கத்தானே. ()

(செ-பா.) மாதளம்பூ, எருக்கம்பூ, குங்குமப்பூ, இவை சமமாக அரைத்து முலைப்பாலில் கலந்து நசியஞ்செய்தால் ரத்த பீநசமுதல் 7-ம் தீரும்.

## 11. காதுவலிக்கு எண்ணெய். (பா-2.)

விளங்கவே காதிலுள்ள நோய்தனக்கு விதமான மரமஞ்சள் வெள்ளைப் பூண்டு, அளங்கவே சுக்கோடு வலம்புரியின் காயும் அடைவான கரியசீ ரகத்திேனாடு, முளங்கவே நண்டிறைச்சி நத்தையோடு முசுறுமுட்டை கருங்கோழி முட்டையோடு, புளங்கவே யிவையெல்லாம் விராகனென்று புதுமையிலைக் கள்ளிபுனன் முருங்கைச் சாறே. (25)

சாறென்ன வகைக்குவகை படிதான் வீசம் சார்வான பசுவினெய் படிதான் காலு, வாறென்ன வேப்பெண்ணெய் படிதான் காலு வளமாக விட்டெரித்துக் காதிலூற்றிப், பாறென்ன பஞ்சுகொண்டு மூடச்சொல்லு பாங்காக ஈராறு நாள்தான் வாரு, கூறென்ன காதிலுள்ள வியாதி யெல்லாங் குணமாகும் போகரிட கடாட்சந் தானே. (26)

(செ-பா.) மரமஞ்சள், வெள்ளைப்பூண்டு, சுக்கு, வலம்புரிக் காய், கருஞ்சீரகம், நண்டிறைச்சி, நத்தைச்சதை, முசுறுமுட்டை கருங்கோழி முட்டை இவைகள் வகைக்கு வரா-1, இவைகளைச் சதைத்து இலைக்கள்ளிச்சாறு புனல் முருங்கைச்சாறு இவை வகைக்குப் படிவீசம், பசுநெய் படி-$\frac{1}{4}$, வேப்பெண்ணெய் படி-$\frac{1}{4}$, இவைகளை ஒன்றாக்கி அதில் போட்டு எரித்து வடித்து 12-நாள் காதில் விட்டுப் பஞ்சுவைத்தால் காதிலுள்ள வியாதிகளெல்லாம் குணமாகும்.

## 12. கண்டபடலந் தீர ரத்திஞதி குளிகை. (பா-3.)

தானென்ற கண்ணிலப்பா படலந் தீரத் தயவான மிளகுடனே சுக்கு கூட்டிக், கானென்ற திப்பிலியுஞ் சங்குங் கூடக் கரியமால் தாரமுடன் புங்கம் வித்தும் வேனென்ற அதிமதுரந் துத்தத் தோடு விதமான பீதரோ கணியுங் கூடப், பானன்ற மனோசிலையு மேனக்கொம்பும் பண்பான ஆமையிட வோடுங் கூட்டே. (27)

கூட்டப்பா புலிநகமும் வெள்ளி யோடு கொடிதான சேவலினெஞ் செலும்புங் கூட்டு, மூட்டப்பா இந்துப்பு இவையெல்லாந்தான் முனையாக ஒரெடையாய் நிறுத்துக் கொண்டு, ஆட்டப்பா கல்வத்தில் நந்தி பத்திரி அடைவாகச் சாறுவிட்டு ஒருநா ளாட்டிச், சூட்டப்பா அதனிடபூச் சாறு தானே சொல்லடா ஒருநாள்தா னட்டித் தீரே. (28)

தீர்த்தெடுத்துக் கயிறுபோ லுருட்டிக் கொண்டு திறமாக நிழலுலர்த்திப் பதனம்பண்ணு, பார்த்தெடுத்துத் தேனதிலே யுறைத்துப் போடப் படலமென்ற வகைகளெல்லாம் பறந்துபோகுஞ், சார்த்தெடுத்து முலைப்பாலி லுறைத்துப் போடச் சார்வாக வீராறு நாளுக் குள்ளே, ஈர்த்தெடுத்த ரத்ஞதி குளிகை யென்பார் இருவிழியின் படலமெல்லாம் வாங்குந் தானே. (29)

(செ-பா.) மிளகு, சுக்கு, திப்பிலி, ஊதுசங்கு, அரிதாரம், புங்கம் விரைப்பருப்பு, அதிமதுரம், பால்துத்தம், பீதரோகணி மனோ சிலை, பன்றிக்கொம்பு, ஆமை ஓடு புலி நகம், வெள்ளி, சாவல் நெஞ்சு எலும்பு, இந்துப்பு இவைகளைச் சுத்திசெய்து சம எடையாக எடுத்து நந்தியாவட்டை இலைச்சாற்றால் 1-நாள் அரைத்து மறுபடியும் 1நாள் ஷை பூச்சாற்றாலரைத்து நீட்டு வாட்டமாக கயிறுபோல் உருட்டி நிழலில் உலர்த்தி வைத்துக் கொண்டு, தேனில் உறைத்துக் கண்களுக்குப் போட்டால் படலவகைகளெல்லாம் நீங்கும், முலைப்பாலில் உறைத்துப் போட்டால் 12-நாள்களுக்குள்ளாகஇரண்டு கண்களின் படலங்களெல்லாம் நீங்கும்.

இந்தப் புலிப்பாணி முனிவர் இம்மாத்திரைக்கு ரத்னகிரி குளிகை'' என்று பேரிட்டார். அது பொருந்தாது. ஏனெனில், இது ரத்தினங்கள் சேராத் மாத்திரையாகையால். ஆயினும் ரத்தினங்கள் சேர்ந்த மாத்திரையின் குணத்தை இதுசெய்யும் என்கிற அபிப்பிராயத்தால் இப்பேர் இட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது.

## 13. மாலைக்கண்ணுக்கு மை. (பா-2).

தானென்ற மாலையுட கண்ணுக் கப்பா தயவான
சுழல்வண்டு சுட்டசாம்பல், வேனென்ற கல்வத்தில்போட்
டுக்கொண்டு விதமாக எள்ளெண்ணெய் நீர்ப்பூண்டு
சாறும், பானென்ற பருத்தியிலைச் சாறுங் கூட்டிப் பாங்
கான வெள்ளுள்ளி மிளகுபத்து, வானென்ற மைபோலே
ஆட்டிக் கொண்டு வளமாக அந்திசந்தி கண்ணிற்
போடே. (30)

போடப்பா நாள்மூன்று போட்ட போது பொங்க
முடன் மாலையது வகன்று போச்சு, வீளப்பா விளக்கெண்
ணெய் வார வீதம் விதமாக நாலைந்து முழுகும் போது,
சாட்ப்பா அருந்ததி கண்ணில் தோற்றுஞ் சார்வாகக்

கீழ்ப்பார்வை கண்ணிற் காணும், நாடப்பா போகரிட கடாட்சத் தாலே நலமாகப் புலிப்பாணி பாடி னேனே.

(செ-பா.) சுழல் வண்டைச் சுட்ட சாம்பலைக் கல்வத்தி லூட்டு உரித்த வெள்ளைப்பூண்டு 10, மிளகு- 10, கூடப்போட்டு நல்லெண்ணெய் நீர்முள்ளிச்சாறு, பருத்தியிலைச்சாறு இவை களைக் கலந்துகொண்டு அதனால் மைபோலரைத்து வைத்துக் கொண்டு காலை மாலை 3-நாள் கண்ணிற்போட்டால் மாலைக்கண் சுகமாம், வாரத்திற் கொருமுறையாக விளக்கெண்ணெய்யால் 5-ஸ்நானஞ் செய்யவேண்டும்.

சுழல்வண்டு சுட்ட சாம்பலுக்கு எடை சொல்லாமையால் மிளகும் பூண்டுஞ்சேர்ந்த எடைகொள்ளவேண்டும்.

## 14. கண்ணில் நீர்வடிதலுக்குப் புற்றும் வேதும். (பா-3.)

பாடினேன் கண்ணில்நீர் வடிந்த தானால் பரிவாக வரட்பூலா இலையோர் குத்து, நாடினேன் கருவேல னிலை யோர் குத்து நலமான தான்றிக்காய் மாசிக் காயுஞ் சூடி னேன் கடுக்காயுங் காசுக் கட்டி சுகமாக வகைவகைக்கு விராக னென்று, கூடினே னிவையெல்லாம் பொடித்துப் போட்டுக் குணமாக வேகவைத்துப் பிழிந்தி டாயே. (32)

பிழிந்திடுவாய் கரண்டியிலே வேண மட்டும் புனித முடன் அபினியது விராகன் கால்தான், செழிந்திடுவாய் சீனமது பொரித்துக்கொண்டு செயலான பொரியதுவும் விராகன் கால்தான், குழிந்திடுவா யடுப்பிலே காயும் போது கூசாமலரவிரையின் குச்சியாலே, சுழிந்திடுவாய் மைபோலே கடைவா யப்பா சுகமாகக் கண்ணைச்சுற்றி வழித்துப் போடே. (33)

போடுமுன்னே புளியிலையை வேகவைத்துப் பொங்க முடன் கண்ணையுநீ கழுவிப்போட்டு, ஆடுமுன்னே இந்த

இலை வேதுவைத்து அடைவாகப் போட்டவுடன் கண்ணீர் நிற்கும், நாடுமுன்னே சிவப்பெல்லாம் வாங்கிப் போகும் நலமான அழுகண்ணுந் தீரும்பாரு, கூடுமுன்னே இன்னமொரு வைத்தியந்தான் குணமாகச் சொல்லுகிறேன் கேளு கேளே. (34)

(செ-பா.) வரட்பூலா இலை ஒருபிடி, கரிவேலன் இலை ஒருபிடி தான்றிக்காய், மாசிக்காய், கடுக்காய், காசுகட்டி, வகைக்கு வரா-1 இவைகளையெல்லாம்சூரணித்து இலைகளைக்குறுக அரிந்து எல்லாம் ஒன்ருய்ச் சேர்த்து வேகவைத்து வேண்டியவரைக்கும் ஒரு கரண்டியில் பிழிந்து அதில் $\frac{1}{4}$-வரா, அபினி, பொரித்த படிகாரம் $\frac{1}{4}$-வரா சேர்த்துகாயவைத்துக்காயும்போது ஆவாரங் குச்சியால் நன்ருய்க் கிண்டி எடுத்துக் கண்ணைச்சுற்றிப் போட வேண்டும். இந்தப் பற்றுபோடுவதற்குமுன் புளியிலையைச் சலத்திற்போட்டு வேகவைத்துக் கண்களைக் கழுவவேண்டும். அல்லாமல் அந்தப் புளியிலை வேகவைத்த ஆவியையும் காட்டலாம், இப்படிசெய்து பிறகு பற்றைப்போட்டால் கண்ணில் நீர் வடிதல் நிற்கும், கண்சிவத்தலும், அழுகண்ணும் சுகமாம்.

## 15. கண்வலிக்கு நீர். (பா-2.)

கேளப்பா கண்ணுவலி வந்த பேர்க்குக் கெடியான துளசிபுண்ணாக் கிலையி னேடு, சூளப்பா புளியினிலை இந்த மூன்றுஞ் சுகமாகத் தட்டியதைத் துணியில் வைத்து, வீளப்பா வில்லையடா கோளங்கட்டி விதமென்ன தூளதுவும் விராகன் பத்து, பாளப்பா பழம்புளியைக் கரைத்து நீயும் பாங்கான கண்ணுக்குப் பிழிந்து பாரே. (35)

பாரேநீ பொட்டணத்தைப் பிடிக்கச் சொல்லு பண்பாக நாலுதர மொருநாள் வாரு, சேரேநீ வார்த்தவுடன் வலிதா னிற்குஞ் சிறப்பாக நாண்மூன்று இந்தப் பாகம், ஆரேநீ யைந்தாநாள் சொல்லக்கேளு ஆவிரம்பூ தலையி

விட்டு முழுகச் சொல்லு, கூரேநீ கண்ணுவலி யெங்கே போச்சு குருவான போகரிட கடாட்சந்தானே. (36)

(செ-பா.) துளசி பிண்ணாக்கிலை, புளியனிலை, இந்த மூன்றும் சேர்த்து ஒருபலம் எடுத்துச் சதைத்து ஒருதுணியில் மூட்டை கட்டி வைத்துக்கொண்டு, ஒரு பாத்திரத்தில் பழம்புளியைக் கரைத்துவைத்து அந்த முட்டையை அந்தப் புளிசலத்தில் நனைத்து 1-நாளைக்கு 4-முறையாக 3-நாள்வார்த்து ஐந்தாவது நாளில் ஆவாரம்பூ தேய்த்து ஸ்நானஞ்செய்யவேண்டும் கண் வலிகள் குணமாகும்.

## 16. தந்தவியாதிக்குப் போடி (பா-2)

தானேதான் தந்தமென்ற வியாதிக்கப்பா தயவான அயப்பொடியும் பலந்தா னென்று, வேனேதான் பீங்கா னில் போட்டுக் கொண்டு விதமாகக் கடுக்காயுந் தான் றிக்காயும், பானேதான் மாசக்காய் சீனகாரம் பண்பான கொடுக்காயின் புளியுங் கூட, கானேதான் துருசுடனே காசுக்கட்டி கணக்காக வகைவகைக்கு விராகன் மூன் றே. (37)

மூன்றாக விவையெல்லாம் பொடித்துப் போட்டு முனையெலுமிச் சம்பழத்தின் சாறு விட்டு, நான்றாக வற்று மட்டும் ரவியில் வைத்து நலமாக அம்மியிலே யரைத்தி டப்பா, பான்றாகப் பழச்சாற்றில் மைபோ லாட்டிப் பண் பாகப் பொடியாக்கி வைத்துக் கொண்டு, கூன்றாக வநு தினமும் விளக்கி வாநீ கொடிதான பல்ரோக மோடிப் போமே. (38)

(செ-பா.) அயத்தூள் பலம்-1, பீங்கானில்போட்டுக் கடுக் காய், தான்றிக்காய், மாசிக்காய், படிகாரம், கொடுக்காய்ப்புளி, மயில்துத்தம், காசுகட்டி, இவைகள் வகைக்கு வரா-3, எடுத்து சூரணஞ்செய்து அந்தப் பீங்கானில் போட்டு தளும்ப எலுமிச்

சம்பழச்சாறுவிட்டு அதுவற்றுகிறவரைக்கும் வெயிலில் வைத்து கல்வத்திலிட்டு பழச்சாற்றால் மைபோலரைத்துச் சூரணித்து வைத்துக்கொண்டு தினமும் பல்துலக்கிக்கொண்டு வந்தால் பல்நோய் நீங்கும்.

## 17. பல்புழு சாவ வேர் பிடுங்கல். (பா-2)

போமேநீ யின்னமொரு விவரஞ் சொல்வேன் பொ ல்லாத புழுவிருக்கும் பல்லுக் கப்பா, தாமேநீ கன்னியிட நூலை வாங்கித் தயவாக நூலதனைச் சொல்லக் கேளு, ஆமேநீ கீழ்க்காயி னெல்லி வேரை அடைவாகக் காப் பிட்டு ஆதிவாரம், வாமேநீ பச்சரிசிக் கருப்புக் கட்டி வைத்து மசி நசியென்று நூறு கூறே. (39)

கூறேநீ நூற்றெட்டு தரமுஞ்சொல்லிக் கூறடா அவன் பேரைச் சொல்லி மைந்தா, பாரேநீ புழுசெத்துத் தீர வென்று பண்பாக வேரதனை யருமற் றானுஞ் சேரேநீ பிடுங்கிவிடு மறுநாட் குள்ளே செத்ததடா புழுவங்கே சேரத்தானும், வீரேநீ போகரிட கடாட்சத்தாலே வித மாக வின்னமொன்று சொல்லக்கேளே. (40)

(செ.பா.) கன்னிகை நூற்றநூலைஎடுத்துவைத்துக்கொண்டு அந்த நூலால் ஞாயிற்றுக்கிழமையில் கீழாநெல்லிச்செடிக்குக் காப்புக்கட்டி, பச்சரிசி, வெல்லம் வைத்து, மசி நசி என்று-108 தரம் ஜபித்து அவன்பேரைச்சொல்லிப் புழுச்செத்துதீர என்று சொல்லி வேர் அருமல்பிடுங்கினால் மறுநாளைக்குள்ளாக புழு செத்துப்போய்விடும். கன்னிநூல் என்றது இங்கு கன்னிப் பெண்ணால் நூற்றநூல்.

## 18. வாய்ப்புண்ணுக்கு எண்ணெய். (பா-5)

கேளப்பா வாயெல்லாம் புண்ணே வந்தால் கெணித முட னெண்ணெயொன்று சொல்லக் கேளு, நாளப்பா விளக்கெண்ணெய் படிதா னென்று நலமான சங்கஞ்சார்

படிதானென்று, வீளப்பா பாச்சானை வாட்டித் தண்ணீர் விதமாகப் படியொன்று அளந்து வாரு, சூளப்பா நீர்ப் பூண்டுச் சாறு நாழி சுருக்கான கஸ்தூரி மஞ்சள் தானே.

தானான கரியசீரகத்தினோடு தயவாக வகைவகைக்கு விராகன் மூன்று, கோனான பொடிபண்ணியிதனிற் போட்டுக் கொடிதான அக்கினியி லெரித்து வாங்கிப் பானை எண்ணெயைத்தான் பதத்தில் பார்த்துப் பண்பாகத் தான் வடித்து எடுத்துக் கொண்டு, நானான படியரைக் கால் வீதங் கொள்ளு நாண்மூன்று தாண்கொள்ள ரணங் கள் போமே. (42)

போமேநீ வாய்ப்புண்ணும் வெள்ளை போகும் பொங் கமுடன் தடிப்புவகை சிரங்குந் தீரும், தாமேநீ சூலையெ ன்ற கட்டுந் தீரும் தயவாகப் பத்தியந்தா னுறு நாளும், வேமேநீ வெந்நீரு மன்ன மாகும் விதமாக மற்றொன்று மாகாதப்பா, வாமேநீ ஏழாநாள் முழுகும் போது வகை யாகக் கருக்கொன்று சொல்லக்கேளே. (43)

## இதற்குக் கருக்குக் குடிநீர்.

சொல்லுவேன் குதிரையஸ்தி யோமத் தோடு சுருக் கான வூஞ்சனுட பட்டை கூட்டி, வெல்லுவேன் கருக்கிய தைக் கியாழம் வைத்து விதமாக வுள்ளுக்குக் கொள்ளச் சொல்லு, கெல்லுவே னுப்பிட்ட பருப்பின் சாறு கெணித முட னீர்விட்டு அமுது கொள்ளு, மல்லுவேன் மற்றுநாள் புளியைக் கூட்டு மைந்தனே யெட்டுக்கு மாகா தென்னே.

ஆகாது வாழையிலை வாழைக் காயும் அப்பனே யீராறு நாள்தான் தள்ளு, வேகாது வாயுவென்ற பதார்த் தந்தள்ளு விதமான பெண்ணுடைய மாய்கை யாகா, போகாதில் லாவிட்டால் வியாதி யப்பா பொங்கமுடன் தானிருந்தால் பறக்கும் பாரு, நோகாது கிரந்தியெல்லாம்

மகன்று போகும் நோய்தீரும் போகருட கடாட்சந் தானே. (45)

(செ-பா.) விளக்கெண்ணெய் படி-1, சங்கஞ்சாறுபடி-1 பாய்ச்சாலை வாட்டிப்பிழிந்த சாறுபடி-1, நீர்முள்ளிச்சாறு படி 1, இவைகளை ஒன்றாய்க்கலந்து, அதில் கஸ்தூரிமஞ்சள் வாரா-3, கருஞ்சீரகம் வரா 3, இவைகளைச் சூரணித்துப்போட்டு எரித்து மெழுகு பதத்தில் இறக்கிவடிகட்டி வேளைக்கு அரைக்கால்படியாக 3-நாள் சாப்பிட்டால் வாய் ரணங்கள், வெள்ளை, தடிப்பு, சூலை கிரந்தி தீரும். எண்ணை சாப்பிட்ட 3-நாளும், மறுபத்தியம் 3-நாளும் ஆக 6 நாளும் வெந்நீரும் சாதஞ் சாப்பிடவேண்டும். வேறொன்றும் ஆகாது. 7-வதுநாள் ஸ்நானஞ்செய்யவேண்டும். அன்றைக்கு குதிரை எலும்பு, ஓமம், ஊஞ்சற்பட்டை இந்த மூன்றையும் வகைக்குக் கால்பலம் எடுத்துக் கறுக்கிக் கியாழம் வைத்துச் சாப்பிட்டு உப்பிட்ட பருப்பின்சாறும், தண்ணீர் சாதமும் சாப்பிடவேண்டும். மற்றநாள்முதல் புளிசேர்க்கவேண்டும் 1-நாளிலிருந்து 12-நாள் வரைக்கும் வாழையிலை, வாழைக்காய், வாயு பதார்த்தம், பெண்போகம் இவைகள் ஆகா. இப்படியில்லாவிட்டால் நோய்கள் தீரா.

## 19. மேகத்தடிப்புக்கு பச்சிலைச்சாறு. (பா-1)

தானென்ற தடிப்புக்குச் சொல்லக்கேளு தயவான பாச்சாலை வாட்டித் தண்ணீர், பானென்ற படிகால்தான் வடித்துக் கொண்டு பண்பாக நாண்மூன்று கொடுத்த போது, கானென்ற தடிப்பெல்லா மோடிப் போகுங் கனலான புள்ளியென்ற மேகந்தீரும்,கோனென்ற மூன்று கெடுக் கொள்ளும் போது கொடிதாக முன்போல் பத்திய மாய்க் காரே. (46)

(செ-பா.) பாய்ச்சாலை வாட்டிப் பிழிந்த சாறுபடி-$\frac{1}{4}$, காலையில் மாத்திரம் 3-நாள் கொடுத்தால் தடிப்பெல்லாம் தீரும் புள்ளிமேகமும் தீரும். இப்படி 3-முறை சாப்பிடவேண்டும் இது சாப்பிடும் போதும் முன்பத்தியமே இருக்கவேண்டும்.

## 20. அரையாப்புக் கெண்ணெய். (பா-5)

காரடா அரையாப்பு வந்த பேர்க்குக் கருவாக மருந்தொன்று சொல்லக்கேளு, பாரடா கொல்லனுட கொவ்வைமூலம் பண்பாக மேற்றோலை நன்றாய்ப்போக்கி, சேரடா அப்பையுட கோவை மூலஞ் செயலான வகை வகைக்குப்பலந்தான்ரண்டு, கூரடாகொடிவேலிப்பட்டை யப்பா கொடிதாகப் பலமொன்று போடு போடே (47)

போடேநீ நீர்ப்பூண்டு பலந்தான் ரண்டு பொங்கமுட னிதுவெல்லாம் நறுகித் தட்டி, சூடேநீ விளக்கெண்ணெய் படிதான் பாதி சுகமான எள்ளெண்ணெய் படிதான் பாதி நாடேநீ மிருதாரு சிங்கியப்பா நாயகனே விராகன் ரண்டு பொடித்துப் போடு, கூடேநீ யிவையெல்லா மொருமொ ரென்று கூடையிலே யின்ன மொன்று சொல்லக்கேளே.

கேளேநீ சூலைவிடக் கருப்புக்கட்டி கெடியாகப் பலம் ரண்டு சீவிப் போட்டு, வீளேநீ போகாம லிறக்கி வைத்து விதமாகப் பலமறைதான் கொள்ளச் சொல்லி, சூளேநீ எண்ணெயொரு கரண்டி கொள்ளச் சுகமாகு மீராறு வேளையப்பா, கோளேநீ வாராமற் பத்தியத்தைக் கேளு கொடிதாக உப்பிட்ட பருப்பு நெய்யே. (49)

நெய்யப்பா பசுவினெய் வெந்நீராகும் நேராகஅன்ன மப்பா மற்றொன் றாகா, மெய்யான எண்ணெயைத்தான் மேலிற் பூசி மேன்மையா யேழாநாள் நீரை வாரு, வெய் யான புளியுடனே யெல்லாஞ் சேரு விதமாகக் கட்டியது கரைந்து போகுஞ், செய்யான புரைகண்டால் கிழித்து வார்த்துச் செப்புவேன் ரணங்காண்டால் களிம்பைப் போடே. (50)

போடேநீ விளக்கெண்ணெய் முழுகச் செய்வாய் பொங்கமுட னுள்விட்டு நாள்தா னப்பா, நாடேநீ முழுக

ப்பா பத்து நாளும் நலமாக எண்ணெயைத்தான் முழு
கும் போது, கூடேநீ பெண்மாய்கை யாகாதப்பா குண
மாகி மாசமொன்று செல்லு மட்டும், ஆடேநீ அரையா
ப்பு தீர்ந்து போகும் அடைவாகப் போகருட கடாட்சந்
தானே. (51)

(செ.பா.) மேல்தோல் சீவின ஆகாசகருடன் கிழங்கு பலம்-2 மேல்தோல் சீவின கல்கோவைக்கிழங்கு பலம்-2 சித்திரமூல வேர்ப்பட்டை பலம்-1, நீர்முள்ளி சமூலம் பலம்-2, இவைகளை நன்றாய்ச் சதைத்து விளக்கெண்ணெய் படி-½, நல்லெண்ணெய் படி ½-யில் போட்டு அதில் மிருதார்சிங்கி 2 வாரகன் பொடிசெய்து போட்டுக் கடுகுதிரளக் காய்ச்சி அதில் 2-பலம் நல்லவெல்லம் பொடித்துப் போட்டு வடிகட்டாமலிறக்கி வேளைக்கு ½-பலம் கற்கமும் ஒருகரண்டி எண்ணெயுமாக 12-வேளை காலை மாலை 2-வேளையும் சாப்பிட்டு உப்பிட்ட பருப்பு பசுநெய்சேர்த்து வெந்நீருஞ் சாதமும் சாப்பிடவேண்டும். மற்றொன்றுமாகாது. ஏழாவது நாள் காலையில் மேற்படி எண்ணெயை மேலுக்குப்பூசிச் சலம் விடவேண்டும். அன்றுமுதல் புளிமுதல் எல்லாப் பாதர்த்தங்களுஞ் சேர்க்கலாம். இதனால் அரையாப்புக்கட்டி கரைந்துபோகும். ஒருக்கால் புரை உண்டானால் அந்தக் கட்டியைச் சத்திரம்பண்ணிக் களிம்பு போடவேண்டும். பிறகு 1-நாள் விட்டு 1-நாள் விளக்கெண்ணெயால் ஸ்நானஞ் செய்யவேண்டும். அப்பொழுது 1-மாசமாகிற வரைக்கும் பெண்போகங் கூடாது

## 21. சகல ரணக்களுக்கும் களிம்பு. (பா-2)

தானப்பா களிம்பொன்று சொல்லக் கேளு தய
வான லிங்கமுடன் மிருதார் சிங்கி, ஊணப்பா ரசகர்ப்பூ
ரத்திேனாடு உத்தமனே வெள்ளையென்ற குங்கிலியந்தான்,
கோணப்பா கடுக்காயு மாசிக் காயுங் குணமான காசுகட்
டித் தான்றிக் காயும், வாணப்பா ஓரெடையாய்க் கல்வத்
திட்டு வகையாகத் தானரைக்க விவரங் கேளே. (52)

கேளேநீ பசுவினிட வெண்ணெய் போட்டு கேணி தமா யொருசாம மரைத்த பின்பு, சூளேநீ தண்ணீரில் மிதக்க வைத்துச் சுகமாக மற்றுநா ளெடுத்துக்கொண்டு, கோளேநீ சூலையப்பா ரணத்திற் பூசிக்கொடிதான ரணங்க ளெல்லா மாறிப் போகும், வேளேநீ களிம்பதுவுஞ் சுருக்கு மெத்த விதமாக இன்னமொன்று விளம்பக் கேளே.

(செ-பா.) லிங்கம், மிருதார்சிங்கி, ரசகர்ப்பூரம், வெள்ளைக் குங்கிலியம், கடுக்காய், மாசிக்காய், தான்றிக்காய், காசுகட்டி இவைகளைச் சமஎடை நன்றாய்ப் பொடிசெய்து கல்வத்திலிட்டு போதுமான பசுவெண்ணெய் போட்டு 1-சாம மரைத்தபின்பு சலத்தில் மிதக்கவைத்துமற்றுநாள் அவ்வெண்ணெயை எடுத்துக் கொண்டு ரணங்களிற்பூசினுல் கொடுமையான ரணங்களெல்லாம் ஆறிப்போகும்.

## 22. விக்கலுக்குப் புகை. (பா-1.)

விளம்புவேன் விக்கலுக்குச் சொல்லக்கேளு விதமாகச் சந்தனத்தின் கட்டை யோடு, தளம்புவேன் சாம்பிராணி சமனுய்ச் சேர்த்துத் தயவாகப் பொடிபண்ணிக் காகிதத்திற், குளம்புறேன் சுருட்டியதைப் புகை பிடிக்கக் குணமாக விக்கலது தீரும்பாரு, விளம்புறே னின்னமொன்று சொல்லக் கேளு விதமாகக் கலிக்கமொன்று சொல்லுவேனே. (54)

(செ-பா.) சந்தனக்கட்டைத் தூள், சாம்பிராணித் தூள் இந்த இரண்டையுஞ் சமமாக எடுத்துக் காகிதத்திற்குள் வைத்து சுருட்டுபோல் சுருட்டிப் பிடித்தால் விக்கல் குணமாம்.

## 23. அகத்தீசர் கலிக்கம். (பா-2.)

சொல்லுவேன் கிராம்போடு மிளகு சுக்குச் சுகமான துவரையென்ற பருப்புங் கூட்டி, வெல்லுவே னிவையெல்லாம் விராகனென்று விதமாக அகத்தியனூர் குழம்பைக்

கேளு, சொல்லுவேன் விராகனது கால்தான்கூட்டிச் சுக மான மேனிச்சார் தன்னாலாட்டி, மல்லுவேன் வெற்றிலை யின் சாற்ற லாட்டி மைந்தனே கயிறதுபோல் வைத்துக் கொள்ளே. (55)

கொள்ளடா முருங்கையிலைச் சாற்றில் தேய்த்துக் குணமாகக் கண்ணிலே போட்ட போது, மெள்ளவே சந்நிமுதற் பசாசு போகும், மேன்மையாய் விஷமோடு மயக்கம்போகும், விள்ளடாபோகருட கடாட்சத்தாலே விளம்பினேன் புலிப்பாணி விளக்கமாகக், கள்ளடா மனத்தோர்க்குக் காட்டொணாது கருவான வைத்தியந் தா னின்னங்கேளே. (56)

(செ-பா.) லவங்கம், மிளகு, சுக்கு, துவரம்பருப்பு வகைக்கு வராகன்-1, அகத்தியர் குழம்பு வரா-$\frac{1}{4}$, சேர்த்துக் குப்பைமேனி சாற்றால் 1-சாமமும், வெற்றிலைச் சாற்றால் 1-சாமமுமரைத்துக் கயிறுபோல் நீட்டாக மாத்திரை திரட்டி வைத்துக்கொண்டு முருங்கையிலைச் சாற்றி லுரைத்து கண்ணில் போட்டால், சந்நி, பசாசு, விஷம், மயக்கம் இவைகள் குணமாம்.

அகத்தியர் குழம்பாவது: பெருங்காயம், கடுகு, இந்துப்பு, ரசம், வெங்காரம், நாபி, மனோசிலை, ஓமம், அரிதாரம், கருஞ் சீரகம், வகைக்கு 1-கழஞ்சு, 5-கழஞ்சு வாளம் சுத்திபண்ணி விளக்கெண்ணெயில் வறுக்காதது. இவைகளைச் சூரணஞ்செய்ய வேண்டியவைகளைச் சூரணித்துக்கொண்டு பிறகு எல்லாவற் றையுஞ் சேர்த்து நன்றாய்ப் பலங்கொண்டரைத்தால் மெழு காகும்.

### 24. முகசந்நிக்கு எண்ணெய். (பா-2)

கேளேநீ முகசந்நிக் கெண்ணே யொன்று கெணித முடன் தேங்காய்நெய் படிதா னென்று, சூளேநீ வசம்பி னொடு வெள்ளைப் பூண்டு சுகமாக ஓமமொடு சதமாங்

குப்பை, வாளேநீ வகைவ்கைக்கு விராகன் பத்து வள
மான பெருங்காயம் விராக னென்று, ஆளேநீ மாவிலிங்
கம் ஆலின் பட்டை அப்பனே நொச்சியொடு பெருமரமு
மாமே. (57)

ஆமேநீ பட்டைவகை சொல்லக்கேளு அடைவாக
வகைவகைக்கு விராகன் பத்து, தாமேநீ யிவையெல்லா
மிடித்து மைந்தா தயவாகச் சரக்கெல்லாம் பொடியாய்ப்
பண்ணி, வேமேநீ யெண்ணெயிலே போட்டுக் காய்ச்சி
விதமான கடுகுபதந் தன்னில் வாங்கி, போமேநீ முழுகிட
வே பறக்குஞ் சந்நி பொங்கமுட னுள்விட்டு நாள்தான்
சூழ்கே. (58)

(செ-பா.) தேங்காய் எண்ணெய் படி-1, வசம்பு, வெள்ளைப்
பூண்டு, ஓமம், சதகுப்பை, வகைக்கு பலம்-1, பெருங்காயம் வராக
1, மாவிலிங்கப்பட்டை, ஆலம்பட்டை, நொச்சிப்பட்டை, பெரு
மரப்பட்டை, இவைகள் வகைக்கு பலம்-1, எல்லாவற்றையும்
இடித்துச் சூரணஞ்செய்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சிக்
கடுகுபதத்தில் இறக்கி 1-நாள் விட்டு 1-நாள் முழுகினுல் முக
சந்நிகளெல்லாம் குணமாம்.

## 25. சந்நிக்கு எண்ணெய். (பா-6)

முழுக்கைவிட்டு எண்ணெயொன்று சொல்லக்கேளு
முரிந்தோடுஞ் சந்நியப்பா எண்ணெய் கண்டால், பழுக்
கான வேப்பெண்ணெய் படிதா னென்று பண்பான சிறு
பானை தன்னில் வார்த்து, அழுக்கான மயிற்பீலி யிலைதான்
பத்து அப்பனே நறுக்கிநன்றா யதனிற் போடு, சுழுக்
கான சூடனொடு சாம்பி ராணி சுக்கோடு திப்பிலியு மரத்
தை கூட்டே. (59)

கூட்டப்பா பெருங்காய மோமத் தோடு குணமான
கிராம்பப்பா மிளகு கூட, நாட்டப்பா ரசகர்ப்பூ ரத்தி

ளேடு நலமான தெசாவரஞ் சதமாங் குப்பை, கூட்டப்
பா இவையெல்லாம் பொடியாய்ப் பண்ணிக் குணமான
சீலையிலே முடிந்து கொண்டு, சாட்டப்பா வகைவகைக்கு
விராக ஞென்று சாதகமா யடுப்பேற்றித் தீயை மூட்டே.

மூட்டப்பா சிறுசட்டி கொண்டு மூடி முக்கியமாய்க்
குப்புறவே மூட வேண்டுங், காட்டப்பா அக்கினியை
யெரித்த போது கடிதாக எண்ணெயிலே தீயே பற்றும்,
மாட்டப்பா அதையிறக்கி வைத்தபோது மைந்தனே
சுடர் காட்டப் பற்றும் பாரு, மூட்டப்பா சட்டி கொ
ண்டு மூடும்போது முக்கியமாய்த் தணலடங்கி வாசமாமே.

ஆமேநீ யடுப்பைமிக அணைத்துப் போடு அப்பனே
யாறவிட்டு இறக்கி வைத்து, தாமேநீ சட்டியிலே வடித்துக்
கொள்ளு தயவான இஞ்சிச்சாற் படியுங் கால்தான், வே
மேநீ வெள்ளுள்ளித் தயிலமப்பா விதமாகக் கால்படிதா
னளந்து வாரு, போமேநீ அண்டத்தின் தயிலமப்பா
பொங்கமுடன் படிவீச மதிலே வாரே. (62)

வாரேநீ சுக்கப்பா விராக ஞறு வகையாகச் ஜலமது
தான் படிதா ஞலு, சீரேநீ பொடிபண்ணிக் கியாழம்
வைத்துச் சிறப்பாகக் கால்படிதா னதிலே வாரு, பாரேநீ
யொட்டடைத்தூள் கழஞ்சு வொன்று பாங்காக அடுப்
பேற்றித் தீயை மூட்டிக், கூரேநீ கடுகுபதந் தனிலிறக்கிக்
குணமாகக் கலசத்தில் வார்த்தி டாயே. (63)

வார்த்தவுடன் கணபதியைத் துதித்து நாடி வகை
யாகச் சோடசமுந் தூபஞ் செய்து, பார்த்தவுட ஞுள்ளுக்
குக் கொடுத்த போது பாங்கான சந்நிமுதல் வலிப்பு
தோஷங், கார்த்தவுட ஞறுநாள் கொடுக்கும் போது
காரடா பத்தியந்தா ஞென்று மாகா, சேர்த்தவுட னே

மூாநாள் நீரை வார்த்துச் செயலான உப்புமுதல் கூட்ட லாமே. (64)

(செ-பா.) வேப்பெண்ணெய் படி-1, ஒரு சிறுபானையில் வார்த்து அதில் மயிற்பீலி இலை-10, நருக்கிப்போட்டு, கர்ப்பூரம் சாம்பிராணி, சுக்கு, திப்பிலி, சன்னராஷ்டம், பெருங்காயம், ஓமம், லவங்கம், மிளகு, பூரம், மோடி, சதகுப்பை இவ்வ வகைக்கு வரா-1, சூரணித்து ஒரு சீலையில் முடிந்து அவ்வெண் ணெயில் போட்டு ஒரு சட்டியைக் கவிழ்த்துமூடி அடுப்பிலிட்டு எரிக்கும்போது உள்ளிருக்கிற எண்ணெயில் தீபிடிக்கும். அந்தச் சமயத்தில் அதை இறக்கிவைத்து அதில் நெருப்பைக் காட்டினுல் பற்றும். மறுபடியும் உடனே மேல்சட்டி மூடினுல் தணிந்து போகும். பிறகு அதை ஆறவிட்டு வேறுசட்டியில் வடித்துக் கொண்டு அதில் இஞ்சிச் சாறு படி-$\frac{1}{4}$, வெள்ளைப்பூண்டு தயிலம் படி-$\frac{1}{4}$, அண்டத்தயிலம் படிவீசம், (அரை ஆழாக்கு) சுக்கு வரா-6, மேல்தோல் போக்கினது. அதைச் சதைத்து ஒரு பாண்டத் தில் போட்டு 4-படி சலம்விட்டுக் காய்ச்சிக் கால்படியாக இறக்கின கஷாயம். இவைகளையெல்லாம் அதில்வார்த்து அதில் ஒட்டைத்தாள் கழஞ்சு-1, போட்டு எரித்து கடுகு திரளும் பதத் திலிறக்கி வேறுபாத்திரத்தில் வடித்துக் கணபதியைப் பூசை செய்து உள்ளுக்கு $\frac{1}{4}$-வரா வீதம் 3-நாள் 6-வேளை கொடுத்தால் சந்நி, வலி, இவைகள் குணமாகும். உப்பில்லாப் பத்தியமிருக்க வேண்டும். 3-நாள் மறுபத்தியமும் அப்படியேயிருந்து 7-வது நாளில் ஸ்நானஞ் செய்வித்து உப்பு முதலிய எல்லாவற்றையும் சேர்க்கலாம்.

## 26. சோகை, காமாலை, வீக்கம், நீர்க்கோவை இவைகளுக்குக் கியாழம். (பா-4)

ஆமேநீ நீர்முள்ளி கீழ்க்காய் நெல்லி அப்பனே வீழி வேர் கோவைத் தண்டு, வாமேநீ பூவரசம் பட்டை கை யான் வளமான செந்தொட்டி வேரினேடு, தாமேநீ சிறு பூளை வேரி னேடு தயவாகச் சம்புடைய துளிரு மப்பா,

நாமேநீ நெருஞ்சில்வேர் சிறுகீரை யின்வேர் நலமான நில வாகை ஊஞ்சல் பட்டை கேளே. (65)

கேளேநீ ஊஞ்சலென்ற பட்டை கூட்டி கெணித முடன் வகைவகைக்குப் பலந்தா ளுறு, சூளேநீ சரக்கு வகை சொல்லக் கேளு சுகமான கடுக்காய்ரோ கணியுங் கூட்டி, வீளேநீ கருஞ்சீர கத்திேனாடு விதமான காட்டுச்சீ ரகமுங் கூட்டி, பாளேநீ யில்லையப்பா திப்பிலியுங் கூடப் பண்பான வகைவகைக்கு விராக ளுரே. (66)

ஆரேநீ யிவையெல்லா மிடித்துத் தோண்டி அடை வாக ஆறுபங்காய் நிறுத்துக் கொண்டு, ஊரேநீ யொரு பங்கு பாண்டத்திட்டு உத்தமனே நாலுபடி சலத்தை வார்த்து, கூரேநீ யெட்டொன்ருய்க் குறுகக் காய்ச்சிக் குணமாகத் தான்பிழிந்து வடிதான் கட்டு, சேரேநீ கொடுத்துவர ஆறுநாள்தான் செயலான பத்தியந்தா னுப்பா காதே. (67)

ஆகாது சோகை காமாலை வீக்கம் அடைவான நீர்க் கோவை பாண்டு போகும், போகாத மகோதரமும் பீலி கையும் போகும் பொருமலுடன் மேலிளைப்புத் தீர்ந்து போகும், நோகாது ஏழாநாள் நீரை வாரு நுணுக்கமா யுப்பிட்ட பருப்பைக் கூட்டு, வேகாது மற்ருநாள் புளி யுஞ் சேரு விதமாக இந்தநோய் தீரும் பாரே. (68)

(செ-பா.) நீர்முள்ளிவேர், கீழாநெல்லிவேர், விழுதிவேர், கோவைத்தண்டு, பூவரசம்பட்டை, கரிசலாங்கண்ணி, சிவப்பு காஞ்சோறிவேர், சிறுபூளைவேர், நாவல் துளிர், செப்பு நெருஞ் சில்வேர், சிறுகீரைவேர், நிலாவிரை, ஊஞ்சல் பட்டை, இவைகள் வகைக்கு பலம் - 6, கடுக்காய், கடுகுரோகணி, கருஞ்சீரகம், காட்டுச் சீரகம், சிறுதிப்பிலி, இவைகள் வகைக்கு வரா-6, முன்சொன்னது பின்சொன்னது இவைகளையெல்லாம்

நன்ருய் இடித்து, 6-பங்காக்கி 1-பங்கை 1-பாண்டத்திலிட்டு அதில் 4-படி சலம் வார்த்து ½-படியாகக் காய்ச்சியிறக்கிப் பிழிந்து வடிகட்டிக் காலை மாலை 2-வேளையும்கொடுக்கவேண்டும். மற்ற 5-பங்கையும் இப்படியே செய்து 6-நாள் கொடுத்தால், சோகை, காமாலை, வீக்கம், நீர்க்கோவை, பாண்டு, மகோதரம், பிலீகம், பொருமல், மேற்சுவாசம், இவைகள் தீரும். உப்பில்லாப் பத்தியம். 7-வது நாள் ஸ்நானஞ் செய்வித்து உப்பிட்ட துவரம் பருப்பு சேர்க்கவும். 8-வது நாளிலிருந்து புளி முதலிய எல்லா வற்றையுஞ் சேர்க்கலாம்.

## 27. பித்தவெடிப்புக்குப் பச்சிலைச் சாறு. (பா-1)

பாரேநீ பித்தவெடி வந்ததானல் பாங்கான மருதுடைய விலையை வாங்கி, சீரேநீ பசுவின்பால் தனில் துவைத்துச் சிறப்பாக மூன்றுநாட் குடிக்கச் சொல்லு, வீரேநீ பத்தியந்தான் பாலுஞ்சோறும் விதமாக ஏழுநாள் நீரைவாரு, பேரேநீ போகருட கடாட்சத் தாலே பேத மில்லை புலிப்பாணி பாடி னேனே. (69)

(செ-பா.) மருதமரத்து இலையைப் பசும்பால் விட்டிடித்துப் பிழிந்து 3-நாள் 6-வேளை குடித்துப் பாலுஞ்சாதமும் சாப்பிட்டு 3-நாள் அப்படியே மறுபத்தியமிருந்து 7-வது நாள் ஸ்நானஞ் செய்வித்து எல்லாவற்றையுஞ் சேர்க்கலாம். இதனுல் பித்த வெடிப்பு தீர்ந்துவிடும்.

## 28. நீரில் இரத்தம் கண்டால் மா. (பா-1)

பாடினே னீர்தனிலே ரத்தம் வீழ்ந்தால் பாங்காகப் புழுங்கலரிசி பலந்தா னென்று, கூடினேன் விராலியிலை பலந்தா னென்று குணமாக வரிசியைத்தா னரவைத் துச், சாடினே னிடித்தெடுத்துக் கொடுப்பாயப்பா சார் வாக மூன்றுநா ளாறுவேளை, நாடினே னிந்தவிதங் கொடுத்தபோது நடுநடுங்கியோடிவிடுந் திண்ணந் தானே.

(செ-பா.) புழுங்கலரிசி பலம்-1, விராலியிலை பலம் -1, இந்த இரண்டையும் ஊரவைத்து இடித்துத் தெள்ளி 3-நாள் 6-வேளை கொடுத்தால், நீரில் ரத்தம் காண்பது தீரும்.

## 29. முழங்கால் வாதத்துக்குக் கட்டு. (பா-2)

தானென்ற முழங்காலின் வாதத் துக்குத் தயவாக வீழியிலை புண்ணாக்குப் பூண்டுங், கோனென்ற ஆவிரையி னிலையுங் கூடக் குணமாக விலைமூன்றுஞ் சமமாய்ச் சேர்த்து, தேனென்ற வெள்ளுள்ளிப் பூண்டோ மூன்று தெளி வாகத் தானிடித்து எடுத்துக் கொண்டு, வேனென்ற விளக்கெண்ணெ யொன்றில் விட்டு விதமாக வேதிட்டுக் கட்டிப்போடே. (71)

போடேநீ யிந்தவித மாறு நாளும் பொங்கமுடன் வேதிட்டுக் கட்டும்போது, ஆடேநீ முழுங்காலில் வாத மெல்லாம் அகன்றோடிப் போகிவிடு மகனுந்தானே, கூடே நீ நாட்சென்றால் பிடித்துக் கொள்ளுங் குணமாக மாட் டாது கூர்ந்துபாரு, தேடேநீ போகருட கடாட்சத்தாலே தெளிவாகப் புலிப்பாணி விளம்பி னேனே. (72)

(செ-பா.) விழுதியிலை, புண்ணாக்குப் பூண்டு, ஆவாரை இலை இவைகளைச் சமமாக எடுத்து வெள்ளைப்பூண்டு 3-பூண்டு உரித் தது இவைகளையெல்லாம் இடித்து ஒரு பாண்டத்தில் விளக் கெண்ணெய் விட்டு வதக்கி முழங்காலில் கட்டினால் முழங்கால் வாதம் தீரும். நாள் பட்டதாயிருந்தால் தீராது.

## 30. இரணங்களுக்குப் புகை. (பா-3)

விளம்பினே னின்னமொரு கருவைக்கேளு விதமான ரணங்களென்ற வியாதிக் கொல்லாம், தளம்புகிறேன் கொழுஞ்சியுட வேரின் பட்டை தயவாக வூரவைத்து நையத்தட்டி, குளம்புகிறேன் சுங்கானில் பட்டையிட்டுக்

குணமாக லிங்கமப்பா விராகன் பாதி, நளம்புகிறேன் சுங்கான்மேல் வைத்துப் பின்னும் நலமாக முன்பட்டை நிறைய மூடே. (73)

மூடியபின் தணலைவைத்துப் புகையை வாங்கி முக்கியமாய் விழுங்கியதைச் சுவாசந் தன்னில், நாடியமுன் னுன்மூன்று வேளையாகும் நலமாகக் குடித்தவுடன் பாற் சோறுண்ணு, தேடியபின் னைந்தாநாட் பத்தியமாய்க் காரு தெளிந்தபின்பு ஆறுநாள் தலையை மூழ்கு, பாடிய பின்னேழாநா ளுப்பைக் கூட்டு பண்பாக எட்டாநாள் புளியைச் சேரே. (74)

சேரப்பா கரப்பனென்ற வகைக ளெல்லாஞ் சிறப்பாக வீராறு நாள்தான் தள்ளு, பாரப்பா கண்ணுவலி கன்னைசை யோடு பாங்கான விப்புருதி கண்ட மாலை, வீரப்பா அரையாப்புச் சூலை யோடு விதமான பிளவை யோடு லிங்கப் புற்று, கூரப்பா ரணங்க ளென்ற நோய்க ளெல்லாங் கூசாம லோடிவிடுங் கொள்கை பாரே. (75)

(செ-பா.) கொள்ளுக்காய் வேளைவேரை ஊரவைத்து நன்ருய்த் தட்டிச் சுங்கானில் போட்டு லிங்கம் $\frac{1}{2}$ வராகனிடை அந்தப் பட்டையின்மேல் வைத்து மறுபடியும் அதின்மேல் முன் போட்ட பட்டையை சுங்கான் நிறையும்படிபோட்டு நெருப்பிட்டு சுருட்டு பிடிப்பதுபோல் 3-நாள் புகை பிடிக்கவேண்டும். அப்படி பிடித்து விட்டுப் பாலுஞ்சாதமும் சாப்பிடவேண்டும். இப்படியே முதல்நாளிலிருந்து 5-நாள் வரைக்கும் பத்தியமிருந்து 6-வது நாள் ஸ்நானஞ்செய்து 7-வது நாள் உப்பையும், 8-வது நாள் புளியையுஞ் சேர்த்துக்கொள்ளவேண்டும். 12-நாள் வரைக்கும் கரப்பான் பண்டங்களைத் தள்ளிவைக்கவேண்டும். இதனுல் கண் குற்றல், கன்னப்புற்று, விப்விருதி, கண்டமாலை, அரையாப்பு சூலை, பிளவை, லிங்கப்புற்று, ரணரோகங்கள் இவை தீரும்.

## 31. வாயுகுத்தலுக்குக் கஷாயம். (பா-2)

பாரப்பா வாயுவென்ற குத்துக் கேதான் பண்பான கொடிவேலிப் பட்டை யோடு, யீரப்பா சுக்குடனே பறங் கிப் பட்டை விதமான பிரம்பினுட கிழங்கு கூட, சேர ப்பா வகைவகைக்கு விராகன் மூன்று செயலான நாலு படி சலத்தை விட்டு, கூரப்பா யெட்டொன்றாய்க் கியா ழம் வைத்துக் கொடுத்தவுடன் வாயுவென்ற மேகம் போமே. (76)

போமப்பா அந்திசந்தி மூன்று நேரம் பொங்கமு டன்குடித்துவிட வாய்வு தீரும், ஆமப்பா பத்தியந்தா னுப்பாகாது அடைவாக வைந்தாநா ளெல்லாங் கூட்டு; வாமப்பா கொடிவேலி சுக்குங் கூட்டி வகையாகக் கியா ழம்வைத் துண்டபோது, தாமப்பா கொடிவேலி சுருக்கு மெத்த தயவாக வாயுவெல்லாங் குணமதாமே. (77)

(செ-பா.) சித்திரமூல வேர்ப்பட்டை, சுக்கு, பறங்கிச் சக்கை, பிரப்பங்கிழங்கு வகைக்கு வரா-3, சதைத்து 1-பாண்டத் திலிட்டு 4-படி சலம்விட்டு காய்ச்சி எட்டொன்றாய் வடித்துக் காலை, மாலை, பகல் 3-வேளை 3-நாள் குடிக்க மேகவாயு, வாயு, இவை தீரும். உப்பாகாது. 5-வது நாள் எல்லாவற்றையுஞ் சேர். தவிர, சித்திரமூல வேர்ப்பட்டையும், சுக்கும் கியாழம் வைத்துக் கொடுத்தால் கொடிவேலியின் வேகத்தினால் வாயுவெல்லாம் குணமாகும்.

## 32. கிரந்திக்கேண்ணெய். (பா-9)

குணமாகப் பூசினிக்காய்ச் சாறுபடி ரண்டு குருவா னதாழையுடை விழுதுச் சாறு, மணமாகும் கற்றாழை குமிழின் சாறு மைந்தனே நெல்லிக்காய் கையான் சாறும், வணமாகும் வல்லாரை வில்வத் தோடும் வளமா னகொடிப்பை யப்பா வீழி யோடு, சிணமாகும் ஆதொ

ண்டை இலைநீர்ப் பூண்டு சிறப்பான அப்பையுட கிழங்கு தானே. (78)

தானென்ற பாச்சானை வாட்டித் தண்ணீர் தயவான சங்கோடு நீர்ப்பூ லாவு, மானென்ற தென்னையுட பாளை யப்பா மைந்தனே தக்காளி யிலையினோடு, கோனென்ற ஆனையுட நெருஞ்சிலோடு கொடிதான ஆல்விழுதும் அறுகம்வேரும், பானென்ற வகைக்குச்சாற்படியொன் றுகும் பாங்கான பாண்டத்தில் விட்டி டாயே. (79)

விட்டவுடன் சாறுவரா மூலி யெல்லாம் விதமாக நீர் விட்டுபிழிந்துகொண்டு, சட்டமுடன் அடுப்பேற்றி வற்றக் காய்ச்சிச் சட்டிதனை இறக்கியபின் சொல்லக் கேளு, கட்டவுடன் இளநீரும் பசுவின் பாலுங் கருவான பனிநீரும் காடித் தண்ணீர், குட்டமுடன் கோசலமும் அத்தி நீருங் குணமாக வகைவகைக்குப் படிதான் வாரே. (80)

வாரேநீ இவையெல்லாம் எட்டொன் றுக்கி வகையான எண்ணெயப்பா வடிக்கக் கேளு, சீரேநீ சிற்றுமணக்கின் முத்தை வாங்கிச் சிறப்பாகக் காடியிலே ஊறவைத்து தீரேநீ பசுவின்பால் விட்டு மைந்தா திறமாக வேகவைத்து உலரப் போட்டு, காரேநீ யிளநீரா லெண்ணெ யூற்றிக் கணக்காக வைத்துபடி யெண்ணெய் வாரே. (81)

வார்த்தபின்பு வேருவகை சொல்லக் கேளு வகையான நிலப்பனையும் அசுவ கெந்தி, காத்தபின்பு நிலக்குமிழுஞ் சித்திர மூலங் கருவான தாமரையின் கிழங்கினோடு ஏத்தபின்பு பூமிசர்க் கரையுங் கூட்டு இதமான துத்தியின் வேர் நீர் நெருப்பு, சேர்த்தபின்பு வகைவகைக்குப் பலந் தா னென்று சேர்த்தரைத்து எண்ணெயிலே போட்டி டாயே. (82)

போட்டபின்பு சரக்குவகை சொல்லக் கேளு பொங் கமுடன் சாதிக்காய் சாதி பத்திரி, கேட்டபின்பு லவங்க மதி மதுர மாஞ்சில் கெணிதமாய்ச் சோம்போடு ஏலமப் பா, மூட்டபின்பு திரிகடுகு திரி பலாதி முக்கியமாய் வெந் தயஞ் சீரகமு மாகும், நாட்டபின்பு கஸ்தூரி மஞ்சளோடு நலமான ரோசனையும் பூர மாமே. (83)

ஆமேநீ வால்மிளகு கசகசாவும் அடைவான சிறு நாகங் கடுக்காய்ப் பூவும், வாமேநீ மல்லிகைதா ளிசமாம் பத்திரி வகையான சிறுலவங்கங் கார்போ கந்தான், தாமேநீ சீனிகற் கண்டி னேடு தலையான கூகைநீறு முத் தக் காசும், ஆமேநீ வகைவகைக்குக் கழஞ்சு மூன்று அடைவாகப் பொடிபண்ணிப் போட்டி டாயே. (84)

போட்டபின்பு ஆவினெய் படிதா னைந்து பொங்க முடன் தானளந்து அதனில் வாரு, நாட்டபின்பு மெழு குபதந் தனி லிறக்கி நாயகனே கடுகோடே ஒன்றி லூற் றிக், கூட்டபின்பு கணபதியைப் புகழ்ந்துப் பாடிக் குருவி னுட தாள்பனிந்து பூசை செய்து, ஆட்டபின்பு எண்ணெ யொரு கரண்டி கொள்ளு அடைவாகப் பத்தியந்தா னில்லை தானே. (85)

தானென்ற வாயில்தான் புண்ணினேடு தயவாகத் தடிப்புமுதல் புள்ளி மேகம், வானென்ற செங்கிரந்தி கருங் கிரந்தி வளமான பிரமியங்கள் கிரந்திப்புண்ணு, கோனெ ன்ற பெருஞ்சிரங்கு சிறுசிரங்கு கொடிதான மேகங்களி ருபத் தொன்றுந், தேனென்ற தேகமப்பா அருணன் போலாந் தெளிவான போகருட கடாட்சந் தானே. (86)

(செ-பா.) கலியாண பூசினிக்காய்ச்சாறு படி-2, தாழை விழுது கற்றாழை, நிலக்குமிழ், நெல்லிக்காய், கரிசலாங்கண்ணி வல்லாரை, வில்வ இலை, பொன்னாங்காணி, விழுதி, ஆதொண்

டையிலை, நீர்முள்ளி, கற்கோவைக்கிழங்கு, பாச்சான், சங்கம் இலை, நீர்ப்பூலா, தென்னம்பாளை, தக்காளியிலை, ஆனைநெருஞ்சி, ஆலம்விழுது, அறுகம்வேர் இவைகள் சாறு வகைக்கு படி-1, ஒரு பாண்டத்திலூற்றி, (சாறுவாரத மூலிகையெல்லாம் சலம் விட்டிடித்துப் பிழிந்துகொள்ளலாம்) அடுப்பிலேற்றி வற்றக் காய்ச்சிச் சட்டியை இறக்கிப் பிறகு, இளநீர், பசும்பால், பனிநீர், காடிசலம், பசு மூத்திரம், யானை மூத்திரம் இவைகள் வகைக்குப் படி கூடவிட்டு, அடுப்பேற்றி எரித்து எட்டொன்றாக வற்றக் காய்ச்சி, காடியிலே ஊரவைத்து பசும்பால் விட்டு வேகவைத்து உலர்த்தி இளநீரால் ஊற்றின சிற்றாமணக்கெண்ணெய் படி-5 வார்த்து அதில் நிலப்பனங்கிழங்கு, அமுக்கறாங்கிழங்கு, நிலக் குமிழ், சித்திரமூலம், தாமரைக்கிழங்கு, பூமிசர்க்கரைக்கிழங்கு துத்திவேர், நீர்மேல் நெருப்பு இவைகள் வகைக்கு பலம்-1, எண்ணெய்விட்டரைத்துக் கலந்து, பிறகு சாதிக்காய், சாதிபத் திரி, லவங்கம், அதிமதுரம், சடாமாஞ்சில், சோம்பு, ஏலரிசி, சுக்கு, திப்பிலி, மிளகு, கடுக்காய்த்தோல், தான்றிக்காய்தோல், நெல்லிவற்றல், வெந்தயம், சீரகம், கஸ்தூரிமஞ்சள், கோரோச னம் பச்சைக்கர்ப்பூரம், வால்மிளகு, கசகசா, சிறுநாகப்பூ கடுக் காய்ப்பூ, கொத்துமல்லி, தாளிசபத்திரி, சன்னலவங்கப்பட்டை, கார்போகரிசி, சீனாகற்கண்டு, கூகைநீறு (அதாவது ஆரோரூட் மாவு கோரைக்கிழங்கு, இவைகள்வகை ஒன்றுக்கு $3\frac{3}{4}$ (மூன்றே முக்கால்) வராகனிடை எடுத்து நன்றாய் பொடிபண்ணி அந்த எண்ணெயில் போட்டு அதில் பசு நெய் படி 5-விட்டு அடுப் பிலேற்றி எரித்து மெழுகுபதத்தில் இறக்கிக் கடுகுடனே ஒரு சாடியில் ஊற்றிக்கொண்டு, கணபதியையும், ஆசாரியரையும் வணங்கிக் காலையில் ஒரு கரண்டிவீதம் 5,7,9, இந்த நாள் கணக் காக 1-முறை 2-முறை அல்லது 3-முறை சாப்பிட்டால், வாய்ப் புண், குஷ்டத்தடிப்பு, புள்ளிமேகம், செங்கிரந்தி கருங்கிரந்தி, பிரமியங்கள் (அதாவது வெள்ளை நோய்கள்) கிரந்திப்புண், பெருஞ்சிரங்கு, சிறுசிரங்கு, 21-மேகங்கள் இவை முதலியவை தீரும் சரீரம் சூரியனொளிபோலாகும். இதற்குப் பத்தியமில்லை.

## 33. மேகம் 21-க்கும் வாய் நாற்றத்திற்கும் எண்ணெய். (பா-3)

தானான வின்னமொன்று சொல்லக் கேளு தயவான விளக்கெண்ணெய் படிதான் ரண்டு, மானகை இளநீரும் பசுவின் பாலு மைந்தனே காடியுடன் பொன்னுங் கண்ணி, கோனகை ஆதொண்டை இலைவல் லாரை குணமான வில்வவிலை அறுகம் வேரும், வானகக் கள்ளியையும் வாட்டித் தண்ணீர் வளமாக நீர்ப்பூண்டு சாணிப் பாலே. (87)

பாலப்பா வகைவகைக்குப் படிதா னென்று பாங்காகச் சரக்குவகை சொல்லக் கேளு, சாலவே வெந்தயஞ் சீரகத்தி னோடு சார்வாகக் கொத்துமல்லி சிறுநா கப்பூ, கோலமுடன் சாதிக்காய் கிராம்பு மேலும் குணமான அதிமதுரங் கூகை நீறுஞ், சேலமாய்ச் சீனமென்ற காரந் தானுஞ்செயலான வகைக்குவகை விராக னென்றே.(88)

ஒன்றான இவையெல்லாம் பொடித்துப் போட்டு உத்தமனே சர்க்கரைதான் பலமோ வொன்று, பன்றாகக் காய்ச்சியது மெழுக தானல் பக்குவமாய்த் தான்வடித்து எடுத்துக்கொண்டு, நன்றாகத் துட்டெடைதான் கொள்ளும் போது நலமாகு மண்டலத்தில் சூடே தப்பா, வென்றாக மேனியது ஊறும் பாரு விதமாக வாய்நாற்றம் போகும் பாரே. (89)

(செ-பா.) விளக்கெண்ணெய் படி-2, இளநீர், பசுவின் பால், காடி, பொன்னுங்கண்ணி, ஆதொண்டைஇலை, வல்லாரை, வில்வஇலை, அறுகம்வேர், கள்ளிக்கொடியை வதக்கினசலம், நீர்முள்ளியிலை சாணிப்பால் இவைகள் வகைக்குச் சாறு படி-1, ஒரு பாண்டத்திலூற்றி வெந்தயம், சீரகம், தனியா, சிறுநாகப்பூ, சாதிக்காய், இலவங்கம், ஏலம், அதிமதுரம், கூகைநீறு, படிகாரம் இவைகள் வகைக்கு ஒருவராகனெடை பொடிசெய்து எண்ணெ

யில் போட்டு சர்க்கரை பலம்-1, கூடப்போட்டு அடுப்பேற்றி எரித்து மெழுகு பதத்தில் வடித்து 1-மண்டலம் வரைக்கும் துட்டெடை சாப்பிட்டு வந்தால் வெட்டைநோய் என்கிற சூடு நீங்கும். சரீரம் புஷ்டி யாகும். வாய் நாற்றம் போகும்.

## 34. நூல் தொகை. (பா-1)

பாரப்பா போகருட கடாசத் தாலே பண்பான புலிப்பாணி விளங்கத் தானுஞ், சீரப்பா கொக்கோகத் திரட்டொன் றப்பா திறமுடனே நூற்றைம் பதுவுஞ் சொன்னேங், கூறப்பா வாடைபதி னாறிற் சொன்னேங் குருவான ஞானமொடு தொண்ணூற் றாறு, வீரப்பா சோசியமுந் நூற்றுக் குள்ளே விளம்பினே நேத்திரம் போல் தோணும் பாரே. (90)

(செ-பா.) கொக்கோகத்திரட்டு 150-பாடலிலும், வாடை, பதினாறு பாடலிலும், ஞானம் தொண்ணூற்றாறு பாடலிலும், சோதிடம் 300-பாடலிலும் சொன்னேம். இவைகள் கண் போல் நன்றாய் விளங்கும்.

## 35. எலிகடி 18-க்கும் மருந்து. (பா-2)

பாரேநீ இன்னமொன்று சொல்லக் கேளு பதினெட்டு எலிகடிக்கு மருந்தைய்ப்பா வீரேநீ கரும்பூனை மலத்தை வாங்கி விதமாகக் கழற்சிக்கா யளவு தானுங், கூரேநீ யாலே யுடக் கருப்புக் கட்டி குணமாக முள்ளிக்கா யளவு சேர்த்துச் சேரேநீ மூன்றுநா ளாறு வேளை செயலாகக் கொண்டிடவே தீரும் பாரே. (91)

பாரப்பா ஆறுநாள் யத்தியமே காரு பண்பான உப்புமுத லொன்று மாகா, வீரப்பா ஏழாநாள் தலையை மூழ்கு விதமாக உப்பிட்ட பருப்பு மாகுஞ், சேரப்பா எட்டாநா ளெல்லாங் கூட்டு செயலாக நாட்சென்றால் சொல்

லக் கேளு கூறப்பா மூன்றுகெடு கொண்ட போது குண மாக எலிகடிகள் தீருந்தானே, (92)

(செ-பா.) கரும்பூனை மலத்தை ஒரு கழற்சிக்காயளவு நல்ல வெல்லம் கண்டங்கத்தரிக்கா யளவில் வைத்து 3-நாள் 6-வேளை கொடுக்கவும். 6-நாளும் உப்பில்லாப் பத்தியம். 7-வதுநாள் ஓமம் தேய்த்து ஸ்நானஞ்செய்வித்துச் சாதமும் உப்பிட்ட பருப்புஞ் சேர்க்கவும். 8-வது நாள் எல்லாவற்றையுஞ் சேர்க்கலாம். நாட் பட்ட எலிகடியாக விருந்தால் முன்கொடுத்தமாதிரி 3-முறை கொடுக்கவேண்டும். எலி கடிகள் தீரும்.

## 36. பேய்நரி, பேய் நாய்க் கடிக்கு மருந்து. (பா-1)

தானென்ற பேய்நரி நாய் கடித்த தானால் தழைத்த மணித் தக்காளி யிலைச்சா றப்பா, பானென்ற படிகால் தான் கொடுப்பா யப்பா பாங்காக மூன்றுநா ளாறு வேளை,கோனென்ற பத்தியந்தா னுப்பா காது குணமாகு மேழாநாள் நீரை வாரு, வேனென்ற பேய்நரி நாய்க் கடிதான் தீரும் விதமாகு மிதின்றழையை மேலே பூசே.

(செ-பா.)மணத்தக்காளி யிலைச்சாறு படி கால்வீதம் 3-நாள் 6-வேளை கொடுக்கவும். அந்த 3-நாளும் மறுபத்தியம் 3-நாளும் உப்பில்லாப் பத்தியம். 7-வது நாள் ஸ்நானஞ் செய்விக்கவும். அதின் தழையையே மேலுக்கும் கடிவாயில் பூசவேண்டும். பேய் நரியும், பேய்நாயும் கடித்தவை தீரும்.

## 37. மூனைக்கடி தீர மூலிகை. (பா-1)

பூசியே பூனையுட கடிதான் தீரப் புனிதமுள்ள பூனை தொழும் பட்டை வாங்கி, ஆசியே பசுவின்பால் தனில ரைத்து அப்பனே பத்தியமாய்க் குடிக்கச் சொல்லு, கூசியே முன்போலப் பத்தியமே காரு குணமுள்ள நீலி வேர் தனையரைத்து, வாசியே ~~ஈரா~~று நாளும் பூச வகை யாகப் பூனைக்கடி தீருந்தானே. (94)

(செ-பா.) குப்பைமேனி வேர்ப்பட்டையைப் பசுவின்பாலா லரைத்து 3-நாள் 6-வேளை குடித்து 6-நாள் வரைக்கும் உப்பில் லாப் பத்தியமா யிருக்கவேண்டும். மேலுக்கு அவிரிவேரை வெந் நீரோலரைத்து 12-நாள் பூசினல் பூனைக்கடி தீரும்.

## 38. வண்டு கடிக்கு மருந்து. (பா-3)

தீருமப்பா வண்டுகடிவந்த பேர்க்குத் திறமாக மருந் தொன்று சொல்லக் கேளு, மாறுமப்பா வெள்ளாட்டுக் கறுத்த பாலு மைந்தனே தினையரிசி படிதான் காலு, வீருமப்பா மூலியொன்று அறியச் சொல்வேன் விதமான ஆடுதொடா மூலிச் சாறு, கூறுடனே வேகவைத்து அந்தி சந்தி குணமாகக் கொண்டிடவே தீரும் பாரே. (95)

பாரேநீ சாறதுதான் படிதான் வீதம் பண்பான பத் தியந்தா னுப்பா காது, கூரேநீ வெள்ளாட்டுப் பாற்சோ றுண்ணு குணமாக ஏழாநாள் நீரை வாரு, சேரேநீ வசம்பு டனே நீலி வேருஞ் சிறப்பாகத் தானரைத்துப் பூசு பூசு, தீரேநீ வண்டுகடி யெல்லாம் போகுந் திறமான போக ருட கடாட்சந் தானே. (96)

தானேதா னிதுபோலே விஷமு முண்டு தயவான மேகவகை யிதுபோ லுண்டு, கூனேதான் செய்தொழிலு மிதுபோ லுண்டு குடிலமாய்த் தாமரையு மிதுபோலுண்டு சோனேதா னிதுபோலே தீரா விட்டால் துணிவாக ரசப் பதங்கங் கொள்ளச் சொல்லு, ஊனேதான் கண்டு கண்டு மருந்து செய்நீ உத்தமனே இல்லாவிட்டா லேய்க் கும் பாரே. (97)

(செ-பா) வெள்ளாட்டுப்பால் படி-1, ஆடுதின்னாப்பாலைச் சாறு படி-$\frac{1}{4}$, கலந்து தினையரிசி படி-$\frac{1}{4}$, போட்டுப்பொங்கி இரண்டு வேளையும் 3-நாள் தின்று 6-நாள் வரைக்கும் உப்பில்லாப் பத்திய மிருந்து 7-வது நாள் ஸ்நானஞ்செய்யவேண்டும். மேலுக்கு வசம்

பும் அவிரிவேரும் சலத்தால் அரைத்துப் பூசவேண்டும். இதனால் வண்டுகடி தீரும்.

இந்த வண்டுகடிபோல விஷமும், மேகங்களும், பார்வைக் குணங்களும், படர்தாமரையும் வருவது வழக்கம். இதில் தீராவிட்டால் நோயென்று தெரிந்து ரசப்பதங்கம் கொடுக்க வேண்டும்.

## 39. பூரான்கடி தீர மருந்து. (பா-1)

பாரப்பா பூரான்தான் கடித்த பேர்க்குப் பண்பான எருக்கம்பூ நரம்பைப் போக்கிச் சீரப்பா பூவேழு கொடுத் துப் பாரு சிறப்பாக ஞாளிமலப் புகையைக் காட்டு, கூறப்பா நாட்சென்றால் மண்டலங் கொள் குணமாகப் பத் தியந்தா னில்லை பாரு, வீரப்பா பூரான்தான் கடிப்பு மாறும் விதமாக அதின்விடமுந் தீருந்தானே. (98)

(செ-பா.) 7-எருக்கம் பூக்களை நரம்பை எடுத்துவிட்டுக் கொடுத்து நாய் மலப் புகை காட்டவும், நாள்பட்டதாக விருந் தால் 1-மண்டலம் சாப்பிடவேண்டும். பத்தியமில்லை. பூரான் கடியா லுண்டாகும் தடிப்பு தீர்ந்துவிடும்.

## 40. செய்யான், பெருச்சாளி கடிகளுக்கு. (பா-1)

தானென்ற செய்யான் தான் கடித்த பேர்க்குத் தய வாகக் கொல்லனுட கோவை மூலம், பானென்ற பாக்க ளவு கொள்ளச் சொல்லு பண்பான மயிற்பீலி புகை யைப்போடு, கோனென்ற செய்யான்தன் விஷமும் போகுங் குணமான பெருச்சாளி கடிதான் தீர, வேனெ ன்ற அறுகம்வேர் வெள்ளிதன்னில் விதமாகக் குடித்த வுடன் தீர்ந்துபோமே. (99)

(செ-பா.) ஆகாசகருடன் கிழங்கில் ஒரு பாக்களவு கொடுத்து மயிலிறகு புகைபோட்டால் செய்யான் விஷம் நீங்கும்.

வெள்ளிக்கிழமையில் அறுகம்வேர்ச் சாறுகுடிக்கப் பெருச்சாளி விஷந்தீரும்.

## 41. தேள்காலி விஷந்தீர. (பா-1)

போமப்பா தேட்காலி கடித்த பேர்க்குப் பொங்கமுடன் பெரியநங்கை வேரைத் தானும், வாமப்பா நீரிலே உரைத்துப் பூசு வளமாக மட்டுப்பால் புகையைப்போடு, ஆமப்பா கடுகடுப்பு அடங்கிப் போகும் அப்பனே தேட்காலி விஷமுந் தீரும், நாமப்பா போகருட கடாட்சத்தாலே நலமாகப் பலிப்பாணி பாடினேனே ()

(செ-பா) பெரியாநங்கை வேரை நீரிலே யுரைத்துப் பூசி, மட்டுப்பால் புகைபோட்டால் கடுகடுப்பு அடங்கி தேள்காலி விஷந் தீரும்.

## 42. சகல விஷங்களுந் தீர மருந்து. (பா-1)

பாடியதோர் விஷங்களெல்லாந் தீரவேதான் பண்பாக எட்டிப்பழந் தன்னை வாங்கி, கூடியதோர் சட்டியிலே வேணமட்டுங் குணமாகத் தானெடுத்துவேப்பெண்ணெய் விட்டு, காடியே அடுப்பேற்றி வேகவைத்து நலமாக உருட்டியதைச் செப்பில் மூடி, தூடியே விஷந்தீண்டி வந்த பேர்க்குத் தூதுவளங் காயளவு கொடுத்திடாயே. (101)

(செ-பா.) எட்டிப்பழச் சதை வேண்டியவரைக்கும் எடுத்துச் சட்டியிலிட்டு வேப்பெண்ணெய் விட்டு அடுப்பிலேற்றி வேகவைத்து எடுத்து டப்பியில்வைத்துக்கொண்டு விஷந்தீண்டி வந்தவர்களுக்குத் தூதுளங்காயளவு கொடுக்க, விஷம் நீங்கும்.

## 43. விஷத்துக்கு நசியம், கலிக்கம். (பா-1)

கொடுத்திடவே விஷத்துக்கு நசிய மொன்று குணமாக நீதமென்ற தூரிசைவாங்கி, அடுத்திடவே விராக

னை துணியில் வைத்து அடைவாகச் சிறுநீரால் நசியம் பண்ணு, எடுத்திடவே விஷமெல்லா மிறங்கிப் போகும் இதமான கலிக்க மொன்று இயம்பக் கேளு, தொடுத்தி டவே சிறுபூளை கசக்கிக் கண்ணில் தோராமல் சிங் கென்று கொட்டிப் போடே. (102)

(செ-பா.) மயில்துத்தம் அரைவராகனெடை துணியில் வைத்து முடிந்து சிறுநீரில் நனைத்து நசியம்பண்ண விஷமெல் லாம் இறங்கிவிடும்.

சிறுபூளையைக் கசக்கி சிங் என்று சொல்லிக் கண்ணில் பிழிய விஷங்களெல்லாம் இறங்கிவிடும்.

## 44. சிறுபாம்புகடிக்கு மருந்து. (பா-1)

போடப்பா சிறுபாம்பு கடித்தபேர்க்குப் பொங்க முடன் சிறுகுறிஞ்சான் வேரைவாங்கி, நாடப்பா வெந் நீரா லரைத்துக்கொண்டு நலமாக அந்திசந்தி மூன்று நாளுண், வாடப்பா பத்தியந்தா னுப்பா காது வளமான ஏழாநாள் சலத்தை வாரு, சாடப்பா சிறுபாம்பு தடிப்பு மாறுஞ் சார்வாகப் போகருட கடாட்சந் தானே. (103)

(செ-பா.) சிறிகுறிஞ்சின்சான் வேரை வெந்நீராலரைத்து 3-நாள் 6-வேளை கொடுத்து 6-நாளும் உப்பில்லாப் பத்தியம் வைத்து 7-வது நாள் ஸ்நானஞ்செய்வித்தால் சிறுபாம்பு விஷத் தடிப்பு நீங்கும்.

## 45. குஷ்டத்துக்கு மருந்து. (பா-2)

தானென்ற குஷ்டநோய் வந்த பேர்க்குத் தயவாக மருந்தொன்று சொல்லக் கேளு, ஊனென்ற செவ்வலரி வேரை யப்பா உலரவிட்டுக் குழித்தயில மாக வாங்கிப் பானென்ற குப்பிதனி லடைத்துக் கொண்டு பண்பாகச் சிறுகுச்சி தயிலத் திட்டு, ஏனென்ற ஒரு துளித் தண் ணீரில் குத்தி இதமாகத் தான்கலக்கிக் கொடுத்திடாயே.

கொடுத்திடப்பா நாண்மூன்று காலே வேளே குரு
தியப்பா வடியுமடா ரணங்கள் தோறும், அடுத்திடப்பா
பத்தியந்தா னுப்பா காது அடைவாக ஏழாநாள் நீரை
வாரு, விடுத்திடப்பா உப்பிட்ட பருப்பு கூட்டி விதமாக
மற்றுநாள் புளியைச் சேறு, எடுத்திடப்பா குஷ்டநோய்
தீர்ந்துபோகும் இதமான போகருட கடாட்சந் தானே.

(செ-பா.) செவ்வலரி வேரை உலர்த்திக் குழித்தயிலம்
இறக்கிப் புட்டியிலடைத்துக்கொண்டு ஒரு குச்சியில் நனைத்து
எடுத்துத் தண்ணீரில் ஒரு துளிவிட்டுக் கலக்கி 3-நாள் காலையில்
மாத்திரம் கொடுத்தால், ரணங்களிலெல்லாம் ரத்தம் வடியும்
6-நாள் உப்பில்லாப் பத்தியமிருந்து 7-வது நாள் ஸ்நானஞ்
செய்து உப்பிட்ட துவரம் பருப்பு சேர்த்து 8-வது நாள் புளி
சேர்த்தால் குஷ்டநோய் தீர்ந்து போகும்.

## 46. மருந்தீட்டுக்கு முரிப்பு. (பா-2)

தானாக இன்ன மொன்று சொல்லக் கேளு, தயவாக
மருந்திடு கொண்ட பேர்க்குக், கோனாக எண்ணெயிட்டு
முழுகச் சொல்லிக் குணமாக ரசம்விட்டு அன்னமீந்து,
வேனாகத் தேங்காயின் பாலேவாங்கி விதமாகக் கரும்
பாலே சர்க்கரையுஞ் சேர்த்து, வானாகத் தேங்காயின்
பாலே யுண்டு வகையாகக் கம்பளமேல் படுக்கச்சொல்லே.

சொல்லப்பா முறுங்கை யென்ற இலேயை வாங்கிச்
சேரவே வதக்கியதைச் சார்பிழிந்து, அல்லப்பா சாறு
படி காலேயாகும் அடைவாக ஆவின் பால் நேரே
சேர்த்து, அல்லப்பா காலமே கொடுத்த பேது அடைவா
கப் பேதியிலே மருந்து வீழும், நல்லப்பா விழுந்தவுடன்
ஸ்நானம் பண்ணு நலமாக வேணதெல்லாங் கூட்டிக்
கொள்ளே. (107)

(செ-பா.) முன்னர் அப்யங்கன ஸ்நானஞ்செய்வித்து ரசஞ் சாதம் கொடுத்துத் தேங்காய்ப்பால் பிழிந்து அதில் சர்க்கரை போட்டுக் கொடுத்துக் கம்பளிமேல் படுக்கவைத்து, மறுநாள் காலையில் முருங்கையிலை வதக்கிப்பிழிந்தசாறு கால்படியும் பசுவின்பால் கால்படியுங் கலந்து காலையில் கொடுத்தால் பேதியாய் அதில்மருந்து வந்து விழுந்துவிடும். அப்படி மருந்து விழுந்தவுடன் வெந்நீரிலாவது, குளிர்நீரிலாவது ஸ்நானஞ்செய்து எல்லாவற்றையுஞ் சேர்த்துக்கொள்ளலாம்.

## 47. 1. நஞ்சுண்டவர்க்கு முறிப்பும், 2. கர்ப்பமழிக்க மருந்தும் (பா-5)

கொள்ளவே நஞ்சுதின்ற பேர்கட் கெல்லாங் குணமாக நீலிவேர்ப் பட்டை தன்னை, அள்ளவே காடியிலே அரைத்து ஊட்ட அடவாக நஞ்சுகக்கி மயக்கம் வாங்கு மெள்ளவே அளிகருவை யழிக்க வேண்டில் மேன்மையாய்ச் சோதனையை இடித்து மாப்போல், தள்ளவே பூநீறுபடிதான்போட்டுத் தயவாக நீறுபடியொன்றுவாரே.

வாரப்பா படிகால்தான் வாங்கிக் கொண்டு வகையாக முந்நீரில் பிசைந்து பின்பு, தாரப்பா அந்திசந்தி மறுநாளொன்று தான்கொடுக்கக் கர்ப்பமது அழிந்து வீழும், கூரப்பா இந்நீரை மூன்று நேரங் குறிகண்டால் மாவப்பா கொடுக்கப் போகா, சேரப்பா இந்தரிசி கஞ்சி வைத்துச்சிறப்பாகக் கருப்புக்கட்டிபோட்டுக் கொள்ளே

கொள்ளவே உதிரமது அதிகங் கண்டால் குணமான வேம்பின் பட்டை நனைத்து வைத்து, நள்ளவே மோரு விட்டுப்பிழிந்துகொண்டு நலமாக ஒருநாளி லாறுவேளை, மெள்ளவே கொடுத்துவிட உதிரம் நிற்கு மேன்மையா யாறுதிங் களப்பா கேளு, தெள்ளவே குச்சியிலே துணியைச் சுற்றித் தெளிவாக எருக்கம்பால் தடவி வையே.()

வையப்பா அல்குலிலே விரலைவிட்டு வகையாகச் சுற்றியங்கே பார்க்கும்போது, ஐயப்பா உந்தியுட பள்ளம்போலே அடைவாகக் குழியொன்று இருக்கும்பாரு, வையப்பா கருக்குழிதான் வாயைமூடி வகையாகத் தானிருக்கு மறிந்து பார்த்துக், கையப்பா விரலோடே குச்சியிட்டுக் கணக்காக நெல்நீளம் வைத்துப்பாரே. ()

பாரப்பா உதிரமது காணுமட்டும் பண்பாக இம்முறைபோல் பாங்காய் வைநீ, சேரப்பா மல்லாந்து படுக்கச்சொல்லு செயலாக விடியுமட்டு மிந்தப் பாகம், வீரப்பா விடுப்புவலி சுரமுங் காணும் விதமான தலைவலியு மதிகமாகும், கூரப்பா திங்களொரு பத்தாணுலுங் குணமாகக் கழிந்துவிடுந் திண்ணந் தானே. (112)

(செ-பா.) 1. அவிரிவேர்ப் பட்டையைக் காடியிலரைத்துக் கலந்துகொடுக்க விஷங் கக்குவதுடன் மயக்கமும் தீரும்.

2. கர்ப்பமழிக்கும் மருந்தைப் பாட்டின்படி பார்த்துச் செய்து கொள்ளவேண்டும். அது பாவமானதால் விளக்கிக் காட்டவில்லை.

## 48. விதவையைக்கூடப் பிள்ளையில்லாதிருக்க. (பா-1)

தானப்பா கன்னியர்கள் விதவை கூடித் தான்தழுவ வேணுமென்றுல்சொல்லக்கேளு, மானப்பா தலைமுழுகும் பக்கந் தன்னில் மைந்தனே புணர்ந்திடவே கர்ப்பமில்லை, வீணப்பா விதுவறிய மாட்டா மற்றுன், விதமாகக் கொலைகள் வந்து நேரும் பாரு, ஊணப்பா இதுவல்லோ பாவம் பாவம் உத்தமனே அறிவாலே அறிந்து தானே. (103)

(செ-பா.) இதற்குப் பொருள் எழுதவில்லை. பாட்டின்படி உணர்ந்து கொள்ளவேண்டும்.

### 49. பார்வைக்குக் குளிகை. (பா-4)

தானென்ற பார்வைக்கு குளிகை சொல்வேன் தயவாகப் புண்ணாக்கிலையும் வீழியோடு, மானென்ற ஆவிரையுஞ் சங்கு கோவை மைந்தனே சின்னியொடு முட்டைநாறி, வானென்ற நிலவாகை இராசகனி வித்து வளமான முசல் காது வாகையப்பா, கோனென்ற கோழியுட அவரை யப்பா குணமான அறுகம்புல் தக்காளி தானே. ()

தானப்பா வேலியென்ற பருத்தி கூட்டித் தயவான மிளகாயி னிலையுஞ் சேர்த்து, பானப்பா பெருமருந்தினிலையுங் கூடப் பண்பான தோதகத்தி மேனி யப்பா, ஆனப்பாவிலுப்பையுட இலையுங் கேளு அடைவாக வகைவகைக்கு விராகனைந்து, ஊனப்பா பெருங்காயம் விராகனைந்து உத்தமனே சீனமது விராக னஞ்சே. (115)

அஞ்சப்பா இவையெல்லா மரைக்கும்போது அடைவாக எலுமிச்சம் பழச்சார் விட்டு, மஞ்சப்பா நாற்சாம மரைக்கும் போது மைந்தனே மெழுகதுபோ லிருக்கும் பாரு, தஞ்சமாய்க் குளிகையப்பா கழஞ்சு வீதம் தான் சேர்த்து நிழலுலர்த்திப் பதனம் பண்ணு, வஞ்சமில்லா மந்திரத்தை ஆயிரந்தா னோதி வகையாகத் தேவிக்குப் பூசை செய்யே. (116)

செய்யவே மந்திரந்தான் அம் உம் ஓமென்று செப்படா மம்மோடே றீயுஞ் சேரு, பையவே ஸ்ரீ முடனே சிங்கு வங்கு பண்பாக ஆயிரத் தெட்டேயோது, நையவே பார்வையுடன் சூனியங்கள் நன்றாகத் தீர்ப்பதற்குக் குளிகையொன்று, உய்யவே அப்பையுட சாற்றிற் கொள்ளு உறவான தேங்காயின் பாலிற் கொள்ளே. (117)

(செ-பா.) பிண்ணாக்கிலை, விழுதியிலை, ஆவாரை இலை, நல்லசங்கன் இலை, கோவையிலை, சிறுசின்னியிலை, எருமுட்டைப்

பீநாறி யிலை, நிலாவிரையிலை, எலுமிச்சம்பழத்தின் விரை, முசல் காது இலை, காட்டுவாகை இலை, அப்பைச் கோவையிலை, கோழி யவரை யிலை, அறுகம்புல், தக்காளியிலை, உத்தாமணியிலை, மிள காயிலை, பெருமருந்திலை, தோதகத்தியிலை, குப்பைமேனியிலை, இலுப்பையிலை, இவைகளெல்லாம் வகைக்கு அரைப்பலம், பெரு ங்காயம் அரைப்பலம், படிகாரம் அரைப்பலம் இவைகளையெல் லாம் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றால் நான்குசாம மறைத்து மெழுகுபதத்தில் ஒன்றேகால் வராகனெடை வீதம் மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு அம், உம், ஓம், மம், றீம், ஸ்ரீம், சிங்கு, வங்கு என்று ஆயிரத்தெட்டு தரம் உச்சரித்துத் தேவிக்குப் பூசைசெய்து வேளைக்கு ஒரு மாத் திரையாக அப்பைக்கோவை யிலைச்சாற்றிலாவது, தேங்காய்ப் பாலிலாவது கொடுத்தால் பார்வை சூனியம் இவை நீங்கும். பார்வைகொண்டவன் மஞ்சள் பூசிக்கொண்டு வெந்நீரில் ஸ்நா னம் செய்யவேண்டும்.

## 50. சூனியந் தீரப் புகை. (பா-3)

கொள்ளப்பா மஞ்சளை நீயரைத்துப் பூசிக் குண மான வெந்நீரில் ஸ்நானம் பண்ணு, அள்ளப்பா புகை யொன்று சொல்லக் கேளு அடவான எட்டிவிரை யெட் டிப் பட்டை, கள்ளப்பா செக்கடிக்கீழ் மண்ணும் மஞ்சள் கனிவான கொட்டைவிரைத் தூளுங் கூட்டி, உள்ளப்பா மாவிலிங்கம் ஆலின் பட்டை உத்தமனே வேம்பின்மேல் காக்கைக் கூடே. (118)

கூடேநீ ஆமையுட ஓடுங்கூடக் குணமான குதிரை யுட குளம்புங் கூட்டி, ஆடேநீ பாம்பின் சட்டை தீட்டுச் சீலை அடைவாகக் காக்கணம்பூ சிறுகீரை வேரு, நாடேநீ மாட்டுக் கொம்பு மூஞ்சூறின் தோல் நலமில்லாக் கம் பளியு முசுறு முட்டை, சாடேநீ இவையெல்லாம் நன்

றாய்ச் சேர்த்துச் சார்வாகத் தானிடித்து எடுத்துக் கொள்ளே. (119)

கொள்ளப்பா இந்தெடைக்குக் குங்கி லீயங் கொடி தாகத் தானிடித்து எடுத்துக் கொண்டு, மெள்ளப்பா புகை பிடிப்பாய் அந்தி சந்தி மேன்மையாய் மத்தியமென்ற வேளை மூன்றும், தள்ளப்பா ஏவலென்ற குணங்கள் யாவுந் தருவான புகைபில்லி ஆக்கை வைப்பு, விள்ளப்பா சக்கரங்கள் ஓலை வாட்டல் விதமான வேர்பிடுங்கல் தீருந் தானே. (120)

(செ-பா.) எட்டிக்கொட்டை, எட்டிப்பட்டை, செக்கின் அடிமண், மஞ்சள், மாவிலிங்கப்பட்டை, ஆலின்பட்டை, வேப்ப மரத்தின் மேல்கட்டும் காக்கைக் கூண்டு, ஆமை ஓடு குதிரைக் குளம்பு, பாம்புத்தோல், தீட்டுத்துணி, காக்கட்டாம்பூ, சிறுகீரைவேர், மாட்டுக்கொம்பு, மூஞ்சூறின்தோல், பழங்கம்பளி, முசுறு எறும்பின்முட்டை, இவைகளை யெல்லாம் சம எடையாகச் சேர்த்து இடித்துத் தூளாக்கி இந்தத் தூளுக்குச் சமம் குங்குலியத்தூள் கலந்து வைத்துக்கொண்டு காலை, உச்சி, மாலை என்கிற 3-வேளையும் புகைபோட்டால் ஏவல் குணங்கள், பில்லி, பொம்மை புதைத்தல், சக்கரங்கள், ஓலைவாட்டல், வேர்பிடுங்கல் இவையனைத்தும் தீரும்.

## 51. பிரமைக்குப் பேரண்டபற்பமும், நசியமும், தேய்ப்புச் சாறும். (பா-4)

தானென்ற பிரமையது கொண்ட பேர்க்குத் தயவாக மருந்தொன்று சொல்லாக் கேளு, கோனென்ற போகருட கடாசத் தாலே குணமாகப் புலிப்பாணி விளக்கஞ் செய்தேன், ஊனென்ற கபாலத்தை எடுத்து வந்து உத்தமனே எலுமிச்சம் பழச்சாற் றாலே, நானென்ற சீனமதைப் பொடித்துப் போட்டு நலமான கல்வத்தி லரைத் திடாயே. (121)

அரைத்தெடுத்து வில்லைதட்டி யுலரப் போட்டு அடவாகப் புடம்போட்டு எடுத்துக் கொள்ளு, விரைத்தவுடன் பொடியாக்கிப் பதனம் பண்ணி விதமாக விராகனெடை கொடுக்கக் கேளு, உரைத்தவுடன் கத்தபத்தின் பாலை யப்பா உறவாகத் துட்டெடைதான் ரெண்டே யாகும், குறைத்தவுட னிஞ்சிச்சா றதனிற் பாதி குணமாக விதுநேர் சர்க்கரையுங் கூட்டே. (122)

கூட்டப்பா ஈராறு நாளே கொள்ளக் குணமாக அந்தி சந்தி யிந்தப் பாகம், ஆட்டப்பா நசியமது தும்பைச் சாறு அடைவாகத் தான்விட்டுச் சொல்லக் கேளு, சூட்டப்பா பேய்ப்பீர்க்குப் பேய் மிரட்டி சுகமான பேய்ப்புடலும் பேய்க் குமட்டி, நாட்டப்பா பேயத்தி பேயாந் தும்பை நலமான எலுமிச்சம் பழமு மாமே.

ஆமேநீ யிற்சாற்றைத் தேய்த்துத் தேய்த்து அடைவாக நூறுகுடஞ்சலத்தை வாரு, தாமேநீ யீராறு நாள் தான் வாரு தயவாகப் பத்தியந்தான் சொல்லக் கேளு, வாமேநீ பச்சரிசி பருப்பிேேடு வளமாகத் தான்கொடுப்பா யுப்பா காது, ஆமேநீ தேவரொடு பிரமை பித்தம் அடவான வஞ்சனையுந் தீருந் தானே. (124)

(செ-பா.) கொளுத்தாத மனுஷன் தலை யோடு ஒன்று கொண்டுவந்து சுத்திபண்ணிப் பொடியாக்கிக் கல்வத்திலிட்டு ஒரு பாத்திரத்தில் எலுமிச்சம்பழச் சாற்றைப் பிழிந்துகொண்டு அதில் சுமாராகக் கொஞ்சம் படிகாரத்தைத் தூள்பண்ணிப் போட்டு அரைமணிநேரம் பொறுத்துப்பிறகு அந்தச்சாற்றை விட்டு மேற்படி மண்டை யோட்டை அரைத்துப் பில்லைதட்டி வெயிலிலுலர்த்திக் கனபுடம்போட்டு எடுத்துப் பொடிசெய்து வைத்துக்கொண்டு, இரண்டு தம்பிடி எடை கழுதைப்பாலும் 1-தம்பிடி எடை இஞ்சிச்சாறும் 3-தம்பிடி எடை வெள்ளைச்

சர்க்கரையும் ஆகிய மூன்றையும் கலந்துகொண்டு அதில் மேற்படி பற்பம் 1-வராகனெடை கலந்து காலை, மாலை 2-வேளையும் 12-நாள் உட்கொள்ளவேண்டும்.

இதற்கு நசியம்:—தும்பைப் பூவையிடித்துச் சாறு பிழிந்து மூக்கில் நசியம் பண்ணவேண்டும்.

இதற்கு தேய்ப்புச்சாறு:—பேய்ப்பீர்க்கு, பேய்மருட்டி, பேய்ப்புடல், பேய்த்தும்மட்டி, பேயத்தி, பேய்த்தும்பை, எலுமிச்சம்பழம் இவைகளின் சாறுகளை யெல்லாம் ஒன்றாய்க் கலந்து பன்னிரண்டு நாள் காலையில் காலையில் தேய்த்து 100-குடம் ஜலத்தை வார்க்கவேண்டும். பச்சரிசியும், பச்சைப்பயறும் சேர்த்து உப்பு போடாமல் கஞ்சிகாய்ச்சிக்கொடுக்கவேண்டும். இப்படிச் செய்தால், பிரமை, பித்தம், வஞ்சனை, தேவகணம் இவைகள் தீரும்.

மண்டை ஓடு சுத்தி:—உழமண்ணில் போட்டுச் சலம்விட்டு நன்றாய்க் கொதிக்கவைத்தலம்புதல்.

## கிரகசார சாந்தி. (பா-3)

தீருமப்பா சாந்தியொன்று சொல்லக்கேளு திட்டமாய்க் கிரகமென்ற சாரந் தீர, சாருமப்பா பனிரண்டு ராசி யோர்க்குச் சகலமுமாங் கிரகங்க ளிருக்கும் பாரு, வீருமப்பா வீடடைத்துத் தகடு தன்னில் வீதமாய்க் கும்பம்வைத்துச் சோடசஞ் செய், கூறுமப்பா ஓமமுதல் சாந்திக் கெல்லாம் கூறுவோ மந்திரத்தைச் சொல்லக் கேளே. (125)

கேளேநீ நவக்கிரக தியானஞ் சொல்வேன் கெணிதமுடன் அம் ஸ்ரீயும் சம் ஸ்ரீயும் ஆளேநீ ஸ்ரீநசி ஸ்ரீமசி உமகிலி அடவாகச் சாயுச்சறீ நசி அங்கிஷநசி யென்று, நாளேநீ ஆயிரத்தெட் டுருவையோதி நலமாகச் சாந்தி செய்து மருந்தையூட்டு, கோளேநீ கடிவிஷங்களெல்லாம்

போகுங் கொடிதான அசாத்திய மென்றுற் செய்யொ ணுதே. (126)

செய்யாதே பொய் கோபங் கொலை திருட்டுச் செய லான வைத்தியங்கள் செய்யும் பக்கம், வையாதே பெண் களுடன் சேர்ந்திடாதே மையல்மிகக் கொள்ளாதே கிரு து செய்யாதே, வையாதே யவரிடத்தில் வீண்பேசாதே வகையான வல்வசையே சொல்லிடாதே, பையாதே தேக மதில் தேனையுண்டு பண்பான வண்டதுபோல் பொரு ளைச் சாரே. (127)

இந்தக் கிரகசார சாந்தியும், அதற்கு மந்திரமும் பரம்பரைக் குரு முகாந்தரமாகத் தெரிந்துகொள்வதுடன், பாட்டின் படியும் பார்த்துச் செய்து கொள்ளக்கடவர்.

## 53. சூந்யத்திற்கு எண்ணெய். (பா-7)

சாராதே சூநியங்கள் தீர்க்க எண்ணெய் சாற்றுகி றேன் சுடுதுருத்தி தவமுருங்கை, வீராதே முயல்காது செந்நா யுருவி வினையாகுங் கோவை மிளகுத் தக்காளி, சீராதே நாய்ப்பாகல் வட்டத் துத்தி சிறப்பான அசுவ கெந்தி சிறுகீரை சூரி, மீராதே நிலவாகை நன்னுரிபாலை மிதமாக வேர்க்கால் பலஞ் செப்பினேனே. (128)

செப்புவே னெரிஞ்சியு முருங்கை வாகையோடு செ ழித் திருக்கும் முட்டியுடன் நாமக் கோவை, கப்புவே பேய்ப் பருத்திக் கண்டங் காரி கடியமரு ளூமத்தைப் பேய்ப் பீர்க் கப்பை, வெப்பகலவருமேனி பெருந்தக் காளி வேடிதமாஞ் சின்னியிலை யிவைகள் சாறும், அப்ப மிதுவகைக்கு வகை படியதாக அரைத்துவிட்டு எட்டொ ன்றுய்க் குறுக்கி வாங்கே. (129)

குறுக்கியே எள்ளெண்ணெய் நாழிவிட்டுக் கூறிய முன் வேரின்வகை சூரணித்து, துறுத்தியே யலைத்ததி கைப் பூண்டு மூன்று துணியும் வவ்வால் தோல்பல மரைகால் சேர்த்து, முறுக்கியே வேம்பாடம் உள்ளி யோ மீம் முனையான கருஞ்சீரகமுங் கிராம்பு, பெருக்கிய காநீங்கோஷ்டஞ் சாதிபத்திரி பேணுங்கோ ரோசனையு முனையாக் கூட்டே. (130)

முனையாக வகைக்கரைக்கால் பலமதாக மூட்டியிடி சூரணமும் பொடியு மொன்றாய், வினையறுக்கு மெண்ணெயிலே பொடியும் போட்டு விரவிவெந்து மெழுகு பதந்தனில்வடித்து: எனையாளுங் கணபதிக்கு மலருஞ் சூட்டியெழுபழங்காய் தட்சணையும் வைத்துப் போற்றிப் பனையவேதேகமதில் துவளை போட்டால் பறக்குமே சூனியங்கள் பகரக் கேளே. (131)

கேளேநீ முகமாறு மாங்கிஷந் தெரிதல் கெடியம்பு தான்றெரிதல் முட்டுச்சூன்யம், நீளேநீ பாவமுட்டு விளக்கெரித்தல் நிலையாண முளையடித்தல் அட்டை தைத்தல், சூளேநீ பெண்கட்டு ஆணின் கட்டு சுருக்காக அனலெரிவு குடல்கள் வெப்பு, வாளேநீ கம்பியொடு சூஸ்தி ரங்கள் வட்டதிலதம் மெதிரேற்றுஞ் சூனியமாமே. (132)

சூனியமாங் கட்டைதனில் பதலி பாம்புச் சுணங்குடனே பச்சோந்தி விரியன் பல்லி, வானியமாம் புலிமுயல் கழுதைப் பன்றி வலுமுதலை நரியுடும்பு தவளை மீன்கள், ஈனியானை எலிபட்சி தலையில் வைத்து இதமாக ஈடமொடு சத்திபாதை, கானியா மோலைமுதல் சக்கரம் வாட்டுக் கடுப்பெதிர் வைத்திடு சூனியமும் பேரே. (133)

பேரான நரம்புசுற்றி யுடம்பெரிவு தானும் பொலிவுடனே விராகமுடன் ரத்தம் விக்கல், நேரான பாவை

செய்து முடக்க லாக்கி நிலையாத பிரம்மையொடு மயக் கஞ் செய்தல், மாரான கண்படலங் கண்ட மாலை மதி கெட்ட விப்புருதி மாருட் டங்கள், வீரான கொடிமரங் கள் பாவை வைப்பு வெடிமலங்கள் வஞ்சனை சூனியக்க போமே. (254)

(செ-பா.) சுடுதூரத்தி, தவசுமுருங்கை, முசற்காதிலை, செவப்பு நாயுருவி, கோரை, மிளகுதக்காளி, நாய்ப்பாகல், வட்டத் தூத்தி, அமுக்கரா, சிறுகீரை, நத்தைசூரி, நிலாவிரை, நன்னாரி, பாலை, இவைகளின் வேர்கள் வகைக்கு கால்பலம், சிவப்பு நெருஞ் சில், முருங்கை, காட்டு வாகை, பேராமுட்டி, நாமக்கோவை, பேய்ப்பருத்தி, கண்டங்கத்திரி, மருளூமத்தை, பேய்ப்பீர்க்கு, அப்பைக்கோவை, குப்பைமேனி, பெருந்தக்காளி, சிறுசின்னி இந்த இலைகளின் சாறுவகைக்கு ஒரு படியாக ஒரு பாண்டத்தி விட்டு எரித்து எட்டில் ஒன்ருகக் குறுக்கி அதில் ஒரு படி நல் லெண்ணெய்விட்டு அதில் முன்வேர் வகைகளைச் சூரணஞ் செய் தும், திகைப்பூண்டு என்னும் பூச்சி மூன்றும், வவ்வால்தோல் அரைக்காற்பலமும், வேம்பாடம் பட்டை, வெள்ளைப்பூண்டு, ஓமம், கருஞ்சீரகம், இலவங்கம், பெருங்காயம், கோஷ்டம் சாதிபத்திரி, கோரோசனம் இவைகளெல்லாம் வகைக்கு அரைக் கால் பலமுமாக எடுத்துச் செய்த சூரணமும் அந்த எண் ணெயில் போட்டு எரித்து மெழுகுபதத்தில் வடித்துக் கணப திக்குப் பூசைசெய்து, சரீரத்தில் துவளைபோட்டால், சூனிய வகைகளின் பேதங்களாகப் பாட்டில் சொல்லப்பட்ட யாவும் நீங்கும்.

## 54. மூலரோகத்திற்குச் சூரணம். (பா-2)

போமேநீ மூலமென்ற ரோகந் தீரப் பூட்டுகிறேன் மருந்தொன்று சொல்லக் கேளு, ஆமேநீ தூதுவேளை மூலத்தோடு அடைவான மருட்கிழங்கு கருணை மூலம், தாமேநீ பிரண்டைவேர் நல்ல வாரை தயவான் காட்டு

டைய கருணை மூலம், வாமேநீ மிளகருணை மூலந் தானும் வளமான அறுகினுட கிழங்கு தானே. (135)

தானென்ற நீர்ப்பூண்டு கிழங்கு மூலி தயவாக வுரலி லிட்டுத் தூளாய்ச் செய்து கோனென்ற பொடியெல்லாஞ் சமனய்ச் சேர்த்துக் கொடுப்பாயே விரற்கடைதான் தேனிற் கொள்ள, நானென்ற நாற்பதுநாள் கொள்ளும் போது நடுநடுங்கி மூலமெல்லாம் ஓடும் பாரு, வானென்ற போகருட கடாசத்தாலே வளமான புலிப்பாணி விளம்பி னேனே. (136)

(செ-பா.) அது வேளைவேர், மருட்கிழங்கு, கருணைக்கிழங்கு பிரண்டைவேர், நல்ல ஆரை, காட்டுக் கருணைக்கிழங்கு, அறுகங் கட்டை, நீர்முள்ளிவேர், இவைகளை யுலர்த்தித் தனித்தனியிடித் ததுள் சமமாகச்சேர்த்து மூன்று விரற்கடைகொண்ட அளவு காலை, மாலை 2-வேளையும் தேனில் நாற்பதுநாள் சாப்பிட்டால் சர்வ மூல ரோகங்களும் நிவர்த்தியாகும். இதற்கு இச்சாப்பத்தி யம் இருக்கவேண்டும்.

## 55. கிரந்தி, அரையாப்புக் கேண்ணேய் (பா-4.)

விளம்புகிறே னெண்ணெயொன்று சொல்லக் கேளு விதமான சங்கோடு சங்கங் குப்பி, உளம்புகிறேன் கரு நொச்சி சுடுது ரத்தி உத்தமனே வெள்ளறுகு சின்னி யோடு, தளம்புகிறேன் கிரந்திநாயகமுங்கூடத் தயவான பூவரசம் பட்டையோடு, குளம்புகிறேன் பாச்சாணை வாட் டித் தண்ணீர் குணமான நீர்ப்பூண்டுச் சார்தான் வாரே.

வாரப்பா வகை வகைக்குப் படிதான் வீதம் வகை யாக அளந்துவிட்டு எண்ணெய் நாழி, சேரப்பா வொரு நாள்தான் ரவியில் வைத்துச் சிறப்பாக மற்றுநா ளனலை மூட்டு, மாரப்பா எட்டொன்றாய்க் காயும்போது மைந்

தனே சரக்கு வகை சொல்லக்கேளு, கூரப்பா பறங்கியுட பட்டை தானுங் குணமான கருஞ்சீரங் கார்போ காமே.

ஆமேநீ கஸ்தூரி மஞ்சளோடு அடைவான வசம் புடனே வெள்ளைப் பூண்டு, தாமேநீ வகைவகைக்கு விராகனெந்து தயவாக எண்ணெயிலே பொடித்துபோடு, வாமேநீ மெழுகுபதந் தனில் வடித்து வகையாகப் படியரைக்கால் கொள்ளச் சொல்லு, போமேநீ மூன்றுநாள் கொண்ட பின்பு பொலிவான பத்தியந்தா னாறுநாளே.

நாளான ஏழாநாள் தலையை மூழ்கு நலமான வுப்பிட்ட பருப்பைச் சேரு, கோளான நாற்பதுநாள் கடு கொள்ளாதே குணமான வாழையிலை வழைக்காயுந், தேளான கரப்பனென்ற தெல்லாந் தள்ளு தெளிவான பெண்மயக்கஞ் சற்று மாகா, பாளான கிரந்தியரையாப் புச் சூலை பண்பான மேகமெல்லாந் தீருந்தானே.

(செ-பா.) சங்கு, சங்கங்குப்பி, கருநொச்சி, சுடுதூரத்தி, வெள்ளறுகு, சின்னி, கிரந்திநாயகம், பூவரசம்பட்டை, கொடிக்கள்ளி வதக்கிப் பிழிந்தது, நீர்முள்ளி இவைகளின் சாறு வகைக்கு ஒருபடியாக விட்டு, அதில் ஒருபடி சிற்றாமணக் கெண்ணெய் விட்டு ஒருநாள் வெயிலில்வைத்து மறுநாள் அடுப்பேற்றி எரித்து எட்டில் ஒருபாகமாகச் சுண்டிவருகிற சமயத்தில், பரங்கிச்சக்கை, கருஞ்சீரகம், கார்போகரிசி, கஸ்தூரிமஞ்சள், வசம்பு, வெள்ளைப்பூண்டு, இவைகள் வகை ஒன்றுக்குப் பலம் அரை, இடித்து வஸ்திரகாயம் பண்ணி அதிலேபோட்டு மெழுகு பதத்தில் வடித்து வேளைக்கு 2-பலம் வீதம் காலை மாலையில் மாத்திரம் மூன்றுநாள் சாப்பிட்டு அந்த மூன்றுநாளும் மறு மூன்று நாளும் ஆகிய ஆறுநாளும் உப்பில்லாப் பத்தியமாயிருந்து ஏழாவதுநாள் ஸ்நானஞ்செய்து உப்பிட்டுத் துவரம்பருப்புச் சேர்ந்த அரிசி கஞ்சி சேர்க்கவேண்டும். 40-நாள் வரைக்கும் கடுகு, வாழையிலை, வாழைக்காய், கரப்பான்பண்டம், பெண்போகம்

இவைகளை நீக்கவேண்டும். கிரந்தி அரையாப்பு, சூலை, சர்வமேகங்கள் ஆகிய இவைகளெல்லாம் தீரும்.

### 56. நால்யுகங்களின் வரலாறு (பா-4)

தானான முன்யுகத்தில் பிரமாவுக்குத் தாயான பார்வதியாள் தந்தசாபம், கோனான தண்டாயுதத்தைப் பூசை செய்து கொடிதான சாபமது நிவர்த்தி யாச்சு, தேனான திரேதாயின் யுகத்தி லப்பா தேவேந்திர னுக்குத்தூருவாசர்சாபம் மானான தேவர்கோன் பூசைசெய்து மைந்தனே முனிசாபந் தீர்ந்து போச்சே. (141)

போனபின்பு சொக்கலிங்கந்தன் னிற்சென்றுபொன்னுலகில் தேவேந்திரன் பட்டமாச்சு, ஆனபின்பு துவாபரத்தில் போகநாதர் அடைவான கற்சிலையி லம்மனென்று, கோனபின்பு கொங்கணருங் கருவூராருங் கூட்டிவந்து முன்விட்டா ரையன் முன்னே, சோனபின்பு கற்சிலையைச் சேர்ந்தபோது சிந்தைதனிற் சிலையென்று அறிந்திட்டாரே. (142)

அறிந்தபின்பு அச்சிலையைப் பார்த்து அம்மா அபசாரபடியேற்கு நிவர்த்தி யென்ன, வறிந்தபின்பு சிவகிரியில் தண்டபாணி மன்னவரைப் பூசிக்க நிவர்த்தியாகும், புரிந்தபின்புதேவியென்ற சிலைதான்சொல்லப் போகருமே துவாபரத்தில் பூசை செய்தார், சரிந்தபின்பு அபசாரம் நிவர்த்தி யாச்சு சார்வான கலியுகத்தில் சொல்லக் கேளே.

கேளே நீகலியுகத்தி லிருநூற்றைந்தில் கேசரிபோல் புலிப்பாணி பேரும் பெற்றேன், சூளேநீ சலந்திரட்டிக் கரத்திலேந்திச் சுகமாக வேங்கையின்மேல் ஏறிச்சென்று நாளேநீ சிவகிரியில் தண்டபாணி நாதருக்குப் பூசித்து அருளைப் பெற்று, ஆளேநீ போகருட குகைமே லையா அஷ்ட சத்தி பதிதனிலே வாழ்ந்தேன் பாரே. (144)

இவ் யுகங்களின் விஷயங்களைப் பாட்டிலுணர்ந்து கொள்ளவும்.

## 57. மேருமலையின் 4 பக்கமுள்ள மனிதர் வரலாறு. (பா-8)

பாரேநீ யுகந் தோன்றுஞ் சொல்லக்கேளு பண்பான மேருவுக்கு வடபாகத்தில், தீரேநீ மனிதரப்பா தங்க வண்ணம் திகழ்மதியா முயரமப்பா சொல்லக் கேளு, வாரேநீ நாலாயிர முழமே யாகும் வளமான ஆலங்கனி யந்நீரோடே, சீரேநீ அருந்துவது அதுதானப்பா சிறப்பான சதாசிவமே தெய்வந் தானே. (145)

தானுகும் வயதுதான் நாலு லட்சம் தயாகச் சத்தியத்தைக் கைவிடாதார், கோனுன பொய்யொன்று சொல்லி டாதார் குவலயங்கள் கைலையல்லால் வேறுன்றில்லை, சேனுன மேருவுக்கு வடபா கத்தில் செயலான மனிதருட செய்கை யப்பா தேனுன போகருட கடாட்சத் தாலே தெளிவாகப் புலிப்பாணி விளம்பினேனே. ()

விளம்புகிறேன் மேருவுக்குக் கிழக்கே யப்பா விதமான மனிதர்கள் தாம்நீல வண்ணம், தளம்புறேனுயரமது நானூ றுகும் தயவாக நாவற்கனியு மந்நீரோடே, கிளம்புறே னருந்துறது இதுதா னப்பா கிருபையுள்ள விஷ்ணுவுமே தெய்வ மாகும், நளம்புறேன் வயதுதா னிரண்டு லட்சம் நலமில்லா அதிசயங்க ளில்லை தானே. (147)

இல்லான மேருவுக்குத் மேற்கேயப்பா இருப்பார்கள் மனிதரப்பா ரத்தவண்ணம், வல்லான வுயரமது நாற்பதாகும் வகையான மாங்கனியு மந்நீரோடே, எல்லாரு மருந்துறது இதுதான்பாரு இதமான பராசத்தி தெய்வமாகும், சல்லான வயததுதான் லட்சமாகும் சார்வான சத்தியமும் பொய்யில் லாரே. (148)

பொய்யில்லை மேருவுக்குத் தெற்கே ஐயா பொங்க முடன் மனிதருட நிறத்தைக் கேளு, மையில்லா நிறமது தான் அந்த வண்ண மைந்தனே யுயரமது முழந்தா னுலு, செய்யில்லா அறுசுவையு மநேகவர்க்கஞ் செயலான அன்னமொடு சருகை நீரும், எய்யான பாலோடு கிழங்கு காய்கள் இதமான அமுர்தமது கொள்வாருண்டே. ()

உண்டான அநேகவித தெய்வ முண்டு உத்தமனே சாஸ்திரங்க ளனேக முண்டு, பண்பான பொய் கொலையுங் களவு முண்டு, பண்பில்லா விசுவாசம் பாவ முண்டு, செண்டான முறைமை கெட்டு மையல் கொண்டு செய லான பாக்கியமும் வருமையுண்டு, கொண்டான வயது தானூ றென்பார்கள் கொற்றவனே நிச்சயந்தா னில்லை தானே. (150)

தானென்ற கோயில்குளம் ஆறு முண்டு தயவான புண்ணியமும் பாவமுண்டு, மானென்ற சித்தரென்றும் முனிவ ரென்றும் மகிமையாந் தபோதனர்கள் பெரியோ ரென்றும், கோனென்ற வரசரென்றும் குருக்களென்றும் கொடிதான பிரமலபி கடந்தோ ரென்றும், வானென்ற கிரகங்கள் நோய்க ளென்றும் வகைவகையாப் பலசாதி யநேகந் தானே. (151)

தானான போகருட கடாட்சத்தாலே தயவாகப் புலிப்பாணி விளக்கஞ் செய்தேன், வீணாக அவரவர்கள் செய்த கர்மம் விளைந்ததடா நோய்போல அநேகங்கோடி கோடி கோணாக வந்தகர்மந் தீரவேண்டிக் குணமாகத் தான தர்மஞ் செய்ய வேண்டும், தேனாகத் தருமங்கள் செய்யா விட்டால் தேகமது நோயிட்ட பாண்டமாமே. (152)

இவ்விவரங்களைப் பாட்டிலுணர்ந்து கொள்ளவும்.

## 58. மருந்தீட்டுக்கு முரிப்பு. (பா-1.)

ஆமேநீ மருந்தீடு முரிய வேண்டில் அப்பனே இலவி னுட பட்டை கொண்டு, தாமேநீ யெலுமிச்சங் காயின் சோடு தயவாக அரைத்துக்கா டியிற்கலக்கி, வாமேநீ துட்டெடைசர்க் கரையுங்கூட்டி வளமாகக் கொடுத்த வுடன் மயக்கந் தீரும், போமேநீ பெண்மயக்கம் ஆண் மயக்கம் போச்சேநீ மூன்றுநாள் கொடுத்தபோதே.

(செ-பா.) இலவம்பட்டை எலுமிச்சங்காயளவு அரைத்து புளித்த சலத்தில் கலக்கிக் கொடுத்தால் பெண்மயக்கம் ஆண் மயக்கமானாலுந் தீரும்.

## 59. சூலைக்குக் கற்கம். (பா-1.)

போதேநீ சங்கம்வே ரிழைத்தரைத்துப் பொங்கமு டன் புன்னைக்காய் வீதமாகச் சூதேநீ யில்லையடா காடி யிற் கொள் சுருக்கான மண்டலத்தில் வியாதி யெல்லாம், ஊதேநீ யோடிவிடும் நாடுவிட்டு உத்தமனே பத்தியந்தா னில்லையப்பா, தாதேவெள் ளாட்டமுரி தன்னிற்கொள் ளச் சார்வாகச் சூலையது தீருந்தானே. (154)

(செ-பா.) சங்கம் வேர் இழைத்துப் புன்னைக்காயளவு எடுத் துப் புளித்த தண்ணீரிற் கலக்கி 1-மண்டலம் கொடுத்தால் வியாதி யெல்லாம் நீங்கும். இதற்குப் பத்தியமில்லை. இதையே வெள்ளாட்டு நீரிற் கொண்டால் சூலை உடனே நீங்கும்.

## 60. கர்ப்பமுண்டாக எண்ணெய், நசியம். (பா-4.)

தானேதா னின்னமொன்று சொல்லக் கேளு தய வான வீழியிலைச் சாறு நாழி, மானேதான் தைவேளைத் சாறு நாழி மைந்தனே பிரமியிலைச் சாறுநாழி, கோனே தான் கொட்டையிலைச் சாறுநாழி, கொடிதான நிலவா கைச் சாறுநாழி, தேனேதா னாவின்பால் படிதானுழி தெளிவாகச் சரக்கு வகை சொல்லக்கேளே. (155)

கேளேநீ மஞ்சளுடன் கடுகு கூடக் கெணிதமுட னிந்துப்பு வெண்கா ரந்தான், நாளேநீ கடுக்காயும் வெள் ளைப்பூண்டு நலமான ஆண்வசம்பு சுக்குங் கூடப், பாளேநீ வகைவகைக்கு விராகன் மூன்று பண்பாகப் பொடி செய்து இதனிற் போட்டுக் கோளேநீ விளக்கெண்ணெய் நாழிவிட்டுக் கொடிதாக மெழுகுபதந் தன்னில் வாங்கே.

வாங்கியே கணபதிக்கு முன்னே வைத்து வகையா கச் சோடசங்கள் செய்த பின்பு, பாங்குடனே மாத விடை மூன்றும் நாள்தான் பண்பாகத் தலைமுழுகிக் கரண்டி எண்ணெய், தாங்கியே கொடுத்துவிடு நாண்மூன் றப்பா தயவாக மறுபத்திய மொருநாள்காரு, தூங்கியே திரியாதே ஐந்தாநாளில் துருசாகச் சிரசுக்கு நீரை வாரே. (157)

வாரேநீ வறுத்தவுப்பு பொரிச்சா றப்பா வளமாக மற்றுநாளெல்லாஞ்சேரு, தீரேநீ மற்றுநாள் நசிய மொன்று தீர்க்கமாய் வேலியிலைவேரைத் தட்டிக் கூரேநீ வலதுநாசியிற் பிழிந்தால் கொற்றவனே ஆண்பிள்ளை பிறக்கும்பாரு, சீரேநீ யிடதுநாசியிற் பிழிந்தால் சிறப் பான பெண்ணென்றுஞ் செப்பினேமே. (158)

(செ-பா.) விழுதியிலை, தைவேளை, பிரமியிலை, கொட்டைக் கரந்தையிலை, நிலாவிரை, இவைகளின் சாறு வகைக்குப் படி 1, பசும்பால் படி 1, இவைகளை யெல்லாம் ஒன்றாய்க் கலந்து, கறி மஞ்சள், கடுகு, இந்துப்பு, வெங்காரம், கடுக்காய், வெள்ளைப் பூண்டு, ஆண்வசம்பு, (நீட்டாயிருக்கின்ற வசம்பு) சுக்கு இவை கள் வகை ஒன்றுக்கு மூன்று வராகனெடை பொடிசெய்து போட்டு விளக்கெண்ணெய் படி 1 விட்டு எரித்து மெழுகு பதத் தில் வடித்துக் கணபதிக்குப் பூசைசெய்து மாதவிடாய் ஆன மூன்றாவது நாள் ஸ்நானஞ் செய்து 4-வதுநாள் காலையிலிருந்து

தினமுங் காலையில் காலையில் ஒரு கறண்டி எண்ணெய்யாக 3-நாள் கொடுத்து 4-வது நாள் ஆரப்போட்டு ஐந்தாவது நாளில் ஸ்நானஞ் செய்விக்கவேண்டும். இந்த 4-நாளும் உப்பில்லாப் பத்தியமாயிருந்து 5-வதுநாள் வறுத்த உப்புச்சேர்த்த பொரிக் குழம்பு கூட்டி 6-வது நாளிலிருந்து எல்லாவற்றையுஞ் சேர்க்க வேண்டும். 7-வது நாளில் உத்தாமணி வேரை யிடித்த சாற்றை வலதுமூக்கில் நசியஞ்செய்தால், ஆண்பிள்ளைபிறக்கும். இடது மூக்கில் பிழிந்தால் பெண்பிள்ளைபிறக்கும்.

## 61. மேற்படிக்குத் துவலை, புகை. (பா-3)

செப்பினேங் துவலை யொன்று சொல்லக்கேளு சிறப் பான மாவிலைமா தலையுஞ்சோத்துத் தப்பினேங் கஸ்தூரி மஞ்சளோடு தாயகமா யிவைமூன்றுஞ் சமனாய்ச்சேர்த்து, அப்பினேஞ் சலம் விட்டு அரைத்து மைபோல் அடை வாக மேனி யெங்கும் பூசச் சொல்லு, வெப்பினே மேனேக்கி யுதிர்த்துப்போடு விதமாக வுதிர்ந்ததைத் தான் சேரவாரே. (159)

வாரினதை மாவிலையின் தன்னில் வைத்து வகையாக முகங்காட்டித் தலையைச்சுற்றிக் கோரினே னடுவாசல் குழியைத்தோண்டிக் குணமாகத் தான்புதைத்துச் சொல் லக் கேளு, ஆரினேன் சலமதுதான் சிரசில் வார்த்து அப் பனே புகையொன்று சொல்வேன்பாரு, தூரினேன் சாம்பிராணி அகிலின் கட்டை தூளிடித்துப் புகைகாட்டு நாள்தான் மூன்றே. (160)

மூன்றுநாள் துவலையிட்டுப் புகையும்போடு மூர்க்க முள்ள சிதம்பரத்தை மாறிக்கட்டு, ஈன்றுபோல் மூன்று திங்க ளிந்தப்பாகம் இதமான மாதவிடா யாகும்பக் கம், கூன்றுபோ லிம்முறையைச் செய்யும்போது குண மாகக் கர்ப்பமது தரிக்கும்பாரு, ஊன்றுபோம் போக

ருட கடாட்சத் தாலே உத்தமனே புலிப்பணி பாடி
னேனே. (161)

(செ-பா.) மாவிலை, மாதுளையிலை, கஸ்தூரிமஞ்சள், இந்த மூன்றையும் சமமாகச் சேர்த்துச் சலம்விட்டு மைபோலரைத்து அந்த ஸ்திரீயின் சரீரமெங்கும் அந்த ஸ்திரீயின் புருஷன் பூசிக் கொஞ்சநேரம்பொருத்துக் காலிலிருந்து மேல்நோக்கி முன் பூசின மருந்தை உதிர்க்கச்சொல்லி அவ்வாறு உதிர்ந்தபின் உதிர்ந்ததையெல்லாம் மாவிலையில் வாரி அந்த ஸ்திரீயின்முகத் திற்காட்டி அந்த ஸ்திரீயின் தலையைச் சுற்றி நடுவாசலில் ஒரு குழிதோண்டி அந்தத்தூளை அதில் புதைத்து ஸ்நானஞ்செய் வித்துச் சாம்பிராணியையும் அகில் கட்டையையும் சமமாகத் தூளிடித்து அந்தத் தூளை நெருப்பிலிட்டு வரும் புகையைக் காட்டவேண்டும். இவ்வாறு மூன்று மாதம் மாதவிடாயான காலத்தில் மும்மூன்றுநாள் செய்தால் கர்ப்ப முண்டாகும்.

## 62. சிவகிரிவளப்பம் (பா-2.)

பாடினேன் சிவகிரியின் மாற்றே தென்னில் பண் பாக ஆயிரத்தெட்டு மாற்று, சூடினே னவலோக மிதிலே யுண்டு சுருக்கப்பா சாஸ்திரமும் வேதையோடும், வாடியே திரியாதே நரையும் மாறும் வயதப்பா லக்கில்லை கெவனி யாவாய், நாடியே சுன்னமொடு சிந்தூரக் காடு நாயகனே அஷ்டசித்தி நடனந் தானே. (162)

தானென்ற நவசித்தர் கோடா கோடி தானடன மதி கமடா சித்தர் கூட்டங், கோனென்ற மலையுள்ளே விருட்ச மூலி குற்றமில்லை வேதையுந்தா னநேகஞ் செய்வார், வானென்ற தேவரொடு முனிவர் சித்தர் வருகிறதும் போகிறதுங் காணச் செய்யு, மானென்ற தேவரொடு தவ மேசெய்தோர் மைந்தனே சித்திமுத்தி பெறுவர் தானே.

இதைப் பாட்டினால் தெரிந்துகொள்ளவும்.

## 63. வராககிரிவளப்பம். (பா-1)

தானென்ற வராககிரி சருவில் மைந்தா தயவான வோடைகளும் ஆறு தோற்றுந், தேனென்ற அருவியடா மண்ணுங் கல்லுந் தெரியாமல் தங்கமா யிருக்கு மப்பா, பானென்றமூலிகையால் வேதை யாகும் பட்டமண்ணுங் கல்முதலாய்த் தங்க மாகுங், கோனென்ற சிலேபோலே கிடக்கும் பாரு கொற்றவனே யறியார்க ளாருந் தானே.

இதைப் பாட்டினுல் தெரிந்துகொள்ளவும்.

## 64. சதுரகிரிவளப்பம். (பா-2.)

தானான சதுரகிரி மேலே யப்பா தயவான உதக மொன்று இருக்கு தப்பா, மானான காஞ்சனமாங் காய சித்தி மைந்தனே அஷ்டசித்தி கெவுன சித்தி, கோனான தேவர் முதல் கணங்கள் யாவுங் கூப்பிட்டால் கேள்வி வந்து கேட்கும் பாரு, வானான சித்தருட கூட்ட மெத்த வளமான சஞ்சீவி மூலி யுண்டே. (165)

உண்டான மூலியைத்தான் குகையி னுள்ளே ஒளித் துவைத்தார் சித்தரெல்லாம் வெளியா மென்று, பண் டான சித்தருக்கு மூலி கிட்டும் பாவிகட்குங் காமிகட்குங் கிட்டுமோ சொல், செண்டான பூவுலகில் மனுட ரெல் லாஞ் செத்தவர்க ளெழுந்திருப்பார் திடங்கொள்ளாது, கொண்டான விதியாளி வந்தா னாகில் கூப்பிட்டுத் தான் கொடுப்பார் சித்தர் தானே. (166)

இதைப் பாட்டினுல் தெரிந்துகொள்ளவும்.

## 65. இருமலுக்கு லேகியம். (பா-2.)

தானான லேகியந்தான் சொல்லக் கேளு தருவான கரிப்பான்சாற் படிதா னென்று, பானான காணிச்சார்

நாழியொன்று பண்பான சங்கம்பழச் சாறு நாழி, வானான தேன்படிதா னரையுங் கூட்டி வளமான ஆவி னெய் படிகால் சேர்த்துக் கோனான திப்பிலியு மிளகுஞ் சுக்கு கொடிதான சிற்றரத்தை கடுக்காய் தானே. (167)

தானப்பா வகைக்குவகை விராக னைந்து தான்பொடித்து வடிகட்டி லேகியமாய்க் கிண்டு, வானப்பா நெல்லிக்கா யளவாய்க் கொள்ள வளமாக ஈராறு நாளுக்குள்ளே, கோணப்பா அந்திசந்தி கொண்டபோது கொடிதான இருமலெல்லாங் குடியே போகும், நாமப்பா பத்தியந்தானில்லை யையா நாயகனே லேகியந்தான் மேருவென்னே. (168)

(செ-பா.) கரிசலாங்கண்ணிச் சாறு, பொன்னாங்காணிச் சாறு, சங்கம்பழச்சாறு இவைகள் வகைக்குச் சாறு படி 1, தேன் படி அரை, பசுநெய் படி கால், திப்பிலி, மிளகு, சுக்கு, சன்னராஷ்டகம், கடுக்காய்த்தோல், இவைகள் வகைக்குப்பலம் அரை இடித்து வஸ்திரகாயஞ்செய்து அதில்போட்டு லேகியமாய்க் கிளறி நெல்லிக்காயளவு காலை, மாலை இரண்டுவேளையும் 12-நாள் சாப்பிட்டால் சர்வ இருமலுந்தீரும். பத்தியமில்லை.

### 66. சூலைவாயு மேகத்துக்கு தயிலம். (பா-2.)

என்னவே தயிலமொன்று சொல்லக் கேளு இதமான கொடிவேலி மூலி தானும், பன்னவே துலாமரைதானிடித்துப் போட்டு, பண்பான ஆலின்பட்டை சங்கம் வேர்ரு, நன்னவே வகைக்குவகை துலாமே கால்தான் நாயகனே யித்துடனே கூடச்சேர்த்து, அன்னவே தூணிநீர் விட்டுக் காய்ச்சு அப்பனே யெட்டொன்றாய்க் குறுக்கி வாங்கே. (169)

வாங்கியே யெள்ளெண்ணெய் நாழி வாரு வகையான மிளகுபல மரைத்துப் போடு, தாங்கியே பசுவின்

வெண்ணெய் பலந்தா னென்று தயவாக வேப்பெண் ணெய் படிகால் வாரு, பாங்கியே மெழுகுபதந் தனில் வடித்துப் பண்பாக முழுகிவரச் சூலை யேகுந், தூங்கியே திரியாதே மேகமெல்லாந் துடித்துவிழுந் தேயோடு மெதிர்நில்லாதே. (170)

(செ-பா.) சித்திரமூல சமூலம் 50-பலம், ஆலம்பட்டை சங்கம்வேர் இவ்விரண்டும் வகை ஒன்றுக்கு 25-பலம் சேர்த்திடித்து ஒருபாண்டத்திட்டு 16-படி ஜலம்விட்டு 2-படியாகும் படி சுண்டக்காய்ச்சி அந்தக் கஷாயத்தை வடித்து அதில் ஒரு படி நல்லெண்ணெய் விட்டு, அதில் 1-பலம் மிளகு அரைத்துச் சேர்த்து, ஒரு பலம் பசு வெண்ணெயும், வேப்பெண்ணெயும் கால்படியும்விட்டு மெழுகுபதமாகக் காய்ச்சி ஸ்நானஞ் செய்து வந்தால் சூலையும் சகல மேகங்களும் நிவர்த்தியாகும்.

## 67. பிரமேகத்திற்கு எண்ணெய். (பா-2.)

நில்லாத பிரமேகந் தீர வேண்டில் நிச்சயமாய்த் தேங்காய்ப்பால் படிதா னென்று, வல்லான பொடுதலைச் சார் படிதா னென்று, வளமான பிரமிச்சார் படிதா னென்று நல்லாக எரித்திறுத்து எண்ணெய் வாங்கி நாயகனே மூன்றுநா ளாறு வேளை, செல்லாகக் குடித்தவுடன் பிரமி யங்கள் சிறப்பாகத் தீருமடா திண்ணந் தானே.

திண்ணமாய்ப் பத்தியந்தா னுறு நாளுஞ் சிறப்பான ஆவின்பா லாகு மல்லால், வண்ணமாய் மற்றொன்று மாகாதப்பா வளமாக ஏழாநாள் தலையை மூழ்கு, உண்ணமாஞ் சீப்பிரமியம் ரத்தப் பிரமியம் உத்தமனே தீருமடா இந்த எண்ணெய், எண்ணமொன்று மில்லையடா விசனம் போகும் என்னசொல்வே னெண்ணெயுட வீரந் தானே.

(செ-பா.) தேங்காய்ப் பால் படி-1. பொடுதலைச் சாறு படி-1. பிரமிச்சாறு படி-1. இந்த மூன்றையும் சேர்த்து

எண்ணெய் திரளுகிற வரைக்கும் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு 3-நாள் காலை மாலை யிரண்டு வேளையும் ஒரு சிறுகரண்டி வீதம் சாப்பிட்டு உப்பில்லாப் பத்தியமாய் ஆறுநாள் பாலும் சாதமும் சாப்பிட்டு 7-வது நாள் ஸ்நானஞ் செய்து வழக்கப்படி சாப்பிட்டால் சீப்பிரமியம் ரத்த பிரமியம் இவை தீரும்.

## 68. சிவதைசூரணம். (பா-1.)

வீரந்தான் பேதியொன்று சொல்லக்கேளு விதமான சிவேதைவேர் பசுவின் பாலில், சீரந்தான் மிதக்கவிட்டுச் சுண்டக் காய்ச்சு திறமாக உலத்தியதைத் தூளாய்ப் பண்ணி, வாரந்தான் சரியெடைசர்க் கரையுஞ் சேர்த்து வளமாக ஏலமது அரைக்கால் சேர்த்துப், பாரந்தான் வெருகடித்தூள் வெந்நீ ரிற்கொள் பள்ளநற் சீதமுதற் கழிந்து போமே. (173)

(செ-பா.) சிவதை வேரைப் பசுவின்பால் மிதக்க விட்டுச் சுண்டக் காய்ச்சி யுலர்த்திப் பொடிபண்ணி அந்தத் தூளுக்குச் சரியெடை சர்க்கரையும் அரைக்கால் பங்கு ஏலரிசி தூளுஞ் சேர்த்து வெருகடியளவு வெந்நீரிற் கொள்ளச் சீதக்கட்டு முதல் வெளிப்பட்டு நல்லபேதியாகும்.

## 69. விப்புருதிக்குக் களி. (பா-2.)

போமேநீ விப்புருதி வந்தபேர்க்குப் பொங்கமுடன் சல்லிவேர்க் கிழங்கு வாங்கி, தாமேநீ கழுவியதைத் தோலைப் போக்கித் தயவாக நாலுபல மொருவேளைக்கு, வாமேநீ கம்புமா வரைப் படியும் போட்டு வளமாகக் களிகிண்டி அந்தி சந்தி, ஆமேநீ பசுவினெய் கருப்புக் கட்டி அடைவாக மூன்றுநாள் கொண்டிடாயே. (174)

கொண்டபின்பு மறுபத்திய மூன்றுநாளுங் குணமாக வெந்நீரும் அன்ன மாகும், கண்டபின்பு ஏழாநாள் சலத்தை வாரு கருவான விப்புருதி கரைந்து போச்சு,

அண்ட பின்பு சின்னிபொடு தலையின் சாறு அப்பனே
பத்தியந்தா னிந்தப் பாகம், உண்டிடவே அரையாப்பு
விப்புருதி தீரும் உத்தமனே மேகசலக் கட்டி போமே.

(செ-பா.) தண்ணீர்விட்டான் கிழங்கை நன்ருய்க் கழுவிச் சுத்திசெய்து தோலை நீக்கி ஒருவேளைக்கு 4-பலம் அரைத்து அரைப்படி கம்புமாவிற் போட்டுக் கலந்து களிகிண்டி இதில் பசும் நெய்யும், நல்ல வெல்லமும் சேர்த்துக் காலை மாலை 2 வேளையாக சாப்பிடவேண்டும். இப்படியே 3-நாள் செய்து சாப்பிடவேண்டும். இதற்கு மருந்து சாப்பிட்ட 3-நாளும் மறுபத்தியம் 3-நாளும் வெந்நீருஞ் சாதமும் உப்பில்லாமற் சாப்பிடவேண்டும். 7-வது நாள் ஸ்நானஞ் செய்விக்கவேண்டும். இதனுல் விப்புருதி கரைந்து போகும். தவிர, சின்னிச் சாற்றையாவது, பொடுதலைச் சாற்றையாவது 3-நாள் சாப்பிட்டு முன்பத்தியமிருந்தாலும் விருப்புருதியும் பிளவையும் நீங்கும்.

## 70. மருந்தீட்டுக்கு முரிப்பு. (பா-2.)

போமேநீ மருந்திடு வாந்தி யாகப் பொங்கமுடன்
கரிப்பான்சார் தன்னைவாங்கித் தாமேநீ யிருப்புடைய
படியிலப்பா தாழ்வாகக் காற்படிச்சார் படியில் தானும்,
வாமேநீ யெலுமிச்சம் பழச்சார் நேரே வளமாக அந்தி
சந்தி படியில் விட்டு, ஆமேநீ யுதயாதி துடங்கு முன்னே
அப்பனே உள்ளுக்குக் கொடுத்திடாயே. (176)

கெடுத்திடவே வாந்தியது காணும்பாரு கொடி
தான மருந்திடு எல்லாம் வீழும், அடுத்திடவே வாந்தியது
அதிகங் கண்டால் அடைவாகப் பச்சரிசி பருப்பிஞேடு,
கடுத்திடவே கஞ்சியது கொண்ட போது களங்கமற
வாந்தியது நிற்கும் பாரு, தொடுத்திடப்பா மருந்திடு
தீர்ந்து போச்சு தோஷமது விலகிற்று தொழிலைப் பாரே.

(செ-பா.) கரிசலாங் கண்ணிச்சாறு காற்படியை இரும்புப் படியில்விட்டு அத்துடன் அவ்வளவு எலுமிச்சம் பழச்சாறு கலந்து இருவேளையும் சாப்பிட்டால் வாந்தியாகும். அதனுல் இடுமருந்து விழுந்துவிடும். வாந்தி அதிகமானுல் பச்சரிசியும் பச்சைப்பயறும் கஞ்சி காய்ச்சிக் கொடுத்தால் வாந்தி நின்று போகும்.

## 71. சாதிலிங்கக்கட்டு (பா-2.)

பாரேநீ லிங்கமது விராகன் பத்து பாங்கான முலைப் பாலி லொருநாள் போட்டுச், சீரேநீ விராகனெடை தங்க ரேக்கு சிறப்பான லிங்கத்தின் மேலே சுற்றித், தேரேநீ வெண்காரம் பொரித்துப் பூசிச் சிறப்பாகச் செங்கொட் டை படிநறுக்கிப் போட்டு, வீரேநீ யிடித்தப்பா தேங் காய் மட்டம் விதமாக லிங்கத்தைப் பொதிந்து மூடே.

மூடியே சிறுசட்டி நடுவில் வைத்து மூர்க்கமுள்ள பசுவெண்ணெய் தேங்காய் வீதம், நாடியே செங்கொட் டை யுருண்டை மேலே நலமாக வைத்தெறிக்கக் கனல் தான் மீறி, ஆடியே தீயெரிந்து சாம்பலாகும் அப்பனே ஆறவிட்டு எடுத்துப் பாரு, கூடியே லிங்கமது உருகிக் கட்டிக் கொற்றவனே உருக்கதுபோ லிருக்கும் பாரே.

(செ-பா.) ஒரு பலம் லிங்கத்தை முலைப்பாலில் 1-நாள் ஊரவைத்தெடுத்து அந்த லிங்கத்தின் மேல் 1-வராகனெடை தங்கக் குந்தனத்தைச் சுற்றி வெங்காரம் பொரித்துப் பூசி, ஒரு படி சேராங்கொட்டையை நருக்கியிடித்தது தேங்காயளவு எடுத்து அதற்குள் மேற்படி லிங்கத்தை வைத்து அந்த உருண் டையை ஒரு சட்டியிலிட்டு அத்த உருண்டைக்கு மேல் ஒரு தேங்காயளவு வெண்ணெய் வைத்து எரித்தால் எரிந்து சாம் பலாகும். அதின் பிறகு லிங்கத்தை எடுத்துப் பார்த்தால் எழுகு போல் உருகிக் கட்டியிருக்கும்.

## 72. சூலை 18-க்கும் கஸாயம். (பா-4.)

பாரடா சிவன்வேம்பு சங்கம் வேரு பாங்காக முக்கழஞ்சு சித்திரமூலங், கூரடா வெள்ளறுகு அசுவ கெந்தி கொடிதான சங்குப்பி மூலத் தோடு, வீரடா பிரம்பினுட கிழங்கு கூட விதமான பூவரசம் பட்டைதானும் சிரப்பா நஞ்சுண்ட பட்டையப்பா சிறப்பாக வகைவகைக்குப் பலந்தான் ரெண்டே. (180)

ரெண்டான வாய்விளங்க மிளகு சுக்கு இதமான காட்டுச்சீ ரகமுமப்பா, பண்டான வகைக்குப்பலம் ரண்டதாகப் பசுமூலி சரக்கையுஞ் சேர்த்திடித் தெடுத்து, மூண்டாறு பங்காக்கி யொருபங் கப்பா முக்கியமாய்க் கியாழம்வைத்துப் பரங்கிப் பட்டை, பண்டாகக் கால் பலந்தான் முடிந்து போட்டுப் படிசலந்தான் விட்டெரித் தெட் டொன்றாய் வாங்கே. (181)

வாங்கியே பரங்கிப் பட்டை தன்னை வளமாகக் கியாழத்தி லரைத்து மைபோல், தூங்கியே திரியாமல் கலக்கிப் போட்டுத் துடிகொண்ட கட்டுலிங்கம் பணவிடையி லப்பா, தாங்கியே யுரைத்துவிடு இந்தப் பாகந் தயவாக ஈராறு வேளை கொள்ளப், பாங்கியே சூலைபதி னெட்டு தீரும் பாங்காகப் பத்தியந்தா னென்று காதே.

ஒன்றான வெந்நீரும் அன்னங் கொள்ளு ஓகோகோ மறுபத்திய மறுநாட் காரு, நன்றாக இப்படியே காத்தா யானல் நாயகனே நோயேது சூலையேது, சென்றான வியாதியது அணுகு மோசொல் செம்மையாய்ச் சடலமங்கே வலுத்துப் போகும், கன்றான போகருட கடாட்சத்தாலே கருவாகப் புலிப்பாணி பாடி னேனே. (183)

(செ-பா.) சிவனார் வேம்பு, சங்கம்வேர், இவை வகைக்கு $3\frac{3}{4}$- வராகனெடை. சித்திரமூலம், வெள்ளறுகு, அமுக்கிறாங்

கிழங்கு, சங்கங்குப்பிவேர், பிரப்பங்கிழங்கு, பூவரசம்பட்டை, விஷப்பாலைப் பட்டை, இவை வகைக்குப் பலம் 2, வாய்விளங் கம், மிளகு, சுக்கு, காட்டுச் சீரகம் இவை வகைக்குப் பலம் 2 ஆக எடுத்திடித்து ஆறுபங்காக்கி அதில் ஒரு பங்கை ஒரு மண் பாண்டத்திலிட்டு 1-படி சலம்விட்டு அதில் பரங்கிச்சக்கை கால்பலம்தட்டி ஒரு சீலையில் முடிந்து போட்டு அரைக்கால் படியாக சுண்டக்காய்ச்சி வடிகட்டி முடிந்துபோட்டதை அந்தக் கஷாயத்தால் மைபோலரைத்து அதில் கலந்து 12-வேளை முன் கட்டிய லிங்கம் பணவெடை இழைத்துக் கலந்து சாப்பிட்டு, 12-நாள் உப்பில்லா வெந்நீருஞ் சாதமும் சாப்பிட்டுவந்தால் சூலை நிவர்த்தியாகும்.

## 73. செங்கிரந்தி தடிப்புக்கு. (பா-2.)

பாடினேன் கொடிகள்ளி பயறு போலே பாங்காக வொருதுலாம் பாண்டத் திட்டு, நாடினேன் ஒருகுடத்தில் சலத்தை விட்டு நாயகனே யெட்டொன்றாய்க் குறுகக் காய்ச்சிக், கூடினேன் வடிகட்டுந் தரந்தா னேழு கொற் றவனே படியரைக்கா லந்தி சந்தி, நாடினேன் திரியாதே கொண்டா யானல் நலமாகச் செங்கிரந்தி தடிப்புப் போமே. (184)

மோமேநீ மூன்றுநா ளாறு வேளை பொங்கமுடன் மறுபத்திய மூன்று நாளாம், நாமேநீ யாறுநா ளீராறு வேளை நாயகனே உப்பில்லாக் கஞ்சி யாகும், ஆமேநீ ஏழாநாள் பத்தியத்தைத் தீரு அடைவாக விளக்கெண் ணெய் முழுகி வாநீ, தேமேநீ, கிரந்திவகை யெல்லாந் தீருந் திரமான போகருட கடாட்சந் தானே. (185)

(செ-பா) பாய்ச்சான் என்னும் கொடிக்கள்ளியைப் பயறு போல் துண்டுதுண்டாய் வெட்டினது 100-பலத்தை 1-பாண் டத்திட்டு 16-படி சலம் விட்டு 2-படியாகச் சுண்டக் காய்ச்சி ஏழுதரம் வடிக்கட்டி வேளைக்கு அரைக்கால்படி வீதம் காலை

மாலை 2-வேளையும் 3-நாள் 6-வேளை சாப்பிடவேண்டும். மருந்து சாப்பிடும் 3-நாளும் மறுபத்தியம் 3-நாளும் உப்பில்லாக் கஞ்சி சாப்பிடவேண்டும். 7-வது நாள் விளக்கெண்ணெய் ஸ்நானஞ் செய்து எல்லாவற்றையும் சேர்த்துக்கொண்டால் சகல கிரந்திகளும் நிவர்த்தியாகும்.

## 74. மந்தார சந்நிக்குத் தயிலம். (பா-2.)

தானென்ற ஒடுக்கானைப் பிடித்து வந்து தயவாகச் செஞ்சீலை மேலே சுற்றி, வானென்ற சலாகையிலே குத்திக் கொண்டு வளமாக வேப்பெண்ணெய் மேலே வாரு, கொனென்ற தீப்பிடித்து வேக வேக கொற்றவனே சுடரெண்ணெய் மேலே வாரு, பானென்ற எண்ணெயைநீ யேழுதரம் ஈந்தால் பண்பான எண்ணெயது தயிலமாச்சே. (186)

ஆச்சேநீ தயிலமது துட்டெடைதான் வீதம் அப்பனே உள்ளுக்குக் கொடுத்தபோது, வாச்சேநீ மந்தார சந்நியேது வகையாக மூன்றுநா ளாறு வேளை, வீச்சேநீ யாறுநாள் பத்தியமாய்க் காரு வித்தகனே உப்பில்லாக் கஞ்சியாகும், பாச்சேநீ முன்தயிலந் துவளை போடு பண்பாக ஏழாநாள் நீரை வாரே. (187)

(செ-பா.) ஒரு நல்ல ஆமையைக் கொண்டுவந்து ஒரு சிவப்புச் சீலை அதன்மேற் சுற்றி ஒரு கம்பியினால் குத்திப் பிடித்துக் கொண்டு கீழே அகன்ற மண்பாத்திரம் ஒன்றுவைத்து அந்த ஆமையைக் கொளுத்தி வேப்பெண்ணெய் விட்டுக்கொண்டிருந்தால் அடியிலிருக்கும் சட்டியில் சுடர்த் தயிலம் விழும். அப்படிவிழும் தயிலத்தையே எடுத்து மடக்கி மடக்கி 7-தரம் சுருக்கு கொடுத்தால் கடைசியாகத் தயிலம் நிற்கும் அதை எடுத்து வைத்துக்கொண்டு 3-நாள் 6-வேளை துட்டெடை உள்ளுக்குக் கொடுத்து மேலுக்குந் துவளை போட்டால் மந்தார சந்நி தீரும். மருந்துசாப்பிடும் 3-நாளும் மறுபத்தியம் 3-நாளும் உப்பில்லாப் பத்தியமா யிருக்கவேண்டும்.

## 75. காதடைப்புக்குத் தயிலம். (பா-2)

வாரேநீ யின்னமொன்று சொல்லக்கேளு வளமாகத் துலாமிளகாய் நிறுத்துப் போடு, சேரேநீ தூணிநீ ரெட்டொன்றுக்கிச் செப்பமுடன் மண்சட்டி தனிலிருத்துக், காரேநீ எள்ளெண்ணெய் நாழி விட்டுக் கனிவாக மிளகு பல மரைத்துப் போடு, தீரேநீ மெழுகுபதந் தனில் வடித் துத் தீர்க்கமாய் முழுகிவரப் பலனைக் கேளே. (188)

கேளேநீ நீர்ச்செரிப்பு திமிருவாதங் கெணிதமாய்ச் சோகையொடு மண்டைக் குத்து வீளேநீ மேல்வலிகள் சூலைநோயும் விதமான புடைசூலை மேக வாய்வும், பாளே நீ சொரி சிரங்குந் தீரும் பாரு பண்பான காதடைப்புக் காது குத்து, சூளேநீ யிவையிவைக ளெல்லாந் தீருஞ் சுகமான போகருட கடாட்சந் தானே. (189)

(செ-பா.) 100-பலம் மிளகாய் ஒரு பாண்டத்திலிட்டு 16-படி சலம் விட்டு 2-படியாகச் சுண்டக்காய்ச்சி இருத்து அதில் ஒருபடி நல்லெண்ணெய் விட்டு அதில் ஒரு பலம் மிளகை அரைத்துப் போட்டு மெழுகுபதமாகக் காய்ச்சி ஸ்நானஞ்செய்தால், நீர்க்கட்டு திமிர்வாதம், சோகை, மண்டைக் குடைச்சல், மேல்வலிகள், சூலை, புடைசூலை, மேகவாய்வு, சொறிசிரங்கு, காதடைப்பு, காதுகுத்தல் இவைகள் தீரும்.

## 76. வயிற்றுக் கடுப்புக்கு. (பா-1.)

தானென்ற சுக்குமொரு விராகன் ரண்டு தயவாக மோருவிட்டு மைபோலாட்டிக், கோனென்ற அரசிலையில் வைத்துத்தைத்துக் குணமாக மோருவிட்டு வேகவைத்து, மானென்ற எழுதர மிந்தப் பாகம் மைந்தனே தயிருவடி கட்டி நேரே, வானென்ற தயிரில்வைத்து விழுங்கும் போது வயிற்றிரைச்சல் கடுப்புமுதல் தீர்ந்து போமே.

(செ-பா.) சுக்கு வராகனெடை இரண்டு மோர்விட்டு மை போலரைத்து அரசிலையில் தொன்னை தைத்து அதில் ஷை சுக்கரைத்ததை வைத்து மோர்விட்டு வேகவைக்கவேண்டும். இப்படியே மடக்கி மடக்கி 7-தரம் அரைத்தரைத்து வேகவைத்து மொத்தையா யெடுத்துக்கொண்டு வேறே தயிரை ஒரு துணியில் மூட்டைகட்டித் தொங்கவிட்டு அந்தச் சலம் வடிந்து விட்டபிறகு உள்ளிருக்கும் தயிர் வெண்ணெயை எடுத்து அதில் மேற்படி சுக்கு பாவனத்தை வைத்துச் சாப்பிட்டால் வயிற்றிரைச்சல் வயிற்றுக் கடுப்பு முதலியவை தீரும்.

## 77. பேதி மாத்திரை. (பா-1.)

போமேநீ நேர்வாளஞ் சுத்தி செய்து பொங்கமுட ணுமணக்கு காசுக் கட்டி, ஆமேநீ யோரெடையாய் நிறுத் துக் கொண்டு ஆவின்பால் விட்டரைத்துத் துவரை போலே, தாமேநீ குளிகையொன்று வெந்நீரிற் கொள் தயவாகப் பேதியது ஆகும் பாரு, வாமேநீ பேதியது அதிக மானால் வளமாக வசம்பு தட்டிக் கியாழங் கொள்ளே. (191)

(செ-பா) சுத்திசெய்த நேர்வாளம், சிற்றாமணக்கு உடைத்த பருப்பு, காய்ச்சுக்கட்டி இம்மூன்றுஞ் சம எடையாய்ச் சேர்த்துப் பசுவின்பால் விட்டரைத்து மெழுகுபக்குவத்தில் துவரையளவு குளிகைசெய்து நிழலில் உலர்த்திவைத்துக்கொண்டு, அதில் ஒரு மாத்திரை வெந்நீரிற் கொடுத்தால் பேதி நன்றாயாகும். ஒருவேளை பேதியதிகமானால் வசம்பை நன்றாய் வெளுக்கச் சாம்பலாக்கித் தண்ணீர்விட்டுக் காய்ச்சிக் குடித்தால் பேதி நின்றுவிடும்.

## 78. தலைவலி சந்நிக்குப் புகை. (பா-2.)

கொள்ளவே இன்னமொன்று சொல்லக்கேளு கொடி யான பெருங்காய மோமஞ்சுக்கு, தெள்ளவே சாம்பி ராணி மிளகுசாரம் தெளிவான சிற்றரத்தை கழற்பருப்பு,

மெள்ளவே சீரகமும் லிங்கம்கூட மேன்மையாய்ச் சமன் கொண்டு அருக்கம்பாலில், தள்ளவே திரியாக்கிப் புகை தான் காட்ட தலைவலியுஞ் சன்னிமுத லோடிப்போமே.

(செ-பா.) பெருங்காயம், ஓமம், சுக்கு, சாம்பிராணி, மிளகு, நவாச்சாரம், சங்கராஷ்டகம், கெச்சைக்காய்ப்பருப்பு, சீரகம், இலிங்கம், இப்பத்து வகைச்சரக்குகளையும் சமமாயெடுத்துத் தூளாக்கிக் கல்வத்திட்டு எருக்கம்பால்விட்டரைத்துத் துணியிற் பூசி உலர்த்திச் சிறு சிறு துண்டுகளாக வைத்துக்கொண்டு அதில் ஒன்றைத் திரியாக்கிக்கொளுத்தி அதிலிருந்துவரும் புகையை மூக்கிற்பிடித்தால் தலைவலி, சந்நி முதலியவை நீங்கிப்போகும்.

## 79. கர்ப்பூரக் குளிகை. (பா-2.)

போமேநீ சாதிக்காய் சாதிபத்திரி பொங்கமுடன் தக்கோலம் ஏலங்கோஷ்டம், வாமேநீ சந்தனம் வால் மிளகுங் கூட வகைவகைக்கு வராகனெடை நிறுத்துப் போடு, தாமேநீ கிராம்பதுவும் வராகன்மூன்று தயவான கஸ்தூரி பச்சைப்பூரம் ஆமேநீ குங்குமப்பூ வகைவகைக்கு அடைவாக வராகனெடை யரையுமாமே. (193)

ஆமப்பா இளநீரா லரைத்து மைபோல் அடைவாகக் குன்றிமணி போலுருட்டித் தாமப்பா நிழலுலர்த்தித் தாம்பூலத்தில் தயவாகத்தின்றுவரப் பல்லைக்கேளு, வாமப்பா முகவசியந் தேககாந்தி வளமான பல்லினுள்ள வியாதி தீரும், வேமப்பா அக்கினியா மந்தந்தீரும் விதமான சன்னி முதல் மேகம்போமே. (194)

(செ-பா.) சாதிக்காய், சாதிபத்திரி, தக்கோலம், ஏலம், கோஷ்டம், சந்தனத்தூள், வால்மிளகு, இவ்வேழும் வகைக்கு வாராகனெடை 1. இலவங்கம் வராகனெடை 3. கஸ்தூரி, பச்சைக் கர்ப்பூரம், குங்குமப்பூ இம்மூன்றும் வகை ஒன்றுக்கு வராகனெடை ½ இவைகளையெல்லாங் கல்வத்திலிட்டு இளநீரால்

நன்றாய் மைபோலரைத்து, குன்றிமணிபோல் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தித் தாம்பூலத்துடன் ஒருமாத்திரைவீதம் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் மூகவசியம், உடல்காந்தி, முதலியன உண்டாகும். பல்லிலுள்ளநோய் அக்கினிமந்தம், சந்நி மேகம் இவைதீரும்.

## 80. சித்திரமூல ரசாயனம். (பா-3.)

போமப்பா கொடிவேலி நிலப்பனையின் மூலம் பொங்கமுடன் தண்ணீர் விட்டான் கிழங்குகூட, நாமேநீ சீனிசர்க்கரையுங்கூட நாயகனே வகைவகைக்குப் பலந் தான்கேளு, தாமேநீ பலந்தானே முப்பதாகுந் தயவான செங்கொட்டை நாற்பதாகும், வாமேநீ தூளிடித்துச் சூரணமேசெய்து வளமான சர்க்கரையும் நேரே கூட்டே.

கூட்டேநீ யிதிற்பாதி தேனுஞ் சேர்த்துக் குணமாக இதுநேரே ஆவி னெய்யை, நாட்டப்பா நாற்பதுநா ளந்தி சந்தி நாயகனே பத்தியந்தான் பாலுஞ் சோறும், வாட்டப்பாசர்க்கரையுஞ் சீனியாகும் வளமான வராகனெடை யைந்தே கொள்ளு, ஆட்டப்பா இதினுடைய பலனைக் கேளு அப்பனே பதினெட்டுச் சூலை போமே. (196)

போமடா குஷ்டம் பதினெட்டுந் தீரும் பொலிவான வலிப்பைந்து முதிர முட்டுந், தாமடா அஷ்டகுன்மம் பாண்டு ஆறும் தயவான விஷக்கடியு மேகந் தீரும், ஆமடா பலமுண்டு நரையு மாறும் அடைவான தேகமது அழகே காந்தி, நாமடா போகருட கடாட்சத் தாலே நலமாகப் புலிப்பாணி பாடினேனே. (197)

(செ-பா.) சித்திரமூலம், நிலப்பனங் கிழங்கு, தண்ணீர் விட்டான் கிழங்கு, பறங்கிச்சக்கை இந்த நான்கும் வகைக்கு 30-பலம் சுத்திசெய்த சேராங்கொட்டை 40-பலம், இவைகளை யெல்லாம் நன்றாயுலர்த்தி யிடித்துச் சூரணஞ்செய்து, அந்தச் சூரணத்திற்

குச் சரியெடை வெள்ளைச் சர்க்கரை சேர்த்து சர்க்கரைக்குப் பாதிதேனும், அதினெடை பசுவின் நெய்யுஞ் சேர்த்துப் பிசைந்தாவது லேகியம்போற் கிளறியாவது வைத்துக்கொண்டு, வேளைக்கு அரைப்பலம் வீதம் நாளொன்றுக்கு இரண்டு வேளையும் நாற்பதுநாள் சாப்பிட்டு, பாலுஞ்சோறும் சாப்பிட்டால், சூலை 18, குஷ்டம் 18, வலிப்பு, 5, உத்திரதோஷம் 8, குன்மம் 8, பாண்டு 6, விஷக்கடி மேகம் இவைகள் தீரும், நல்லவன்மை உண்டாம், நரைமாறும், உடலம் நல்ல அழகாயிருக்கும்.

## 81. பல்லுக்குப் பொடி. (பா-2.)

பாடியே அரக்குடனே சீனிகாரம் பண்பான துருசுடனே கடுக்காயப்பா, நாடியே மாசிக்காய் வகைவகைக்கு நலமான வராகனெடை நிறுத்துக் கொண்டு, ஆடியே கடுக்காயுந் தான்றிக் காயும் அரப்பொடியும் வகைக்கு வகை வராகன் மூன்று, கூடியே எலுமிச்சம் பழச்சாறிட்டுக் குணமாக உலரவைத்துப் பொடியாய்ச் செய்யே.

பொடியெடுத்து விளக்கிவரப் பலனைக் கேளு புழுச் சாகுமெயிற்கறையுந் தீரும்பாரு, இடியெடுத்து பல்லசைவும் பல்லுக்குத்தும் எரிவான வாய்ப்புண்ணு நாற்றந் தீரும், வடிவான பல்லொளிவு வசிய முண்டு வளமான பல்லிலுள்ள வியாதி தீருந், துடியான போகருட கடாட்சத்தாலே துலக்கமாய்ப் புலிப்பாணி பாடினேனே. ()

(செ-பா.) அரக்கு, படிகாரம், மயில்துத்தம், மாசிக்காய், இந்நான்கும் வகைக்கு வராகனெடை 1. கடுக்காய்த்தோல் தான்றிக் காய்த்தோல், இரும்புத்தூள் இந்த மூன்றும் வகையொன்றுக்கு வராகனெடை 3. எல்லாவற்றையும் எலுமிச்சம் பழச்சாறு விட்டுப் பொடிசெய்து வைத்துக்கொண்டு கொஞ்சம் பொடி எடுத்து பல்தேய்த்துவர பல்லிலுண்டாகும் புழுசாகும், வீங்கின எயிறு கரைந்துபோகும், பல்லாட்டம் நீங்கும், பல்குத்தல் தீரும், வாய்ப்புண், வாய்நாற்றம் இவை முதலிய பல்லைப்

பற்றிய வியாதிகள் நீங்கும். பல்லொளிவும் முகவசியமு முண்டாகும்.

82. வாயு, விக்கல், சோகைக்கு லேகியம். (பா-2.)

பாடியே திப்பிலிசுக்கு மிளகுங் கூடப் பண்பாக ரோசினையும் பரிந்து கேளு, நாடியே வகைவகைக்குப் பலந்தானென்று நாயகனே கடுக்காய்த்தோல் பலந்தானாலு, கூடியே தூளிடித்துச் சூரணமேசெய்து குணமாகப் பனைவெல்லம் பலந்தானாலும், ஆடியேகோசலத்தி லப்பாகாய்ச்சி அப்பனே நெய்தேனில் கிண்டிப்போடே. (200)

போடேநீ கழற்சிக்காயளவு கொள்ளப் பொருமலுடன் வயிற்றுவலி விக்கல் சோகை, ஆடேநீ மலக்கட்டுக் கிருமி தோஷம் அடைவான மேகசலஞ் சூலைவாயு, நாடேநீ நீர்ச்செரிப்பு மேல்வலியும் போகும் நாயகனே வாயுவென்ற ரோகம் போகுங், கூடே நீ போகருட கடாட்சத்தாலே குணமாகப் புலிப்பாணி பாடினேனே. (201)

(செ-பா.) திப்பிலி, சுக்கு, மிளகு, கோரோசனம், இவை வகைக்குப் பலம் 1. கடுக்காய்த்தோல் பலம் 4. இவைகளை யிடித்துச் சூரணஞ்செய்து வைத்துக்கொண்டு நான்கு பலம் பனைவெல்லத்தைப் பசு நீரினல் பாகாக்கி அதில் மேற்படி சூரணத்தைக் கொட்டி $2\frac{1}{2}$-பலம் நெய், $2\frac{1}{2}$-பலம் தேன்விட்டுக் கிண்டி லேகியமாக்கிக் கெச்சைக்காயளவு இருவேளையும் சாப்பிட்டால் வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, விக்கல், சோகை, மலக்கட்டு, கிருமி, தோஷம், மேகநீர், சூலை, வாயுக்கள், நீர்க்கட்டு, மேல்வயிற்றுநோய் இவைதீரும்.

83. கடுகெண்ணெய். (பா-2.)

பாடினேன் கடுகெண்ணெய் படிதானென்று பண்பான பெருங்காயம் வசம்புசுக்கு, நாடியே கருநாவி சாம்பிராணி நாயகனே வெள்ளுள்ளி யோமம் குப்பை,

ஆடினேன் மாவிலிங்கப் பட்டைகூட அடைவாக வகைக் குவகை விராகன் மூன்று, கூடினேன் மேனிச்சார் விட்டரைத்துக் குணமாகக் கடுகுபதந் தனில்வடித்தே. (202)

வடித்த எண்ணெய் துவளையிடச் சன்னிபோகும் வளமாக வலிப்புடனே சயித்தியந்தீரும், தடித்தவுடன் கால் குடைச்சல் மேல்வலியுந்தீரும் தயவான காதிரைச்சல் மண்டைக்குத்து, கொடிதான வெண்ணெயடர் வீரம் வீரங் கொற்றவனே யெண்ணெயுட அருமைமெத்த, கெடியான போகருட கடாட்சத்தாலே கெணிதமாய்ப் புலிப்பாணி பாடினேனே. (203)

(செ-பா.) கடுகெண்ணெய் படி 1. பெருங்காயம், வசம்பு, சுக்கு, கருநாபி, சாம்பிராணி, வெள்ளைப்பூண்டு, ஓமம், சதகுப்பை மாவிலிங்கப்பட்டை, இவை வகைக்குவராகனெடை 3. இவைகளையெல்லாம் குப்பைமேனிச் சாற்றாலரைத்து எரித்துக் கடுகுபதத்தி லிறக்கி அந்த எண்ணெயைத் துவளையிட்டால் சந்நி, வலிப்பு, சயித்தியம், கால்குடைச்சல், சரீரநோய், காதிரைச்சல், மண்டைக் குத்தல், இவை நீங்கும்.

## 84. பஞ்சீகரண செந்தூரம். (பா-5.)

பாடியே தங்கமது ஒன்றரையாகும் பண்பான காரீயமொன்றே காலாம், ஆடியே செம்பதுவு மொன்றேயாகும் அப்பனே இரும்பதுவு முக்காலாகும், கூடியே நாகமது அரையுமாகுங் குணமான ரசமதுதான் வராகனைந்து, நாடியே கந்தகந்தான் வராகனைந்து நாயகனே அரிதாரம் வராகனென்றே. (204)

ஒன்றான இவையெல்லாம் பொற்றலையின் சாற்றால் ஒளிவாக இருசாம மைபோ லாட்டிப், பன்றாகப் பொடிசெய்து குப்பிக் கேற்றிப் பண்பான மாக்கல்லுங்கொண்டு மூடி, வன்றாகக் குப்பிக்குச் சீலை யேழு வளமாகத் தான்

செய்து வாயை விட்டு, நன்ருகச் சட்டியிலே மணல்தா னப்பா நலமாக நாலுவிர லுயரம் போடே. (205)

போடேநீ குப்பிவாய் தெரிய மூடி பொங்கமுடன் தானெரிப்பாய் கமலம் போலே, ஆடேநீ நாற்சாம மெரித்தபோது அப்பனே சிந்தூர மாகும் பாரு, கூடேநீ ஆவின்பால் வெண்ணெய் தன்னில் குணமாகப் பண வெடையில் பாதி கொள்ள, நாடேநீ நாற்பதுநாள் கொண்ட போது நாயகனே வியாதியெல்லாந் தீருந் தானே. (206)

தானென்ற தேகமது வலுத்துப் போச்சு தயவான வசீகரமுங் காந்தி யுண்டாங், கோனென்ற ரசிதமது வேழுங் கூட்டிக் குணமான செம்பதிலே மூன்றுஞ் சேர்த்து, வானென்ற தங்கமது ஒன்றுகூட்டி வளமாகத் தானுருக்கி குருவொன் றீய, தேனென்ற கரிபோலே யிருக்கும் பாரு செம்மையா யோட்டில்வைத் தூதிப் போடே. (207)

போடேநீ மாற்றைந்து இருக்கும்பாரு பொங்கமுட னெடைக்கெடைதான் தங்கஞ் சேர்த்து, ஆடேநீ சிவ னத்தைச் செய்து கொண்டு அடைவான சாஸ்திரத்தை யறிந்துபாரு, கூடேநீ பஞ்சிகரண செந்தூ ரந்தான் குண மாகுந் தேகமது இறுகும் பாரு, தேடேநீ போகருட கடாட்சத்தாலே தெளிவாகப் புலிப்பாணி பாடினேனே.

(செ-பா.) தங்கம் $1\frac{1}{2}$-வராகனெடை காரீயம் $1\frac{1}{4}$-வராக னெடை, செம்புபொடி 1-வராகனெடை, அயப்பொடி $\frac{3}{4}$-வராக னெடை நாகம் $\frac{1}{2}$-வராகனெடை, ரசம் 5-வராகனெடை கந்தகம் 5-வராகனெடை, அரிதாரம் 1-வராகனெடை இவைகளையெல் லாம் மஞ்சள் கரிசலாங்கண்ணிச்சாற்ருல் 2-சாமமறைத்து மயன பதத்தில் பொடிசெய்து காசிக்குப்பியிலாவது சூத்தில்லாத

சோடாவாடர் புட்டியிலாவது போட்டுப் பலப்பக்கல் கொண்டு வாய்க்குக் கார்க்குப்போட்டு அந்தப்புட்டியின் வாயைவிட்டு மற்ற இடமெல்லாம் 7-சீலைமண்செய்து உலர்த்தி ஒருசட்டியில் 4-விரற்கடை உயரம் மணல்போட்டு அதன்மேல் குப்பியை வைத்து மேலும் குப்பிவாய் தெரிய விட்டு விட்டு மற்றவிடமெல்லாம் மணல்கொட்டிமூடி அடுப்பேற்றி கமலாக்கினியாக 4-சாமம் எரித்து நன்ருய்க் குளிரவிட்டு எடுத்தால் செந்தூரமாகும். இதில் ½-பண எடை, பசுவின் பாலிலாவது வெண்ணெயிலாவது 40-நாள் சாப்பிட்டால் சர்வ வியாதிகளும் தீரும். சரீரம் பலப்படும், முகவசீகரமும், காந்தியும் உண்டாகும்.

இதனுலாகும் வேதை:—வெள்ளீ 7-எடை, செம்பு 3-எடை தங்கம் 1-எடை, இந்த மூன்றையுங்கூட்டி உருக்குமுகத்தில் மேற்படி செந்தூரத்தில் 1-எடை கொடுத்து உருக்கினுல் கரியைப் போ லிருக்கும், அந்தக் கரியை ஒட்டில் வைத்து ஊதிவிட்டால் 5-மாற்றிருக்கும், எடைக் கெடை தங்கஞ் சேர்த்துச் சீவனம் செய்து கொள்ளலாம்.

### 85. சோகை, காமாலைக்கு, லேகியம் (பா-3.)

பாடியே சுக்குடனே மிளகு கூடப் பண்பான திப்பிலி சீரகமு மோமம், ஆடியே காட்டுச் சீரகமு மிஞ்சி அப்பனே சாதிக்காய் கிராம்பு சோம்பு, நாடியே கடுக்காய்ரோ கணியுமேலம் நலமாகக் கழல்பருப்பு அரத்தை சிறுதேக்கு, கூடியே வகைக்குவகை வராகன்மூன்று கொற்றவனே தூளிடித்துச் சூரணமே செய்யே. (209)

செய்யப்பா வெள்ளாட்டுப் புழுக்கைத்தூளு செயமாக வடிகட்டிச் சரக்கின்னேரே, வையப்பா கருப்பஞ் சார் படிதானென்று வளமாகப் பனையுடைய கருப்புக் கட்டி, நையப்பா ஏழுபலம் நிறுத்துக்கொண்டு நலமாகத் தேன்படியு மரைதான்வாரு, கையப்பா ஆவினெய் படி தான்பாதி கனிவாக லேகியமாய்க் கிண்டிப்போடே. ()

போடேநீ நெல்லிக்காயளவு கொள்ளப் பொல்லாத நீர்க்கோவை பாண்டுகோவை, ஆடேநீ காமாலை சோகை வாயு அப்பனே நெஞ்செரிவு நீர்ச்சுரப்பு, கூடேநீ அக்கினியா மந்தந்தீருங் குணமான மந்தமுதல் குன்மம்தீரும், நாடேநீ போகருட கடாட்சத்தாலே நலமாகப் புலிப்பாணி பாடினேனே. (211)

(செ-பா) சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், ஓமம், காட்டுச்சீரகம், இஞ்சி, சாதிக்காய், லவங்கம், சோம்பு, கடுக்காய்த்தோல், கடுகுரோகணி, ஏலரிசி, கெச்சைக்காய்ப்பருப்பு, சன்னராஷ்டகம், கண்டுபாரங்கி, இவைகள் வகைக்கு 3-வராகனெடை தனித்தனி இடித்து வஸ்திரகாயஞ் செய்து கலந்து அந்தச் சூரண எடைக்கு வெள்ளாட்டுப் புழுக்கையை இடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் கலந்துகொண்டு, ஒரு மண்பாண்டத்தில் கரிசலாங்கண்ணிச் சாறு ஒருபடிவிட்டு அதில் 7-பலம் பனைவெல்லம் போட்டுப் பாகுவருஞ் சமயத்தில் சூரணத்தைக் கொட்டி அரைப்படி தேனும், அரைப்படி நெய்யும் விட்டுக்கிளறி லேகியபதத்தில் எடுத்து நெல்லிக்காயளவாக காலை மாலை 2-வேளையும் தின்றுகொண்டுவந்தால், மிகக்கொடிதான நீர்க்கோவை, பாண்டு, சோகை, காமாலை, வாயு, நெஞ்செரிவு, நீர்ச்சுரப்பு, அக்கினிமந்தம், மந்தம், குன்மம், இவைகள் தீரும்.

## 86. பஞ்சீகரண மாத்திரை. (பா-2)

பாடினேன் தாரமொன்றரையுமாகும் பண்பான சவ்வீரம் ஒன்றேகாலும், நாடியே கௌரியது ஒன்றேயாகும் நலமான வெள்ளையது முக்கால்சேரு, ஆடியே லிங்கமது அறையுஞ்சேரு அப்பனே பொடிசெய்து வுருக்கிவாரு, கூடியே திரிகடுகு பொடியுந்தேனும் கொடுப்பாயே பணவெடைதான் நோய்கள் போமே. (212)

போமேதான் வாயுவொடு குன்மரோகம் பொல்லாத நெஞ்சடைப்பு பிரமைமூர்ச்சை, தாமேநீ கயரோகம்

வாந்தி யேப்பம் தயவில்லாச் சுரங்களொடு தொண்டைக் கம்மல், ஆமேநீ விஷபாகங் காமாலை சோகை அப்பனே சன்னியொடு வலிப்புந்தீரும், நாமேதான் போகருட கடாட்சத்தாலே நலமாகப் புலிப்பாணி பாடினேனே. ()

(செ-பா.) தாளகம் $1\frac{1}{2}$-எடை, வீரம் $1\frac{1}{4}$-எடை, கௌரி 1-எடை, வெள்ளைப்பாஷாணம் $\frac{3}{4}$-எடை, லிங்கம் $\frac{1}{2}$-எடை, ஆகிய இவைகளை யெல்லாம் நன்றாய்ப் பொடிசெய்து உருக்கி வார்த்து, வைத்துக்கொண்டு சுக்கு, மிளகு, அரிசிதிப்பிலி இம்மூன்றையும் சமயெடையா யெடுத்து இளவறுப்பாய் வறுத்துப் பொடிசெய்து வெருகடியளவு பொடியும், தேனுங்கூட்டி அதில் 1-பணவெடை மருந்து சேர்த்துத்தின்றால், வாயு, குன்மம், நெஞ்சடைப்பு, பிரமை! மூர்ச்சை, க்ஷயம், வாந்தி, ஏப்பம், சுரங்கள், தொண்டைக்கம்மல் விஷபாகம், காமாலை, சோகை, சந்நி, வலிப்பு, இவைகள் தீரும்.

## 87. பஞ்சமுக செந்தூரம். (பா-2.)

பாடினேன் சாதிலிங்கம் ரசமுங்கெந்தம் பண்பான வீரமுடன் தாரங்கூட்டி, ஆடினேனிவையெல்லாஞ் சம னாய்க் கொண்டு அடைவாகக் காட்டாமணக்கின் பாலா லாட்டி, நாடியே பில்லைதட்டி யுலரவைத்து நலமான புட மதுதான் கோழியாகுங், கூடியேயாறவிட்டு எடுத்துப் பாரு கொற்றவனே செந்தூரமாகுந்தானே. (214)

தானென்ற செந்தூரம் பணவெடைதான் கொள்ளத் தயவான திரிகடுகு பொடியிலப்பா, பானென்ற தேனு கும் வெண்ணெயாகும் பண்பானபனையுடைய கருப்புக் கட்டி, வேனென்ற விவைகளிலே கொள்ளும்போது வெடி சூலை குஷ்டமுதல் கறுப்பு வெள்ளை, கோனென்ற மேகத் தாலெடுத்த ரோகங் கொற்றவனே குன்மமுதல் வாயு போமே. (215)

(செ-பா.) சாதிலிங்கம், ரசம், கந்தகம், வீரம், தாளகம், இவ்வைந்தும் ஓரளவாகக்கொண்டு காட்டாமணக்கின் பாலால் அரைத்துப் பில்லைதட்டி உலரவைத்து 10-எருவில் புடம்போட்டெடுத்துப் பார்த்தால் நல்ல செந்தூரமாம். சுக்கு, மிளகு, திப்பிலி இம்மூன்றும் சம எடையாய் எடுத்து வறுத்துச் சூரணஞ்செய்து அச்சூரணம் வெருகடியில் பணவெடை செந்தூரஞ்சேர்த்துக் கொடுக்கலாம். அன்றித் தேனிலாவது, வெண்ணெயிலாவது, பனைக்கருப் புட்டியிலாவது கொள்ளலாம். அப்படி சாப்பிட்டுக்கொண்டுவந்தால், சரீரம் வெடித்திருக்கின்ற சூலை, குஷ்டம் 18, கருமேகம், வெண்மேகம், குன்மம், வாயு இவைகள் தீரும்.

### 88. இரச செந்தூரம். (பா-2.)

போமேதான் ரசம்பத்து கெந்திபத்து பொங்கமுடனரிதாரம் ஒன்றுகூட்டி, ஆமேதான் அம்மியிலே பொடியாய்ப்பண்ணி அப்பனே வறுத்தெடுநீ கைபாகமாக, தானேதான் அண்டத்தைப் பொடித்துக்கொட்டித் தயவாக அதிற்பாதி போட்டுமூடி, வாமேதான் மணலில் வைத்துப் புடத்தைப்போடு வளமான சிந்தூரமாகும் பாரே. (216)

பாரேதான் பணவெடைதான் பனைவெல்லத்தில் பாங்காகக் கொண்டவுடன் பறங்கிச்சூலை, சேரேதான் கிரந்தியொடு குட்டரோகம் செயலான தாதுநஷ்டம் லிங்கப்புற்று, தீரேதான் அரையாப்பு விப்புருதியோடு திறமாக தேகமது காந்தியுண்டாம், வீரேதான் போகருடகடாட்சத்தாலே விளம்புகிறேன் புலிப்பாணி விளங்கத் தானே. (217)

(செ-பா.) சுத்திசெய்த ரசம் 10-எடை, சுத்திசெய்த கந்தகம் 10-எடை, தாளகம் 1-எடை இம்மூன்று சரக்குகளையும் கல்வத்திட்டுப் பொடிபண்ணி சட்டியிலிட்டுக் கைபாகமாக வறுத்

தெடுத்து ஒரு குடுவையில் குஞ்சுபொரித்த கோழிமுட்டையோடு மொத்த எடைக்கெடுத்து (அதாவது 21-எடை) அதைப் பொடி பண்ணிப் பாதிபோட்டு, நடுவில் மருந்தைப்போட்டு, மேலே கோழிமுட்டை யோட்டின் பொடியைப்போட்டுச் சீலைசெய்து 10-எருவிற் புடம்போட்டெடுக்கச் செந்தூரமாகும். அதிற் பண வெடை பனைவெல்லத்தில் வைத்துத் தின்றால் பறங்கிச்சூலை, கிரந்தி, குஷ்டம், லிங்கப்புற்று, தாதுக்ஷீணம், அரையாப்பு, விப்புருதி, இவைகள் நீங்கும் உடல் ஒளிவீசும். இதை அண்டஓட்டுக்குள் மருந்திட்டும் எரிக்கிறார்கள்.

## 89. நீர் எரிவு மருந்து. (பா-1.)

தானென்ற நீரெரிவு கண்டதானால் தயவாகக் கட்டுக் கொடியிலையரைத்து, வானென்ற நிம்பக்காயளவு தானும் வகையாகக் கால்படியாஞ் சலத்திற்சேர்த்துக், கோனென்ற சீரகமும் ஏலந்தானும் கொடிதாக வராகனெடை பொடித்துப்போட்டு, ஆனென்ற சீனிசர்க்கரைதானிட்டு அளவாகக் கலந்துமே யுண்டுபாரே. (218)

(செ-பா.) சிறுகட்டுக்கொடி யிலையையாவது, பெருங்கட்டுக் கொடி யிலையையாவது நன்றாயரைத்து எலுமிச்சங்காயளவெடுத்துக்காற்படி தண்ணீரிற்கலந்து சீரகம் 1-வராகனெடை, ஏலரிசி 1-வராகனெடை நன்றாய்ப் பொடிபண்ணிப் போட்டு அதில் சீனிசர்க்கரை ஒருதுட்டெடை கலந்து சாப்பிட்டால் நீர் எரிவு உடனே நீங்கிச்சுகப்படும்.

## 90. புரையோடும் விரணதைலம். (பா-1)

பாரேதான் நொச்சிவேர் அழிஞ்சிவேரும் பண்பான விழுதிவேர் சமனாய்ப்போட்டுச், சீரேதான் குழித்தயிலமாக வாங்கிச் சிறப்பாகப் புரைகளுக்கு விட்டபோது கூரேதான் விப்புருதி கண்டமாலை குறிப்பான அரையாப்பு கன்னப்புற்று, நேரேதான் தொடைவாழை யோடு மப்பா நேரான பிளவையது தீரும்பாரே. (219)

(செ-பா.) நொச்சிவேர், அழிஞ்சில்வேர், விழுதிவேர் இவைகள் மூன்றையும் சமமாக எடுத்துக் குழித்தயிலமிறக்கிப் புரையோடும் விரணங்களுக்குவிட்டால் விப்புருதி, கண்டமாலை, அரையாப்பு, கன்னப்புற்று, தொடைவாழை, குழிவாழை, பிளவை இவை முதலியவை தீரும்.

## 91. பறங்கிப்பட்டைப் பதங்கம். (பா-4.)

பாரேதான் பறங்கியுட பட்டையப்பா பாங்காகப் பலமைந்து நிறுத்துக்கொண்டு, சேரேதான் பொடிப் பொடியாய்க் கண்டமாக்கிச் சிறப்பாகவேசரியின் லத்தி சாற்றில், வீரேதான் பிசறியதை யுலர்த்திவைத்து விதமாக மேனிச்சார் பொடுதலைச்சார், கூரேதான் கையான் சார் குப்பிச்சாறும் குணமான பசுவின்பா லின்னங் கேளே. (220)

கேளேநீ வெவ்வேறே யுலர்த்திக்கொண்டு கெணித முடன் கெந்தகமும் பலந்தானொன்று, வாளேநீரசமைந்து லிங்கமைந்து வகையாகப் பொடிபண்ணி மூன்றும்போடு வீளேநீ மறுசட்டி தமர்கள்போட்டு விதமாக சட்டிவாய் தன்னில்மூடி, சூளேநீ பட்டையைத்தான் மேலே வைத்துச் சுகமாக மறுசட்டி கொண்டுமூடே. (221)

மூடியே மண்சீலை வலுக்கச்செய்து முசியாமல் தானெரிப்பாய் சாமமொன்று, ஆடியே யாறவிட்டெடுத்துலர்த்தி அப்பனே சூரணமாய்ச் செய்துகொண்டு, நாடியே கழஞ்சொன்று கொண்டாயானால் நலமாக மேக வகை யிருபத்தொன்றும், ஓடியே போகுமடா சூலையெல்லாம் உத்தமனே கருங்கிரந்தி தீருந்தானே. (222)

திருமே கைக்கறுப்பு வெள்ளைதானும் திரமான பிடிப்புவகை ரணங்கள் யாவும், ஆருமே ரணங்கள் வகை சிரங்கு குஷ்டம் அப்பனே செந்தாமைழத் தடிப்புந்தீரும்,

கூறுமே வாய்நாற்றம் தந்தச்சூலை குணமாக மண்டலந்
தான் தின்றால் தீரும், பாருமே பத்தியந்தா னிதற்கோ
வில்லை பண்பாக போகருட கடாட்சந் தானே. (223)

(செ-பா.) நன்றாய் மாவாயுள்ள பறங்கிச்சக்கை பலம் 10 எடுத்து சிறுதுண்டுகளாக நருக்கிக் கழுதைச்சாணிப் பாலில் போட்டுப்பிசறி அதை வெயிலிலிட்டுலர்த்திப் பிறகு குப்பை மேனிச் சாற்றிலும், பொடுதலைச்சாற்றிலும், கரிசலாங்கண்ணிச் சாற்றிலும், சங்கங்குப்பிச் சாற்றிலும், பசுவின் பாலிலும் ஆக ஐந்துவகையிலுந் தனித்தனியாகப் பிசறி உலர்த்திச் சுத்தி செய்த கந்தகம் பலம் 1, இரசம் பலம் 5, இலிங்கம் பலம் 5, இம் மூன்றையும் நன்றாய்ப்பொடி பண்ணி அடிச்சட்டியில் இந்த இர சச்சரக்குப் பொடியைவைத்து, அந்தச் சட்டிக்கு வாய் பொருந் தும்படி ஒரு சட்டி கொண்டுவந்து அந்தச் சட்டிக்குச் சிறுதுளை களிட்டு அந்தச் சட்டியை அடிச்சட்டியின்மேல் மல்லாத்தி போட்டு அந்தச் சட்டியின்மேல் முன் உலர்த்தின பறங்கிச்சக் கையைவைத்து மேலே ஒரு சட்டிமூடி மண்சீலை வன்மையாய்ச் செய்து அடுப்பேற்றி ஒருசாமம் வரைக்கும் நன்றாயெரித்தாற விட்டு எடுத்திடித்துச் சூரணஞ்செய்து வேளைக்கு $1\frac{1}{4}$-வராகனெ டையாகச் சாப்பிட்டால் மேகம் 21, சர்வசூலை, கருங்கிரந்தி, கையிலுண்டாகுங் கருமேகம், வெண்மேகம் பிடிப்பின்வகைகள், விரணங்களின் வகைகள், சிரங்கு, குஷ்டம், செந்தடிப்பு, வாய் நாற்றம், தந்தசூலை, இவைகள் தீரும். ஒரு மண்டலஞ் சாப்பிட வேண்டும். பத்தியமில்லை.

## 92. வல்லாதி தைலம். (பா-2.)

தானான வல்லாதி தைலமொன்று தயவாகச் செங் கொட்டை அழிஞ்சிக் கொட்டை, மானான பூவந்திக் கொட்டையோடு மைந்தனே யெட்டியுட கொட்டை தானும், வானான வேம்பின் புண்ணாக்குக் கூட வகையான சிவனதுவேம்புமே தான், கானான இவையெல்லாஞ் சரி

யெடையாய்த் தூக்கிக் கனிவான கன்னியிட சாற்றில் போடே. (224)

போடேநீ யொருநாள்தா னூற வைத்துப் பொங்க முட னிருநாள்தா னெடுத் துலர்த்தி, ஆடேநீ குழிலத்தை மாகவாங்கி அப்பனே காசெடைதான் கொண்டா யா னால் நாடேநீ பனைவெல்லந் தன்னிற் கொள்ளு நாயகனே சூலைபதி னெட்டுந் தீரும், வாடேநீ போகாமல் மண்ட லங்கால் கொள்ள மைந்தனே பத்தியந்தா னென்று காதே. (225)

(செ-பா.) சுத்திசெய்த சேராங்கொட்டை, அழிஞ்சிற்கொ ட்டை, பொன்னுங்கொட்டை, எட்டிக்கொட்டை, வேப்பம் பிண்ணாக்கு, சிவனார்வேம்பு இவ்வாறு சரக்குகளையுஞ் சரி எடை யா யெடுத்துக் கற்றாழஞ்சாற்றில் ஒருநாள் ஊரவைத்து இரண் டாவது நாள் எடுத்துலர்த்திக் குழித்தயிலமிறக்கிப் பனைவெல் லத்தில் ஒரு காசெடை தைலம் விட்டு 10-நாள் சாப்பிட்டால் சூலை 18, தீரும். உப்பில்லாப்பத்திய மிருக்கவேண்டும்.

## 93. இடிவல்லாதி (பா-5.)

ஒன்றான வல்லாதி சொல்லக் கேளு உத்தமனே செங்கொட்டை பலந்தான் பத்து, நன்றாக மூக்குவெட் டிச் சாணிப் பாலில் நலமாக மூன்றுநா ளூர வைத்து, அன்றான கல்லுரலிற் றானே போட்டு அப்பனே யெள்ள தனை யிடித்துப் போட்டு, கன்றான கொப்பரைத் தேங்கா யிரண்டு கனிவாகத் தானிடித்து நினைவாய்ப் போடே.

போடேநீ பறங்கியுட பட்டையப்பா பொங்கமுட னமுக்கரா சித்ரமூலம், கூடேநீ கஸ்தூரி மஞ்சளோடு குணமான கருஞ்சீரம் வாலுழுவை யோடு, தேடேநீ குரோசானி யோமத் தோடு தெளிவான வெற்றிலையின்

காம்புதானும், நாடேநீ கடுக்காயுந் திப்பிலி தானும் நலமான கோஷ்டம் வகைவகைக்குக் கேளே. (227)

கேளேதான் வகைவகைக்கோர் பலமாய்த் தூக்கிக் கெணிதமுடன் சூரணமாய்ச் செய்து கொண்டு, வாளே தான் கல்லுரலில் மயனம் போல வகையாக விடித்ததனைச் சொல்லக் கேளு, ஆளேதான் ரசகர்ப் பூர மப்பா அடை வாக வராகனைந்து பொடித்துப் போட்டுச், சாடேதான் பனைவெல்லாம் பலந்தானைந்து சார்வாகப் போட்டிடிப் பாய்த் தயவாய்த் தானே. (228)

தானென்ற வல்லாதி அந்தி சந்தி தயவாக வெருகடி மண் டலமே கொள்ள, வானென்ற குஷ்டமொடு கிரந்தி சூலே வகையாக அரையாப்பு மேக மெல்லாம், கோ னென்ற குன்மமெட்டுஞ் சுக்ல வாய்வு குணமில்லா ரண ரோகங் கிரந்தி தீரும், ஏனென்ற பத்தியந்தா னிச்சா பத்தியம் இதமான வுப்புமுதல் வறுத்துக் கூட்டே. (229)

கூட்டப்பா தயிர்மோரு நெய்யு மாகும் குணமான துவரையுட பருப்பு மாகும், நாட்டப்பா பாசியென்ற பயறுமாகும் நலமான நல்லாரை பொன்னுங் காணி, ஆட்டப்பா மச்சமென்ற பதார்த்தந் தள்ளு அடவாக மற்றெல்லாமாகும் பாரு, ஆட்டப்பா விளக்கெண்ணெய் தேய்த்து மூழ்கு அடைவாகச் சந்திரன்போல் தேகந் தானே. (230)

(செ-பா.) மூக்குவெட்டிச் சாணிப்பாலில் மூன்றுநாள் ஊற வைத்துச் சுத்திசெய்த சேராங்கொட்டை பலம் 10, கல்லுரலி லிட்டு எள் பலம் 10, நன்றாயிடித்துக் கூடப்போட்டுக் கொப்ப ரைத் தேங்காய் பலம் 2, பறங்கிச்சக்கை, அமுக்கறாங்கிழங்கு, சித்திரமூலம், கஸ்தூரிமஞ்சள், கருஞ்சீரகம், வாலுழுவையரிசி, குரோசானியோமம், வெற்றிலைக்காம்பு, கடுக்காய்த்தோல், திப்

பிலி, கோஷ்டம் இப்பதினேரு சரக்குகளும் வகை ஒன்றுக்குப் பலம் 1-ஆக எடுத்துச் சூரணஞ்செய்து முன் கல்லுரலிற் போட்டு அவைகளுடன் ரசக்கர்ப்பூரம் பொடி பலம் அரை, பனைவெல்லம் பலம் 5, ஆகிய இவைகளையும் சேர்த்து நன்ருயிடித்து மெழுகு போலாக்கி வைத்துக்கொண்டு காலை, மாலை இரண்டுவேளையும் வெருகடியளவு மண்டலம் சாப்பிட்டால், குஷ்டம், கிரந்தி, சூலை, அரையாப்பு, மேகம், குன்மம், சுக்கிலவாயு, விரணரோகம், கிரந்தி இவைகள் தீர்வனவாம்.

பத்தியம்:—தயிர், மோர், நெய், துவரம்பருப்பு, பச்சைப் பருப்பு, நல்ல ஆரைக்கீரை, பொன்னுங்கண்ணிக் கீரை, இவைகள் ஆகும். கரப்பான் பதார்த்தங்கள் நீக்கவேண்டும். மற்றவைகள் ஆகும். விளக்குநெய் தேய்த்துக்கொண்டு தலைமுழுகவேண்டும். இப்படி செய்வதினல் உடல் சந்திரன்போல் குளிர்ச்சியடையும்.

## 94. நோய் நக்ஷத்திரம். (பா-16.)

தானென்ற அசுபதிநாள் முதற்கா லப்பா தயவாக ஒன்பதுநாள் சுரமே தீரும், தேனென்ற ரண்டாங்கால் கொல்லு மப்பா திரமான பத்தாநாள் மரண மாவான், கோனென்ற மூன்ருங்கால் பதினைந் தாகும் குணமாக நாலாங்கால் மரணஞ் செய்யும், வானென்ற பரணிதனில் முதற்கால் மூன்று வளமான ரெண்டாங்கா லேழா மென்னே. (231)

என்னவே மூன்ருங்கால் பதினைந்தாகும் எளிதில்லா நாலாங்கால் பதினைந் தாகும், நன்னவே கார்த்திகைக்கு முதற்கா லானல் நலமான ஒன்பதாம்நாள் தீரும் பாரு, பன்னவே ரண்டாங்கால் பத்தே யாகும் பண்பான மூன்ருங்கால் பதினைந்தாகும், அன்னவே நாலாங்கால் நாற் பத்தெட்டு அடைவாக ரோகணியும் முதற்கால் பத்தே.

பத்தான ரண்டாங்கால் பதினெட்டாகும் பண்பான மூன்றுங்கால் எண்ணான் கப்பா, பெத்தான நாலாங்கால் எண்பத்தி ரண்டு பேதமில்லை தீர்ந்துவிடு மின்னங் கேளு, முத்தான மான்றலையின் முதற்காலப்பா முப்பதுநாளான பின்பு தீரும் பாரு, சித்தான ரண்டாங்கா லிருபத்தெட்டு திரமான மூன்றுங்கால் பதினைந்தாமே. (233)

ஆமேதான் நாலாங்கால் முப்பத்தைந்து அடவான ஆதிரைநாள் முதற்கா லொன்பான், தாமேதான் ரண்டாங்கால் மரணமாகும் தயவாக மூன்றுன்கால் நாள் தான்பத்து, வாமேதான் நாலாங்கா லிருபத் தைந்து வளமான புனர்பூசம் நாள்தானேழு, போமேதா னிரண்டாங்கால் நாள்தான் பத்து பொங்கமுடன் மூன்றுங்கால் பதினெட்டாமே. (234)

ஆமப்பா நாலாங்கால் மரணஞ்செய்யும் அடைவான பூசமப்பா முதற்காலேழு, சேமப்பா ரண்டாங்கால் பணிரண்டாகும் சுகமான மூன்றுங்கா லொன்பதாகும், காமப்பா நாலாங்கா லிருபத் தேழு கனிவான வாயிலிய முதற்காலொன்பான், வாமப்பா ரண்டாங்கால் இருப தாகும் வளமான மூன்றுங்கால் தொண்ணூறு தானே. (235)

தானான நாலாங்கால் முப்பத்தொன்பான் தயவான மகமுதற்கால் மரணஞ்செய்யும், வானான ரண்டாங்கால் முப்ப தாகும் வளமான மூன்றுங்கால் எண்பத் தைந்து கூனான நாலாங்கால் நாள்தானைந்து குணம்பூர முதற்கால் தான் சாவுமாகும், தேனான ரண்டாங்கா லிருபத் தைந்தில் சிறப்பான மூன்றுங்கா லிருபத் தாறே. (236)

ஆறான நாலாங்கா லெண்பத் தொன்றும் அடைவான வுத்திரந்தான் முதற்கா லெட்டு, வீறான ரெண்டாங்

கால் முப்ப தாகும் விதமான மூன்றுங்கா லைம்பத்தி ரண்டாங், தீரான நாலாங்கால் மரணை மாகும் திறமான அஸ்தமுதற் கால்தா னெட்டு, கூறான ரண்டாங்கால் பதினைந் தாகும் குணமான மூன்றுங்கா லிருபத்தெட்டே.

எட்டான நாலாங்கா லெண்பத்தி ரண்டு எளிதான சித்திரையு முதற்காலொன்பான், நெட்டான ரண்டாங் கால் பதினைந் தாகும் நேரான மூன்றுங்கால் பன்னி ரண்டு, கிட்டான நாலாங்கால் நாற்பத் தொன்று கெதி யான சோதிமுதற் காலீ ராறு, குட்டான ரண்டாங்கால் மரணஞ் செய்யுங் குணமான மூன்றுங்கா லெண்பத் தெட்டே. (238)

எட்டான நாலாங்காற் பன்னி ரண்டு எழிலான விசாக முதற் கால்தா னென்பான், தட்டான ரண்டாங் கால் நாள்தான் மூன்று தயவான மூன்றுங்கால் நாற்ப தாகும், பட்டான நாலாங்கால் எண்பத்தொன்று பாங் கான அனுஷமுதற் கால்தான்சாவு, சிட்டான ரண்டாங் கா லிருபதப்பா செயலான மூன்றுங்கால் தொண்ணு றென்னே. (239)

என்னவே நாலாங்கால் நாற்பதாகும் எழிலான கேட்டைமுதற் கால்தான்சாவு, நன்னவே ரண்டங்கா லிருபதப்பா நாயகனே மூன்றுங்கால் முப்பத்தொன்று, வன்னவே நாலாங்கா லெண்பத்திரண்டு வளமான மூல முதற் கால்தான் சாவு, அன்னவே ரண்டங்கா லொன்ப தாகும் அடைவான மூன்றுங்கால் நாள்தான் பத்தே. ()

பத்தான நாலாங்கால் பதினெட்டாகும் பண்பான பூராடமுதற்காலொன்பான், சித்தானரண்டங்கால் மர ணஞ்செய்யுஞ் செயலான மூன்றுங்கால் நாள்தான்பத்து,

வித்தான நாலாங்காலைம்பத்துநாலு விதமான உத்திராட முதற்காலேழு, நித்தான ரண்டங்காலிருபதாகும் நேரான மூன்றுங்காலைம்பதாச்சே. (241)

ஆச்சப்பா நாலாங்கால் நாற்பதாகும் அடைவான ஓணமுதற் பதினென்றப்பா, பேச்சப்பா ரண்டங்கால் பத்துநாளாம் பேதமில்லை மூன்றுங்கால் நாள் தானெட்டு, வீச்சப்பா நாலாங்கால் மரணம் செய்யும் விதமான அவிட்டமுதல் கால்தானென்பான், நீச்சப்பா ரண்டங் கால் பதினைந்தாகும் நிசமான மூன்றுங்கால் முப்பத் திரண்டே. (242)

இரண்டானநாலாங்கால் முப்பத்தொன்பான் நிச மான சதயமுதற்கால்தானேழு, வண்டானரண்டங்கால் பத்தாம் பாரு வளமான மூன்றுங்கால் நாள்தானறு, திண்டான நாலாங்கால் நாள் தானைந்து திறமான பூரட் டாதி முதற்கால் சாவு, கொண்டான ரண்டாங்கால் பதினாறுகும் குணமான மூன்றுங்காலெண்பத்தொன்றே.

ஒன்றான நாலாங்கால் நாற்பத்தொன்று ஒளிவுத்தி ரட்டாதி முதற்காலேழு, நன்றான விரண்டாங்கால் பதி னெட்டாகும் நலமான மூன்றுங்கா லேழாம்பாரு, குன் றான நாலாங்கா லிருபத்தெட்டாம் குணமானரேவதியு முதற்கால்சாவு,அண்டானரண்டங்கால் பதினென்றப்பா அடைவானமூன்றுங்கால் பதினெட்டாமே. (244)

ஆமேநீ நாலாங்கா லிருபத்தாறு அடைவானமரண மென்ன நாள்தான்சொல்வேன், வாமேநீ அருக்கனுள் பரணியாகா வளமான திங்கட்சித்திரையுமாகா, தாமேநீ செவ்வாய்க்கு முத்திராடந் தயவான புதனுக்கு மஸ்த மாகா, நாமேநீ குருநாள்தான் கேட்டையாகா நலமான புகர்நாள் பூராடந்தீதே. (245)

தீதானசனிநாள் ரேவதியுமாகா தீங்குவருமிந்நாளில் நோய்கள்கண்டால் வாதானநமனுக்கே அறுதியாகும் வந்தநோய் தீராதுகொல்லுங்கொல்லுங், தானன வயித்தியரே நூலைப்பார்த்துத் தயவாகவைத்தியங்கள் செய்யவேணும், கோனனபோகருட கடாட்சத்தாலே கொற்றவனே புலிப்பாணி சொன்னேனென்பாரே. (246)

அசுவினி:—நட்சத்திரத்தின் முதற் பாதத்திற் சுரம் வந்தால், ஒன்பது நாளிற்றீரும். இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் கொல்லும், மூன்றும்பாதத்திற் சுரம்வந்தால் பதினைந்து நாட்களிற் றீரும், நான்காம் பாதத்திற் சுரம் வந்தால் கொல்லும். (1)

பரணி:—முதற்பாதத்திற் சுரம்வந்தால் மூன்றுநாளிற் றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் ஏழுநாளிற் றீரும், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் பதினைந்துநாளிற் றீரும், நாலாம்பாதத்திற் சுரம் வந்தால் பதினைந்துநாளிற் றீரும். (2)

கார்த்திகை:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் ஒன்பதாவது நாளிற்றீரும். இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் பத்து நாளிற் றீரும், மூன்றும்பாதத்திற் சுரம்வந்தால் பதினைந்து நாளிற் றீரும், நாலாம்பாதத்திற் சுரம்வந்தால் நாற்பத்தெட்டு நாளிற்றீரும். (3)

உரோகணி:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் பத்து நாளிற் றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் பதினெட்டு நாளிற் றீரும், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் முப்பத்திரண்டு நாளிற் றீரும், நாலாம் பாதத்திற்சுரம் வந்தால் எண்பத்திரண்டு நாளிற் றீரும். (4)

மிருகசீரிடம்:—முதல் பாதத்திற் சுரம் வந்தால் முப்பது நாள் சென்றபின்னர் தீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் இருபத்தெட்டு நாளிற்றீரும், மூன்றும்பாதத்திற் சுரம் வந

தால் பதினைந்துநாளிற் றீரும், நான்காம்பாதத்திற் சுரம் வந்தால் முப்பத்தைந்து நாளில் தீரும். (5)

திருவாதிரை:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் ஒன்பது நாளில் தீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் நோய் தீராது மரண முண்டாகும், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் பத்து நாளிற் றீரும், நான்காம் பாதத்திற் சுரம் வந்தால் இரு பத்தைந்து நாளிற் றீரும். (6)

புனர்பூசம்:—முதற் பாதத்திற் சுரம்வந்தால் ஏழுநாளிற் றீரும், இரண்டாம் பாதத்திற்சுரம் வந்தால் பத்துநாளிற் றீரும், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் பதினெட்டு நாளிற் றீரும் நான்காம் பாதத்திற் சுரம்வந்தால் மரணமுண்டாகும். (7)

பூசம்:—முதற்பாதத்திற் சுரம் வந்தால் ஏழுநாளிற் றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் பன்னிரண்டு நாளிற் றீரும், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் ஒன்பது நாளிற் றீரும், நான் காம் பாதத்திற் சுரம் வந்தால் இருபத்தேழுநாளிற் றீரும். (8)

ஆயிலியம்:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் ஒன்பது நாளிற் றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் இருபது நாளிற் றீரும், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் தொண்ணூறு நாளிற் றீரும், நான்காம் பாதத்திற் சுரம் வந்தால் முப்பத்தொன் பது நாளிற் றீரும். (9)

மகம்:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் மரண முண்டா கும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் முப்பதுநாளிற் றீரும், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் என்பத்தைந்து நாளிற் றீரும், நான்காம்பாதத்திற் சுரம்வந்தால் ஐந்துநாளிற் றீரும். (10)

பூரம்:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் மரண முண்டா கும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் இருபத்தைந்து நாளிற்றீரும், நான்காம்பாதத்திற் சுரம்வந்தால் என்பத்தோர் நாளிற்றீரும். (11)

உத்திரம்:—முதற்பாதத்திற் சுரம்வந்தால் எட்டுநாளிற்றீரும், இரண்டாம்பாதத்திற் சுரம்வந்தால் முப்பதுநாளிற்றீரும், மூன்றாம்பாதத்திற் சுரம்வந்தால் ஐம்பத்திரண்டு நாளிற்றீரும், நான்காம் பாதத்திற் சுரம்வந்தால் மரணமுண்டாகும். (12)

அத்தம்:—முதற் பாதத்திற் சுரம் வத்தால் எட்டு நாளிற்றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் பதினைந்து நாளிற்றீரும், மூன்றாம்பாதத்திற் சுரம்வந்தால் இருபத்தெட்டு நாளிற்றீரும், நான்காம்பாதத்திற் சுரம்வந்தால் எண்பத்திரண்டு நாளிற்றீரும். (13)

சித்திரை·—முதற்பாதத்திற் சுரம்வந்தால் ஒன்பது நாளிற்றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் பதினைந்து நாளிற்றீரும், மூன்றாம் பாதத்திற் சுரம் வந்தால் பன்னிரண்டு நாளிற்றீரும், நான்காம் பாதத்திற் சுரம் வந்தால் நாற்பத்தோர் நாளில்தீரும். (14)

சுவாதி:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் பன்னிரண்டு நாளிற்றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் மரணமுண்டாகும், மூன்றாம் பாதத்திற் சுரம் வந்தால் எண்பத்தெட்டு நாளில் தீரும், நான்காம் பாதத்திற் சுரம்வந்தால் பன்னிரண்டு நாளிற்றீரும் (15)

விசாகம்:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் ஒன்பது நாளிற்றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் மூன்று நாளிற்றீரும், மூன்றாம் பாதத்திற் சுரம்வந்தால் நாற்பது நாளிற்றீரும், நான்காம் பாதத்திற் சுரம்வந்தால் எண்பத்தோர் நாளிற்றீரும். (16)

அனுஷம்:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் மரணமுண்டாகும், இரண்டாம் பாதத்திற் சுரம்வந்தால் இருபதுநாளிற்றீரும், மூன்றாம் பாதத்திற் சுரம்வந்தால் தொண்ணூறு நாளிற்றீரும், நான்காம் பாதத்திற் சுரம்வந்தால் நாற்பதுநாளிற்றீரும்.

கேட்டை:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் மரணமுண்டாகும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் இருபது நாளிற் றீரும், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் முப்பத்தோர் நாளிற் றீரும் நான்காம் பாதத்திற் சுரம் வந்தால் எண்பத்திரண்டு நாளிற்றீரும். (18)

மூலம்:—முதற்பாதத்திற் சுரம்வந்தால் மரணமுண்டாகும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் ஒன்பது நாளிற்றீரும், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் பத்து நாளிற்றீரும், நான்காம் பாதத்திற் சுரம் வந்தால் பதினெட்டு நாளிற்றீரும். (19)

பூராடம்:—முதற் பாதத்திற் சுரம்வந்தால் ஒன்பது நாளிற் றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் மாணமுண்டாகும், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் பத்து நாளிற்றீரும், நான்காம் பாதத்திற் சுரம் வந்தால் ஐம்பத்துநான்கு நாளிற்றீரும்.()

உத்திராடம்:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் ஏழுநாளிற் றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் இருபது நளிற்றீரும், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் ஐம்பது நாளிற்றீரும், நான்காம் பாதத்திற் சுரம் வந்தல் நாற்பதுநாளில் தீரும். (21)

திருவோணம்:—முதற் பாதத்திற் சுரம்வந்தால் பதினொரு நாளிற்றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம்வந்தால் பத்து நாளிற் றீருய், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் எட்டு நாளிற்றீரும், நான்காம் பாதத்திற் சுரம் வந்தால் மரணமுண்டாகும். (22)

அவிட்டம்:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் ஒன்பது நாளிற்றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் பதினைந்து நாளிற்றீரும், மூன்றும் பாதத்திற் சுரம்வந்தால் முப்பத்திரண்டு நாளிற்றீரும், நான்காம் பாதத்திற் சுரம்வந்தால் மூப்பத்தொன்பது நாளிற்றீரும். (23)

சதயம்:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் ஏழுநாளிற்றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் பத்து நாளிற்றீரும்,

மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் நான்கு நாளிற்றீரும், நான்காம் பாதத்திற் சுரம வந்தால் ஐந்து நாளிற்றீரும். (24)

பூரட்டாதி:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் மரணமுண்டாகும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் பதினாறு நாளிற்றீரும், மூன்றும் பாதத்திற் சுரம் வந்தால் எழுபத்தொரு நாளிற்றீரும், நான்காம் பாதத்திற் சுரம் வந்தால் நாற்பத்தோர் நாளிற்றீரும். (25)

உத்திரட்டாதி:—முதற் பாதத்திற் சுரம் வந்தால் எழுநாளிற்றீரும், இரண்டாம் பாதத்திற் சுரம் வந்தால் பதினெட்டு நாளிற்றீரும், மூன்றும் பாதத்திற் சுரம்வந்தால் எழுநாளிற் றீரும் நான்காம்பாதத்திற் சுரம்வந்தால் இருபத்தெட்டு நாளிற்றீரும். (26)

ரேவதி:—முதற் பாதத்திற் சுரம்வந்தால் மரண முண்டாகும், இரண்டாம் பாதத்திற் சுரம்வந்தால் பதினொரு நாளிற்றீரும், மூன்றும் பாதத்திற் சுரம்வந்தால் பதினெட்டு நாளிற்றீரும். நான்காம்பாதத்திற் சுரம்வந்தால் இருபத்தாறு நாளிற்றீரும். (27)

ஞாயிற்றுக்கிழமையும் பரணியும் சேர்ந்த நாளில் நோய் வந்தாலும், திங்கட்கிழமையும் சித்திரையும் சேர்ந்த நாளில் நோய் வந்தாலும், செவ்வாய்க் கிழமையும் உத்திராடமும் சேர்ந்த நாளில் நோய் வந்தாலும், புதன்கிழமையும் அஸ்தமும் சேர்ந்த நாளில் நோய் வந்தாலும், வியாழக்கிழமையும் கேட்டையும் சேர்ந்தநாளில் நோய்வந்தாலும், வெள்ளிக்கிழமையும் பூராடமும் சேர்ந்தநாளில் நோய் வந்தாலும், சனிக்கிழமையும் ரேவதியும் சேர்ந்தநாளில் நோய் வந்தாலும், வந்தநோய் தீராது. அந்நோயாளியைக் கொன்றுவிடும். (28)

## 95. ரசகந்தி மெழுகு. (பா-8.)

பாரேநீரசங்கெந்தி ரசகர்ப்பூரம் பண்பான அரிதாரமூசிக்காந்தம், சீரேநீதுருசுதுத்த மிருதார்சிங்கி சிறப்பான சுக்குடனே ஓமமஞ்சள், வாரேநீதிப்பிலியு மரத்தை

கோஷ்டம் வளமானவாலுழுவை சோம்புஏலம், கூரேநீ சாதிக்காய் மிளகு சீரங் குணமான கார்போக மாசிக் காயே. (247)

காயான தெசாவரம் வாய்வி ளங்கம் கனிவசம்பு லவங்கமுடன் பரங்கிப்பட்டை, வாயான சேங்கொட்டை கடுக்காய்த் தோலும் வானகருஞ் சீரகங் காட்டுச் சீரம், பாயான சிறுதேக்குந் தாளிசப் பத்ரி பண்பாக முந்திரிகை பிரம்பின் மூலம், வாயான எட்டிவிரை தேற்றான் வித்து, வளமான நீர்ப்பூண்டு எள்ளு மாமே. (248)

ஆமேநற் கொள்ளுடனே தேங்காய் கூட அடைவான சின்னிவேர் சங்கம் வேரும், தாமேநீ அமுக்கரா கொல்லன் கோவை தயவான கொடிவேலி மூலத் தோடு, வாமேநீ வகைவகைக்கு விராகனென் று வளமான கோழி முட்டை ரண்டு வாரு, போமேநீ இவையெல்லாம் பொடியாய்ச் செய்து பொங்கமுடன் கல்லுரலில் போட்டுக் குத்தே. (249)

குத்தப்பா இதுநேரே பனைவெல்லந் தான் குணமாக நாற்சாமமிடித்துத் தீரு, பெத்தப்பா வழித்தெடுத்துச் சிமிழில் வைத்துப் பேதமில்லை சுண்டைக்காய் வீதங் கொள்ள முத்தப்பா மோறுஞ்சோ றுண்டு முன்னே முசியாமல் மருந்துண்ண மண்டலந் தான், சித்தப்பா முழுகு நாள் மருந்துண் ணுதே சிறப்பாகப் பத்தியந்தா னில்லை தானே. (250)

தானென்ற வெடிசூலை மேகசூலை தயவான இடிசூலை புடைக்குஞ் சூலை, வானென்ற துடிசூலை வாதசூலை வளமான கால்குடைச்சல் கரணை தீரும், மானென்ற விப்புருதி கண்ட மாலை மதியாத குட்டமொடு விஷநீர் தீரும்,

கோனென்ற குறைநோயுஞ் சிறங்குந் தீரும் குணமான புழுவெட்டு தடிப்பும் போமே. (251)

போமேநீ யோனிதன்னில் லிங்கந்தன்னில் பொலி வான ஆமையடி சிலந்திமேகம், தாமேநீசெங்கிரந்தி கருங் கிரந்தி தயவான அரிகிரந்தி பொரிகிரந்தி, வாமேநீ பரு கிரந்தி யிடிகிரந்தி வளமானயிடிவிழுந்து புரைமேற் புண்ணு, ஆமேநீ அரைக்கடியுந் தண்டிற்புண்ணும் அடை வான குள்ளிமா தேவியாமே. (252)

ஆமேநீ துடைவாழை முட்டுவாழை அடைவான குழிவாழை முதுகுவாழை, சேமேநீ புழுவாழை விலா வில்வாழை செயலான தமர்காயாச் சிலந்தியோடு, ஓமே நீ குறிப்புற்று யோனிப்புற்றும் ஒளிவான இடிப்புற்று கன்னப்புற்று, தாமேநீ பலசிலந்தி கன்னதோசை சதை வளருங் கண்ணோசை போகும்பாரே. (253)

பாரடாபிளவையொடு, பிளவைப்பூச்சி பண்பான ராசனென்ற பிளவையோடு, கூரடாநேத்திரம் மேற்பிள வையோடு கொடிது தடிச்சிலந்தி புடைச் சிலந்தியோடு, நேரடா பவுத்திரங்கள் மூளைமூலங்கள் நெடியபத மெட் டுச்சக் கரத்திேனாடு, வீரடா இவைகளெல்லாந் தீரும் தீரும் விதமாகப்போகருட கடாட்சந்தானே. (254)

(செ-பா.) சுத்திரசம், கந்தகம், ரசகர்ப்பூரம், அரிதாரம், ஊசிக்காந்தம், மயில்துத்தம், பால்துத்தம், மிருதார்சிங்கி, சுக்கு, ஓமம், மஞ்சள், திப்பிலி, சன்னராஷ்டம், கோஷ்டம், வாலுழு வையரிசி, சோம்பு, ஏலரிசி, சாதிக்காய், மிளகு, சீரகம், கார் போகரிசி, மாசிக்காய், தேசாவரம், வாய்விளங்கம், வசம்பு, லவங்கம், பறங்கிச்சக்கை, சேராங்கொட்டை, கடுக்காய்த்தோல், கருஞ்சீரகம், காட்டுச்சீரகம், கண்டுபாரங்கி, தாளிசபத்திரி, திரா ஷைப்பழம், பிரப்பம்கிழங்கு, எட்டிக்கொட்டை, தேற்றாங்

கொட்டை, நீர்முள்ளிவிரை, எள், கொள், கொப்பரைத் தேங் காய், சின்னிவேர், சங்கம்வேர், ஆமுச்சுணுங்கிழங்கு, ஆகாசகரு டன் கிழங்கு, சித்திரமூலவேர், இவைகளெல்லாம் தனித்தனி ஒவ்வொரு வராகனெடை எடுத்து நன்ருய்ச் சூரணஞ்செய்து வைத்துக்கொண்டு இச்சூரணத்திற்குச் சரி எடை பனைவெல்லம் சேர்த்துக் கல்லுரலிலிட்டு நன்ருய் இடிக்கின்ற சமயத்தில் கோழிமுட்டை, 2 உடைத்து அதிலூற்றி 4-சாமம் நன்ருயிடித்து மெழுகுபோலாக்கி எடுத்து வைத்துக்கொண்டு மோருஞ்சோ றும் முன்னர் சாப்பிட்டுப்பின்னர் இம்மருந்தில் சுருண்டைக்கா யளவு ஒருமண்டலம் வரைக்கும் எண்ணெயிட்டுக்கொள்ளு நா ளில் மருந்தைவிட்டு மற்ற நாளிற் சாப்பிட்டுக்கொண்டு வந்தால், வெடிசூலை, மேகசூலை, இடிசூலை, புடைக்குஞ்சூலை, துடிசூலை, வாதசூலை, கால்குடைச்சல், கால் கண்டுகெண்டாய் வீங்குதல், விப் புருதி, கண்டமாலை, குஷ்டம், விஷநீர், கைகால் குறைந்துகொண் டேட் வருகின்ற பெருநோய், சிரங்கு, புழுவெட்டு, தடிப்பு, யோனிப்புற்று, லிங்கப்புற்று, ஆமையடிச்சிலந்தி, செங்கிரந்தி, கருங்கிரந்தி, அரிகிரந்தி, பொரிகிரந்தி, பருக்கிரந்தி, இடிகிரந்தி புரைபுரையா யோடிக்கொண்டிருக்கிற ஆருப்புண், அரைக்கடி என்னும் பெண்கள் ரோகம் ஆண்குறிப்புண், குள்ளி, மாதேவி, துடைவாழை, முட்டுவாழை, குழிவாழை, முதுகுவாழை, புழு வாழை, விலாவாழை, துளையாருச்சிலந்தி, இடிப்புற்று, கன்னப் புற்று, பலவகைப்பட்ட சிலந்திகள், தோசைபோல் கன்னத்திற் படரும்படை, சதைவளருகின்ற கண்ணோசி, பிளவைகள் அவற் றிற் காதாரமான பூச்சிகள், ராஜபிளவை, கண்பிளவை, தடிப்புச் சிலந்தி, புடைச்சிலந்தி, பவுத்திரங்கள், முளைமூலங்கள், காற்சக் கரம் இந்நோய்களெல்லாம் நன்ருய்த்தீரும். பத்தியமில்லை.

## 96. பில்லிக்குத்துவலை. (பா-1.)

தானேதா னின்னமொன்று சொல்லக்கேளு தனிக் காட்டுச் சீரகத்தினிலையை வாங்கித், வானேதான் கசக்கி யதைத் தடவும்போது வளமான வெடிபில்லி யெரிவு வீக்

கம், கோனேதான்மேலெரிப்பு முரும்பில்லிகுணமாகும் பார்வைமுதல் திட்டிதீரும்,ஆமேதான் போகருட கடாட்சத்தாலே அணியாகப்பாடுகிறேன் புலிப்பாணியாமே.

(செ-பா.) காட்டுச்சீரக இலைச்சாறு தடவினல் வெடிபில்லை, உள் எரிச்சல், மேல்வீக்கம், மேலெரிச்சல், நமைப்பில்லி, பார்வை, திருஷ்டி இவைகள் தீரும்.

## 97. குமட்டிக்காய்ப் பதங்கம். (பா-8.)

ஆமேகேள் குமட்டிக்காய்ப் பதங்கஞ்சொல்வேன் அப்பனே தழுதழையுமாவிப்பட்டை, காமேநீகொடிவேலி யமுக்கராவேர் தயவாகப் பாவட்டை முடக்கற்றுனும், வாமேநீவெள்ளைச் சாரணையுங்கூட வளமானசத்திச் சாரணையு மப்பா நாமேநீ வகையுடனே நல்லவேளை நலமான தூதுவளை சடைச்சியாமே. (256)

ஆமப்பா குப்பையென்ற மேனிகூட அடவாகச் சிவன் வேம்பு அவிரிகூட்டித், தாமப்பாவில்வவேர் மாவிலிங்கந் தயவாகப் பிரம்பினுட கிழங்கினோடு, வாமப்பா வகைவகைக்குப் பலந்தான்வேறு வளமாகத் தூக்கிச்சூரணமேசெய்து, கோமப்பா சரக்குவகை சொல்லக்கேளு குணமாகப் போகருட கடாட்சந்தானே. (257)

தானென்ற சுக்குடனே கிராம்பு மோமம் தயவாக தேசாவரஞ் சிறுநா கப்பூ, வானென்ற மிளகுதா ளிசையாம் பத்திரி மைந்தனே திப்பிலிவால் மிளகு கூட்டு கானென்ற திப்பிலியின் மூல மப்பா கருவான சதகுப்பை பரங்கிப் பட்டை, கோனென்ற அரத்தையதி விடயங் கூடக் குணமான கருஞ்சீ ரகந்தான் கூட்டே. (258)

கூட்டப்பா வகைவகைக்கு விராக னைந்து குணமாகச் சூரணமாய்ச் செய்து கொண்டு நாட்டப்பா இருதா

ளூங் கல்வத் திட்டு நலமான திருகுகள்ளிப் பால்தான் கேளு, மாட்டப்பா விராகனெடை யைந்து வாரு மைந் தனே வேலியென்ற பருத்திச் சாறு, ஆட்டப்பா கொள்ளு மட்டும் விட்டு ஆட்டி அப்பனே மைபோல வரைத் துலர்த்தே. (259)

உலர்ந்தபின்பு குமட்டிக்காய் கொண்டு வந்து உத்த மனே விதைசதையும் போக்கிப் போடு, அலர்ந்தபின்பு அதிற்செலுத்தி வாயைமூடி அப்பனே பாண்டத்தி னுள் ளேவைத்து, மலர்ந்தபின் மண்சட்டியில் மண்சீலைசெய்து மைந்தனே குழிவெட்டிப் புடத்தைக்கேளு, கலர்ந்த பின்பு வெள்ளாட்டு எருவைக்கொண்டு கனமாகப் பாண் டத்தைப் புதைத்துப் போடே. (260)

போடப்பா லகுபுடம தாகப்போடு பொங்கமுடன் கருகாம லெடுத்துக்கொண்டு, நாடப்பா தூளையெல்லா மொன்றிற்கொட்டி நலமாக நிழலுலர்த்தி வைத்துக் கொண்டு, கூடப்பா சாதிக்காய் விராகன்பத்து குணமான குங்குமப்பூ வராகன் பத்து, ஆடப்பா பொடியைச் சூர ணமாய்ச் செய்து அப்பனே வெருகடியாய்க் கொண்டா டியே. (261)

கொண்டபின்பு எருமைமோர் சோறு முண்ணு கொற்றவனே உப்பதுதான் வறுத்துக் கூட்டு, கண்டபின் மற்றதொன்று மாகாதப்பா கருவான மூன்றுநா ளாறு வேளை, உண்டபின்பு வயிறளைந்தால் நிறுத்திப் போடு உத்தமனே யில்லாவிட்டால் மருந்தையுண்ணு, விண்ட பின்பு போகருட கடாட்சத்தாலே விதமாகப் புலிப் பாணி விளம்பினேனே. (262)

விளம்புகிறேன் நோய்தீரும் விபரங் கேளு விதமான வாதமொடு வாதசூலை, தளம்புகிறேன் காலுகை முடங்கி

னுங் தயவில்லாப் பக்ஷமென்ற வாதம் போகும், கிளம்பு கிறேன் சீரணமும் பொருமல் தீருங் கிருபையுடன் வயிற் றுவலி குன்மம் போகும், அளம்புகிறேன் போகருட கடாட்சத்தாலே அன்பாகப் புலிப்பாணி யருளினேனே.

(செ-பா.) தழுதாரி, மாவிலிங்கப்பட்டை, சித்திரமூல வேர், அமுக்கிறுங்கிழங்கு, பாவட்டை, முடக்கற்றான், வெள் ளைச்சாறணைவேர், சத்திச்சாறணைவேர், வேளைவேர், நாது வேளை, சடைப்பூண்டு, குப்பைமேனி, சிவனார்வேம்பு, அவுரி, வில்வவேர், மாவிலிங்கவேர், பிரப்பங்கிழங்கு, இவைகளெல் லாம் தனித்தனி வகைக்குப் பலங்கொண்டு உலர்த்திச் சூரணஞ் செய்து வைத்துக்கொண்டு சுக்கு, லவங்கம் ஓமம், தேசாவரம், சிறுநாகப்பூ, மிளகு, தாளிசபத்திரி, சிறுதிப்பிலி, வால்மிளகு, திப்பிலிக்கட்டை, சதகுப்பை, பறங்கிச்சக்கை, சந்நராஷ்டம், அதிவிடயம், கருஞ்சீரகம், இவைகளெல்லாம் வகைக்கு அரைப் பலம் எடுத்துச் சூரணஞ்செய்து முன்சூரணத்தையும், இதையும் ஒன்றாய்ச் சேர்த்துக்கொண்டு, திருகுகள்ளிப்பால் அரைப்பலம் சேர்த்து உத்தாமணிச் சாறு அந்தச் சூரணம் கொள்ளுமட்டும் விட்டு நன்றாய் அரைத்து நன்றாய் உலர்த்திக்கொண்டு, ஆற்றுத் துமட்டிக்காய் சில கொண்டுவந்து அவற்றிலுள்ள சதை, விரை களை நீக்கி இச் சூரணத்தை அக்காய்களுள் அடைத்து வாய்மூடி ஒரு மட்பாண்டத்திலிட்டு மேல்மூடி மண்சீலை செய்து குழி வெட்டி அதில் வெள்ளாட்டெரு கொட்டி மேற்படி பாண்டத் தைவைத்து மேலும் எருகொட்டி லகுபுடமாய்க் காய்கள் தீய்ந் துவிடாமல் போட்டெடுத்து அக்காய்களிலடைத்த தூள்களை மாத்திரம் ஒரு பாத்திரத்தில் கொட்டிக்கொண்டு அதை நிழலில் உலர்த்திவைத்துக்கொண்டு அத்துடன் சாதிக்காய் பலம் 1, குங்குமப்பூ பலம் 1, இவைகளைச் சூரணஞ்செய்து முன் சூரணத் தோடு சேர்த்துக் காலை, மாலை2-வேளையும் வெருகடியளவாக மூன்றுநாள் சாப்பிட்டு எருமை மோருஞ் சோறும் உப்பு வறுத் துச் சேர்த்துச் சாப்பிடவேண்டும். மற்றொன்றுமாகாது. இவ்

வாறு மூன்றுநாள் சாப்பிடுவதினாலேயே வயிறு நொந்தால் மருந்தை நிறுத்திவிடவேண்டும், வயிற்று நோயில்லாவிட்டால் சாப்பிடவேண்டும். இப்படி சாப்பிடுவதினால் பலவகையான வாதங்களும், வாதசூலை, கைகால் முடக்கல், பாரிசவாயு, அஜீரணம், வயிற்றுப்பிசம் வயிற்றுவலி, வலிகுன்மம் இவைகள் தீரும்.

## 98. சூத செந்தூரம். (பா-3.)

அருளாலே யின்னமொன்று சொல்லக் கேளு அடைவான கெந்தகந்தான் விராகனென்று, பொருளான ரசமதுதான் விராகனென்று, பொங்கமுட னிருசரக்குங் கல்வத் திட்டு, மருளாலே சிற்றாமணக்கெண்ணெய் விட்டு மீறாமல் மெழுகதுபோ லரைத் தீருட்டி, திருளாலே நார்ப்பட்டு மேலேசுற்றித் திறமாகக்கொடிவேலிப் பட்டை கேளே. (264)

கேளே நீ பட்டையைத்தான் தண்ணீர்விட்டுக் கிருபையுடன் அரைத்தெடுத்துக் கவசங் கட்டி, நாளேநீ குகையினுள்ளே சிப்பித் தூளை நன்றாகத் தான்போட்டு மேலே வைத்துச், சூளேநீ மேலுமந்தப் பொடியைப் போடு சுகமாகச் சில்லிட்டு மண்சீலை செய்து, தாளேநீ சாணுமியில் புடத்தைப் போடு தயவாகச் சூதமது செந்தூர மாமே. (265)

ஆமப்பா நோய்களெல்லா மகன்று போகும் அடவாகத் தேகமது சிவந்து மின்னும், போமப்பா பெரியோர்கள் கடாட்சஞ்செய்வார். பொங்கமுடன் தேவதைகள் கிருபை கூறுந், தாமப்பா சிந்தூர முண்டோர்க் கெல்லாந் தாழ்வொன்றும் வாராது கர்மந் தீரும், நாமப்பா போகருட கடாக்ஷத்தாலே நலமாகப் புலிப் பாணி பாடினேனே. (266)

(செ-பா.) சுத்தி செய்த கந்தகம் வராகனெடை 1, சுத்தி செய்த இரசம் வராகனெடை 1, இவ் விரண்டையும் சிற்றாமணக் கெண்ணெயால் நன்றாய் மெழுகுபத மாகும்வரை அரைத்துருட்டிச் சிவப்பு நார்ப்பட்டுச்சுற்றி, அதன்மேல் சித்திரமூலவேர்ப் பட்டை பச்சையாயரைத்துக் கனக்கப்பூசி ஒரு சிறு குடுவையில் அடியிலும் மேலும் சிப்பித்தூள் போட்டு நடுவில் இவ்வுருண்டையைவைத்து மேல்மூடிச் சீலைசெய்து ஒருசாண் உமியில் புடம் போட்டு ஆறினபின் எடுத்துப் பார்த்தால் கருஞ்செந்தூர மாகும் இதனால் பலநோய்கள் தீரும் இதைப்பட்டுக், கருப்பு செந்தூர மென்பர் சிலமருந்து நூற்றலைவர்.

## 99. கந்தக ரசாயனம். (பா-3.)

பாடினேன் கெந்தகந்தான் வேண மட்டும் பாங்காக வாங்கிவந்து சொல்லக் கேளு, ஆடியே கலசமதில் பசுவின் பாலை அடைவாகத் தானூற்றிப் புதைத்துப் போடு, கூடியே சிறுகலசந் தமர்கள் போட்டுக் குணமான பாற் கலச மேலே வைத்து, நாடியே கந்தகத்தை யிதற்குளிட்டு நாயகனே சில்லிட்டுச் சீலை செய்யே. (267)

செய்தபின்பு லகுபுடம் தாகப் போடு சிறப்பான கந்தியது திறம தாச்சு, கொய்தபின்பு அதையெடுத்துக் கழுவிப் போட்டுக் குழியம்மி தன்னில்நீர்ப் பூண்டின் சாற்றில், பைதபின்பதை யரைப்பாய் சாம மைந்து பாங் கான அதையெடுத்து வைத்துக் கொண்டு, செய்தபின்பு விராகனெடை பாதி தானுந் தீவிரமாய்ப் பனைவெல்லந் தன்னிற் கொள்ளே. (268)

கொள்ளவேமண்டலத்தில் குட்டரோகம் குணமான வெள்ளையொடு கறுப்புந் தீருப், தள்ளவே சொறிசிரங்கு மேக ரோகந் தடிப்புடனே செவ்வட்டைக் கடிரணங்கள்,

விள்ளவே பத்தியந்தா னிதற்கோ வில்லை விதமான நெய் பாலு தயிர்மோ ருண்ணு, அள்ளவே போகருட கடாட் சத்தாலே அடைவாகப் புலிப்பாணி யருளி னேனே. ()

(செ-பா.) வேண்டிய அளவு நெல்லிக்காய்க் கந்தகம் கொண்டுவந்து ஒரு துவாரங்களிட்ட குடுவையிலிட்டு மேல்மூடி மண்சீலை செய்து ஒருபெரியசட்டியில் பசுவின் பால்விட்டு ஒரு குழிவெட்டி அதில் அப்பாலூற்றிய கலசத்தை வைத்து அதன் மேல் கந்தகம்போட்டுள்ள குடுவையைவைத்துச் சிறுபுடமாய்ப் போட்டால் கந்தகமுருகி அடிச்சட்டியில்விழுந்திருக்கும். அதை யெடுத்து நன்றாய்க்கழுவி உலர்த்திக் கல்வத்திலிட்டு நீர்முள்ளிச் சாற்றால் 5-சாமமரைத்து அதை எடுத்து வைத்துக்கொண்டு அரை வராகனெடை வீதம் பனைவெல்லத்தில் இரண்டு வேளை யும் ஒரு மண்டலம் வரைக்குஞ் சாப்பிட்டால் குஷ்டரோகம், வெண்மேகம்,கருமேகம், சொறி, சிரங்கு, மேகரோகம், தடிப்பு, செவ்வட்டைக்கடி, விரணம் இவைகள் தீரும். இதற்குப் பத்திய மில்லை. பசும் நெய் பால், தயிர், மோர் இவைகள் மிகுதி யாகச் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

## 100. முளைமூல வேதுநீர், மருந்து. (பா-2.)

அருளாலேயின்னமொன்று சொல்லக்கேளு அடை வாக ஆலரசு அத்திப்பட்டை,பொருளாலே வகைவகைக் குப் பலந்தான்பத்து புகழ்ந்திடித்துப் பாண்டத்தில் போட்ட பின்பு, திருளாமல் பூண்டுடனே சலத்தை விட்டுத் திறமாகக் காய்ச்சியதை மேலேவாரு, இருளாதே யீராறுநாள் தான்வாரு இதமாக அந்திசந்தி மருந்தை யுண்ணே. (270)

உண்ணப்பா சிவகரந்தை விஷ்ணுகரந்தை உத்த மனே அரைத்து முள்ளிக்காயின்வீதம், பண்ணப்பா உள் மூலமுளைகளெல்லாம் பதறியேயுதிர்ந்து விடுங்கண்டு

பாரு, நண்ணப்பா பத்தியங்களி தற்கோவில்லை நாயகனே யீராறு நாளுக்குள்ளே, திண்ணப்பா தீர்ந்துவிடுங்கண்டு பாரு திறமான போகருட கடாட்சந்தானே. (271)

(செ-பா.) ஆலம்பட்டை, அரசம்பட்டை, குற்றாலம்பட்டை இவைகள் வகைக்குப் பலம 10, நன்றாயிடித்து ஒருபாண்டத்தி லிட்டுத் தண்ணீர் நிறையவிட்டு நன்றாய்க்காய்ச்சி அந்த நீரை அம்மூளை மூலத்தின்மேல் காலை மாலை இரண்டுவேளையும் பன் னிரண்டு நாள் வார்க்கவேண்டும். அந்தப் பன்னிரெண்டு நாட் களும் சிவகரந்தை. விஷ்ணுகாந்தி இவையிரண்டும் சமமாயெ டுத்தரைத்துக் கண்டங்கத்தரிக்காயளவு காலைமாலை சாப்பிட்டுக் கொண்டுவர வேண்டும். அப்படி செய்தால் மூலத்திலிருக்கின்ற மூளை உதிர்ந்துவிடும். இதற்குப் பத்தியமில்லை.

## 101. பயித்தியத்திற்குப் பச்சிலை. (பா-2.)

தானென்ற சிறுகீரை வேரைத்தானுந் தானரைத்து எலுமிச்சங் காய்தான்வீதம், வானென்ற மூன்றுநாளாறு வேளைவளமாக வெந்நீரிற் கொடுத்துப்பாரு, கோனென்ற ஆறுநாளுப்பாகாது கொற்றவனே ஏழாநாளெல்லாமா கும் ஊனென்ற பயித்தியந்தான் தீர்ந்துபோகும் உத்த மனே போகருட கடாட்சந்தானே. (272)

தானப்பா இப்பாலாம் நீர்க்கடம்புவேரைத் தான் கொடுப்பாய் பயித்தியந்தான் தீரும்பாரு, வானப்பா கவிழ்தும் பைமிளகு பூண்டுவளமாக நசியமிடு ஆறுவேளை, சீனப்பா மயக்கமுதல் கிறுகிறுப்பு சிறப்பான அறுநினை வுந்தீர்ந்து போகும், ஆனப்பா போகருட கடாட்சத் தாலே அடைவாகப் புலிப்பாணி பாடினேனே. (273)

(செ-பா.) காட்டுசிறுகீரை வேரை நன்றாயரைத்து எலுமிச் சங்காயளவு மூன்றுநாள் காலை மாலை இரண்டுவேளையும் வெந்நீ ரிற் கொடுக்கவேண்டும். மருந்து தின்னும் மூன்றுநாளும், மறு

பத்தியம் மூன்று நாளுமாக ஆறுநாள் வரைக்கும் உப்பாகாது. ஏழாநாள் எல்லாமாகும்.

## 102. வேறு பச்சிலே.

(செ-பா.) நீர்க்கடம்பின் வேரை முன்போலரைத்துக் கொடுக்க வேண்டும்.

## 103. வேறு நசியம்.

(செ-பா.) கவிழ்தும்பையிலே, மிளகு, பூண்டு, இம்மூன்றையும் நன்ருய் நசுக்கி ஒருமெல்லிய சீலையில் முடிந்து அம்மூட்டையை அழுத்தி வெளிவருகின்ற நீரை மூக்கில் தினந்தோறும் 6-நாள் காலே, மாலே 2-வேளேயும் பிழிந்தால் மயக்கம், கிறுகிறுப்பு, நினைவு தடுமாற்றம் இவைகளெல்லாம் தீரும்.

## 104. கெட்ட சகுனம். (பா-2.)

பாடினே னின்னமொன்று சொல்லக்கேளு பண்பில்லாத் தலைவிரித்தல் மொட்டையப்பா, நாடினேன் சங்யாசிசெட்டிதட்டான் நலமான குயவன் மூக்கரையன் செக்கான், கூடியேநாவிதனும் பிணிநோயாளன் குணமில்லாக் கட்டையோடு விலங்குயாக்கை, சூடினேன்கயிறு சக்கரியுமாக சுனேகெட்ட வழிக்குண்டியாகாதென்னே.()

ஆகாதுபுகையோடு பின்புதும்மல் அப்பனே அழுகையோடு முசலுமாகா, வாகாது நீர்ப்பானேயுடைத்த போதுவழியிலே யடித்துவிழக் காணப்போகா, பாகாது மரம்வெட்டல் அடியுஞ்சண்டை பண்பானகட்டிலோடு நாற்காலி,முக்காலி, சோகாது இவைமூன்றும் வந்துகண்டால் சுருக்கப்பா மரணமென்று சொல்லிப்போடே.

(செ-பா.) தலை விரித்துக்கொண்டு வருகிறவன், மொட்டைத் தலையன், சங்யாசி, செட்டி, தட்டான், குயவன், மூக்கரையன், செக்கு ஓட்டுபவன், அம்பட்டன், நோயாளி, விறகுகட்

டுச் சுமைக்காரன், கயிற்றுடன் வருபவன், வாண்ியன், கட்டுச் சோறு, புகை, பின்தும்மல், அழுகை, முசல், தண்ணீர்ப்பானை யுடைத்தல், வழிச் சண்டைபிடித்துத் தள்ளபட்டவன், மரம் வெட்டல், அடிபிடி சண்டை, கட்டில், நாற்காலி, முக்காலி, இவைகள் எதிரேவரின் அந்நோய் தீராது, அந்நோயாளி மரண மாவன்.

## 105. நல்ல சகுணம். (பா-1)

போடேநீ தேவதைகள் ராசாயானை பொலிவான பூஷணமாம் பெண்கள் பிள்ளை, நாடேநீ பூரணமாங் கும் பத்தோடு நலமான தயிரோடுபாலும்பானை, சூடேநீ குதிரையொடு வேதியர்கூட்டஞ் சுகமானகுடை சுருட்டி சிவிகைகளுளு, ஆடேநீ வெண்சாமரைசுகந்தபுஷ்பம் அப் பனே வாத்தியங்கள் கேட்கநன்றே. (276)

(செ-பா.) அரசன், யானை, நகைகளணிந்த பெண், (கட்டுக் கழுத்தி) பூரணகும்பம், தயிர்ப்பானை, பால்பானை, குதிரை, பார்ப்பார் கூட்டம், குடை சுருட்டுபவன், பல்லக்கு, கள், வெண் சாமரை, மணமுள்ளபூ, நல்வாத்தியங்கள் இவை நற்சகுனங்க ளாம். ஆகையால் இச்சகுணங்கள் நேரிடச்சென்ற மருத்துவன் சிகிச்சை செய்கின்ற நோயாளிகளின் நோய்கள் தீர்ந்து சுகப் படும்.

## 106. பல சுரங்களுக்குங் குடிநீர், (கஷாயம்) சுரசப்போடி சுரசம். (பா-9)

நன்றாகவின்ன மொன்று சொல்லக்கேளு நலமான தூதுவளை கண்டங்கத்திரி, பன்றாக நிலவேம்புமுத்தக் காசு பாங்கான ஆடாதோடை விஷ்ணுகாந்தி, குன்றாத பர்ப்படகம் சீந்தில்தண்டு குணமான சிற்றாமுட்டி வேரி னோடு, அன்றாகச் செந்தொட்டி மூலமப்பா அடைவான வேம்புடைய பட்டைதானே. (277)

பட்டையப்பா முசுக்கைமா துளையின் வேரும் பாங் கான தும்பைப்பேய்ப் புடலங் கூட்டி, கிட்டையமாம் நாய்த்துளசி வேரு மையா கிசமாகவகைவகைக்கு விரா கன்பத்து, தட்டையாம் உரல்தனிலே யிடிக்கும் போது தனியாகச் சரக்குவகை சொல்லக்கேளு, நட்டமாம் தேக் குதாளிசமாம் பத்திரி நலமான சுக்குடன்சிற் றரத்தை யாமே. (278)

ஆமேதான் தெசாவரந் திப்பிலி யப்பா அடைவாக வகைவகைக்கு விராகன்மூன்று, தாமேதா னிவையெல் லா மிடித்துத் தோண்டித் தயவாக ஆறுபங்கு வைத்துப் பின்னே, வாமேதான் பாண்டத்தி லெடுத்துப்போடு வள மாக ரண்டுபடி சலத்தைவிட்டுப், போமேதா னெட் டுயக் குறுக்கியப்பா பொங்கமுடன் மூன்றுநாள் கொடுத் டொன்றிடாயே. (279)

கொடுத்திடுநீ மூன்றுநா ளாறு வேளைக் குணமாகும் புளிபுகையு மோருந் தள்ளு, அடுத்திடவே கொடுத்திடுவா யிந்தப் பாகம் அப்பனே சுரமேக மெல்லாந்தீரும், கடுத் திடுநீ யிதுமிஞ்சி சுரமே வந்தால் கற்கமொன்று சொல்லு கிறேன் கனிந்துகேளு, வடுத்திடுதிப் பிலிசுக்கு சிற்ற ரத் தை வளமான தெசாவரங் கோஷ்ட மாமே. (280)

ஆமேதான் தேக்கு அதிமதுரங் கிராம்பு அப்பனே கருஞ்சீரகம் வாய்விளங்கம், போமேதான் தாளிசபத் திரியு மாஞ்சில் பொங்கமுடன் மிளகுடனே அக்கராகா ரம், தாமேதான் விடயமதி மதுரங் கூட்டித் தயவாக வகைவகைக்கு விராகன் வாங்கி, வாமேதான் புன்வர லாய் வறுத்துக்கொண்டு வளமாகப் பொடிபண்ணி வைத் துக் கொள்ளே. (281)

கொள்ளேநீ யிஞ்சியைத்தான் சுரசஞ் செய்து குண மாக வெருகடிதான் பொடியைப் போட்டு, அள்ளேநீ மூன்றுநா ளாறுவேளை அப்பனே கொடுத்தவுடன் தீரும் பாரு, தள்ளேநீ யிதுமிஞ்சி யதிக மானல் தயவான தோஷசன்னி அடுத்த தானல், சுள்ளேநீ சின்னியுடன் மாவி லிங்கஞ் சுகமாக நொச்சியுடன் முருங்கை யாமே.

ஆமேநீ ஆவியுடன் சங்கம் வேரும் அப்பனே யிந்த வகைப் பட்டை யெல்லாம், தாமேநீ யிஞ்சியுடன் சிற்ற ரத்தைத் தயவாக விவையெல்லாஞ் சுரசம் வாங்கி வா மேநீ பூநாகம் பொடிவறுத்து வகையாக வராகனெடை பொடியும்போட்டுப், போமேநீ வெருகடிமுன் பொடியில் போட்டுப் பொலிவான தேனெருகா செடைதான் வா ரே. (283.)

வாரேதான் முலைப்பாலு முள்ளிப் பாலும் வளமாக முசுறுமுட்டைப் பாலுஞ் சேரு, கூரேதான் வெள்ளுள்ளி தயிலங் கொஞ்சம் குணமான பாலுடைய விண்டு கொஞ் சம், நேரேதான் கோழியுட முட்டை கொஞ்சம் நிச்சய மாய்க் கஸ்தூரி ரோசனையுங் கூட்டிச், சாரேதான் கொடுத் திடுவா யாறுவேளை சாந்தமாய்ப் போகுமடா கண்டு பாரே. (284)

பாரேநீ வலிப்புடைய சன்னி தோஷம் பறக்குமடா இச்சுரசங் கண்டபோத, தேரேநீ விதியிருந்தால் லபிக்கும் பாரு திறமாகச் சாத்திய மசாத்தியமுங் காணும், வீரேநீ சாத்தியந்தா னிருந்தால் செய்நீ வீதமசாத் தியமென்றல் செய்யொணுது, கூரேநீ போகருட கடாட்சத் தாலே கொற்றவனே புலிப்பாணி பாடி னேனே. (285)

(செ.பா.) தூதுவளை, கண்டங்கத்தரி, நிலவேம்பு, கோரைக் கிழங்கு, ஆடாதோடை, விஷ்ணுகாந்தி, பர்ப்பாடகம், சீந்திற்

கொடி, சிற்ருமுட்டிவேர், பேராமுட்டி, வேப்பம்பட்டை, முசு முசுக்கை, மாதுளம்வேர், தும்பை, பேய்ப்புடல், நாய்த்துளசி இவைகள் வகைக்குப் பலம் 1. கண்டுபாரங்கி தாளிசபத்திரி, சுக்கு, சந்நராஷ்டம், தேசாவரம், திப்பிலி, இவைகள் வகைக்கு மூன்று வராகனெடை, இவைகளெல்லாவற்றைமிடித்து ஆறுபங் காக்கி, அதில் ஒருபங்கை ஒருபாண்டத்திலிட்டு இரண்டுபடி தண்ணீர் வார்த்து எட்டொன்ருய்க் காய்ச்சி ஒருவேளை சாப்பிட வேண்டும். இப்படியே மற்றப் பங்குகளையும் செய்யவேண்டும். இம்மூன்று நாள் 6-வேளைகளில் சர்வசுரங்களுந்தீரும். இதற்கு புளி, புகை, மோர் இவை ஆகா இச்சாப்பத்தியம் இதற்கு மிஞ்சிச் சுரம் வந்தால்.

## கற்கம்

(செ-பா.) திப்பிலி, சுக்கு, சந்நராஷ்டம், தேசாவரம், கோஷ்டம், கண்டுபாரங்கி, அதிமதுரம், கிராம்பு, கருஞ்சீரகம் வாய் விளங்கம், தாளிசபத்திரி, சடாமஞ்சில், மிளகு, அக்கரா காரம், அதிவிடயம் இவைகளெல்லாம் வகை ஒன்றுக்கு வராக னெடை ஒன்ருக எடுத்துச் சிறுகவறுத்துப் பொடிபண்ணி வைத்துக்கொண்டு இஞ்சிசுரசஞ்செய்து அச்சுரசத்தில் இச் சூரணத்திலிருந்து மூன்று விரல்கொண்ட சூரணங்கலந்து மூன்றுநாள் ஆறுவேளை கொடுத்தால் எல்லாச் சுரங்களுந்தீரும் இதிலுந்தீராமல் மிஞ்சினலும், சந்நிதோஷமிகுதிப்பட்டாலும்.

## சுரசம்

(செ-பா) சிறுசின்னிப்பட்டை, மாவிலிங்கப்பட்டை, நொச் சிப்பட்டை, முருங்கைப்பட்டை, ஆவிப்பட்டை, சங்கம்பட்டை, இஞ்சி, சந்நராஷ்டகம், இவைகளையெல்லாஞ் சுரசஞ்செய்து பூநாகம் சுத்திசெய்து வறுத்துப் பொடிபண்ணி வராகனெடை பொடியும், முன்செய்த பொடி மூன்று விரல்கொண்ட அளவும் போட்டு, ஒருகாசெடை தேன்விட்டு, முலைப்பால், வெள்ளைப் பூண்டு தைலம், முசுறுமுட்டைப்பால், வெள்ளைப்பூண்டின்சாறு

இண்டங்கொழுந்துசாறு, அண்டத்தைலம் இவைகள் கொஞ்சங் கொஞ்சம்விட்டு, கஸ்தூரி, கோரோசனை இவைகள் வகைக்கு 1-குன்றிசேர்த்து மூன்றுநாள் ஆறுவேளை கொடுத்தால் வலிப்புள்ள சந்நிதோஷம் தீரும். ஆனால், சாத்தியம் அல்லது கஷ்டசாத்தியமாக விருந்தால் செய்வது நல்லது. அசாத்தியமானல் செய்யக்கூடாது.

## 107. தளம் (கண்டேஷம்.) (பா-2.)

பாடினேன் தளமொன்று சொல்லக்கேளு பாங்காக கூப்பொன்வெள்ளி பவழஞ் சிங்கி, நாடினே னமையென்ற வோடு மப்பா நலமான வில்வோடு விளாவி னேடு, கூடினேன் கிராம்பு அதிமதுரஞ் சுக்குக் குணமாகத் தேசாவாரந் திப்பிலிய ரத்தை, ஆடினேன் உருத்திராக்ஷ மிவையெல்லாந் அடைவாக முலைப்பாலி லுரைத்திடாயே. ()

உரைத்தெடுத்து மயிற்பீலி சுட்டசாம்பல் உடன் சத்தி நாவதனில் தளமாய்ப்போட்டால் கரைத்தெடுத்து நாவதனில் சலந்தானூருங் கனலில்லா தோஷமது தணியும் பாரு, மறைத்தெடுத்த பேய்க்குமட்டி வேரைத் தட்டி மைந்தனே கொடுத்துவிடு அடக்கிக் கொள்ளத், துரைத்தெடுத்த தேகத்தில் வந்த தோஷந் துன்பமது தான்விலகும் கண்டு பாரே. (287)

(செ-பா.) பொன், வெள்ளி, மவழம், மான்கொம்பு, ஆமைஓடு, வில்வஓடு, விளாஓடு, கிராம்பு, அதிமதுரம், சுக்கு, தேசாவரம், திப்பிலி, சந்நராஷ்டம், உருத்திராக்ஷம் இவைகளையெல்லாம் முலைப்பாலிலரைத்து மயிலிறகு சுட்டசாம்பல் கொஞ்சங்கூடக் கலந்து தோஷத்தின்மேல் வாந்திபண்ணுகிற நாக்கில் தடவினல் நாக்கில் நீர் சுரக்கும் தோஷங்கள் நீங்கும் இல்லாவிட்டால் பேய்த்துமட்டிவேரைத் தட்டி வாயில் அடக்கிக்கொண்டாலும் தோஷங்களெல்லாம் தீர்ந்துபோம்.

## 108. தாகந்தீர, விளாவிலை முதல் குடிநீர். (பா-2)

*பாரேதான் விளாவிலையு மாடா தோடை பாங்கான அரசனுட கொழுந்து மப்பா, சேரேதான் வகைவகைக் குப் பிடிதா னென்று சிறப்பான மணலும் அறைப்படி தான் போட்டுக், கூரேதான் முந்திரிக்காய் மதுரந்தானுங் குணமாக வகைவகைக்கு வராகனென்று, வீரேதான் இவையெல்லாங் கருகு மட்டும் விதமாகத் தான்வறுத்துத் தண்ணீர் வாரே.* (288)

*வார்த்தப்பா தானெரித்துக் குறுகக் காய்ச்சி வடி கட்டித் தான்கொடுப்பாய் தாகந் தீரும், கோர்த்தப்பா இந்தவித மூன்று நாளுங் கொடுத்திடவே தாகமென்ற தெல்லாந்தீரும், பார்த்தப்பா சுரதாக முஷ்ண தாகம் பரிவான அந்திரதாகம் பறவை தாகம், பேர்த்தப்பா குடிநீரைக் குடித்தபோது பொங்கமுடன் தீருமடா திண் ணந் தானே.* (289)

(செ-பா.) **விளாவிலை ஆடாதோடாயிலை, அரசங்கொழுந்து இம்மூன்றும் வகைக்கு ஒவ்வொருபிடி, மணல் அரைப்படி, திராக்ஷைப்பழம் அதிமதுரம், இவை வகைக்கு ஒருவராகனெடை இவைகளெல்லாம் கருகுகிறவரைக்கும் வறுத்துப்பிறகு நீர் விட்டு எரித்துச் சுண்டக்காய்ச்சி வடிகட்டிக்கொடுத்தால் தாகந் தீரும் இவ்வாறு மூன்றுநாள் கொடுத்தால் சுரதாகம், உஷ்ண தாகம, ஆந்த்ரதாகம், பறவைதாகம், இவைகளெல்லாம்தீரும்**

## 109. வாயுவுக்களுக்கும் சங்கம்வேர்க் குடிநீர். (பா-2)

*திண்ணமதாய்ச் சங்கம்வேர் முட்கொழுஞ்சி திற மான கொடிவேலி பரங்கிப் பட்டை, வண்ணமாய்ச் சுக் குடனே வாய்விளங்கம் வளமான சிறுதேக்கு கொத்த மல்லி, எண்ணமாய் வகைவகைக்கு வராகன் ரண்டு இடித் தெடுத்துப் பாண்டத்தி லிதமாய்ப்போட்டு, நண்ணமாய்ச்*

சலமதுதான் கொஞ்சம்விட்டு நாயகனே எட்டொன்ருய்க் குறுக்கி வாங்கே. (290)

வாங்கியே மிளகதுவும் வராக னென்று வளமாகப் பொடிபண்ணி யிதனிற் போட்டுத், தாங்கியே விளக்கெண்ணெய் துட்டெடைதான் விட்டுத் தான்கொடுப்பாய் மூன்றுநா ளாறு வேளை, யேங்கியே புளிபுகையுந் தள்ளு தள்ளு இதமான வாயுவுடன் மேகவாயு, வோங்கியே மேல்கடுப்பு புளித்த ஏப்பம் ஓடிவிடும் வாயுவெல்லாந் தீருந்தானே. ()

(செ-பா.) சங்கம்வேர் கொழுஞ்சிப்பட்டை, சித்திரமூல வேர், பறங்கிங்சக்கை, சுக்கு, வாய்விளங்கம், கண்டுபாரங்கி கொத்துமல்லி, இவைவகைக்கு வராகனெடை 2, எடுத்திடித்து ஒரு பாண்டத்திற்போட்டுத் தண்ணீர் 1-படிவிட்டு அரைக்கால் படியாகக் காய்ச்சி, மிளகு 1-வராகனெடை பொடிபண்ணி அதிற்போட்டு விளக்கு நெய் 2-காசெடைவிட்டு 3-நாள் 6-வேளை கொடுத்துப் புளி, புகைதள்ளினுல், வாயு, மேகவாயு, மேற்கடுப்பு புளியேப்பம், இவைகளெல்லாந்தீரும்

## 110. சூட்டுக்கு நீர். (பா-3)

தீருமே யின்னமொன்று சொல்லக்கேளு திறமான இளநீரு படிதான் மூன்று, ஆறுமே எலுமிச்சம் பழச் சாறு நாழி அப்பனே சுண்ணநீர்த் தெளிவு தானும், ஏருமே படியரைதா னளந்து வாரு இசையான குமரிச்சார் பலந்தா ளுறு, வீறுமே சீரகமும் பலந்தா னென்று வித மான ஏலமறைப் பலந்தான் பாடே. (292)

போடேநீ ஏலமதைப் பொடித்துப்போடு பொங்க முடன் புதுச்சட்டி தன்னிற் சேர்த்து, நாடேநீ மணலிட்டு ஈரஞ்செய்து நாயகல்ன யிதுமேலே சட்டிவைத்துக், கூடேநீ ஈரச்சீலை யதனுல் மூடிக் குணமாக வைத்திருநீ

பகற்காலந் தான், சாடேநீ ராக்காலம் பனியில் வைத்துச் சார்வாக மண்டலமுங் கால்தான் கொள்ளே. (293)

கொள்ளவே கால்படிதா னந்திசந்தி குணமாகக் குமரிச்சார் பலமுக்கானு, உள்ளேநீ கொண்டுவர இந்தப் பாகம் உத்தமனே நீரெரிவு ரத்தவெள்ளை, தள்ளேநீ யுள்ளெரிவுங் கடுப்புந்தீரும் தயவில்லாச் சங்கையது தணியும்பாரு, அள்ளேநீ போகருட கடாசத்தாலே அடைவாகப் புலிப்பாணி பாடினேனே. (294)

(செ-பா.) இளநீர் படி 3, எலு மிச்சம் பழச்சாறு படி 1, சுண்ண நீர்த்தெளிவு படி ½, கற்றாழஞ்சாறு பலம் 6, இவைகளை யெல்லாம் ஒரு புதுமண்பாண்டத்திற் கலந்துவைத்துக்கொண்டு சீரகம் பலம் 1, ஏலரிசி பலம் 1, இவ்விரண்டையும் பொடி பண்ணிப்போட்டு மெல்லிய சீலையால் மேல்மூடி ஈரமணல்மேல் அச்சட்டியைவைக்கவேண்டும். இராக்காலங்களில் பனியில் வைக்கவேண்டும். இப்படி வைத்துப் பத்துநாள் காலை மாலை வேளைக்குக் கால்படி வீதஞ் சாப்பிட்டால் நீரெரிச்சல், நீரில் இரத்தம் வருதல், நீரில் வெள்ளை வீழ்தல், உள்ளெரிவு, நீர்க் கடுப்பு, எப்பொழுதுஞ் சூடாயிருந்தால் ஆகிய இவைதீரும்

## 111. வீரக்களிம்பு. (பா-1)

பாடினே னின்னமொன்று சொல்லக்கேளு பண்பான வீரமது வராகனென்று, ஆடினேன் வெண்ணெயிலே போட்டரைத்து அடைவாகமேல் பூசவகையைக்கேளு, கூடினேன் மேல்தனிலே மேகத்தாலே கொற்றவனே சொரிசொரியாய்ப் புள்ளிகாணும், நாடினேன் அதையும் வண்டு கடிதானென்று நாட்டிலே சொல்வார்க ளறிந்துபாரே. (295)

(செ-பா.) வீரம் வராகனெடை 1- ½-பலம் வெண்ணெயிலரைத்து மேகத்தால் சொரி சொரியாகவும், புள்ளி புள்ளியாக

வும், உலகத்தார் வண்டுகடி என்று சொல்லப்படுவதான புண்களின்மேற்பூச ரணமாகும்.

## 112. பூரக்களிம்பு. (பா-1)

பாரேநீ புள்ளியின்மேல் மூன்றுநாள்தான் பண்பாகத் தான்பூச ரணமுமாறும், சேரேநீ ரசமென்ற பூரமப்பா செயலாக வராகனிடை வாங்கிவந்து, தீரேநீ பசுவெண்ணெய் வராகனேந்தில் திறமாகத்தான் போட்டு அரைத்து மைபோல், வீரேநீ பூசிடவும் ரணங்களாறும் விதமான போகருட கடாட்சந்தானே. (296)

(செ-பா.) ரசகர்ப்பூரம் 1- வராகனெடை 5-வராகனெடை பசுவின் வெண்ணெயிலிட்டு மைபோலரைத்துப் பூச விரணங்களெல்லாம் ஆறிவிடும்.

## 113. உஷ்ணகாந்தல் குடிநீர். (பா-2)

தானேதா னின்னமொன்று சொல்லக்கேளு தயவான அறுகம்வேர் நெரிஞ்சில்வேரும், மானேதான் முருங்கையுட ஈர்க்குமப்பா மைந்தனே வகைவகைக்குப் படிதானென்று, வானேதான் பொடிப்பொடியாய் நறுக்கிப்புன்மை வறுக்கையிலே சீரகமுமிளகும் போட்டு, ஆனேதான் கசகசா வராகன் ரண்டு அப்பனே தான் போட்டுச் சலத்தைவாரே. (297)

வாரேநீ படிசலந்தா னெட்டொன்றாக்கி வளமாகப் பசுவெண்ணெய் கழஞ்சுபோட்டுச், சேரேநீ கொடுத்தவுடன் உஷ்ணகாந்தல் சேர்த்துவந்த வயிற்றுவலி கடுப்புந்தீரும், கூரேரேநீ யிந்தவித மூன்றுநாள்தான் கொடுத்திடவே ஊஷ்ணத்தாங் காங்கைதீரும், தீரேநீ போகருட கடாட்சத்தாலே திறமாகப் புலிப்பாணி சொன்னேன் தானே. (298)

(செ-பா.) அறுகம்வேர். நெருஞ்சில்வேர், முருங்கை ஈர்க்கு இம்மூன்றும் வகைக்கு ஒவ்வொரு பிடி எடுத்துப் பொடிப்பொடியாய் நருக்கி இளவறுப்பாய் வறுத்துக் சீரகம், மிளகு, கசகசா இவைகள், வகைக்கு வராகனெடை 2, போட்டு நீர் படிவிட்டு எட்டொன்றாய் குறுகக் காய்ச்சிப் பசுவின் வெண்ணெய் வராக னெடை $1\frac{1}{4}$-போட்டுக் கொடுத்தால் உஷ்ணகாந்தல் வயிற்றுவலி, வயிற்றுக்கடுப்பு, இவைகள் தீரும். இப்படி 3,நாள் கொடுத்தால் உஷ்ணகாங்கை தீரும்,

## 114. குடைச்சலுக்குத் தைலம். (பா-1.)

தானையா மயிற்பீலி பலந்தான்ரண்டு தான்போட்டுச் சட்டியிலே கருக்கிக்கொண்டு, வானையாமஞ்ஞ சிலைதான் வராகன் பத்து வளமாகத்தான்போட்டு உருகும்போது, சேனையா வேப்பெண்ணெய் படிதான்விட்டுச் செயலாகத் தானெரித்து எடுத்துக்கொண்டு, மானையா பூசியல்லோ பிடிக்கும்போது மைந்தனே குடைச்சல்முதல் குத்து போமே. (299)

(செ-பா.) மயிலிறகு பலம் 2, சட்டியிலிட்டு நன்றாய்க் கருக்கிக்கொண்டு மஞ்ஞசிலை பலம் 1, கூடப்போட்டு உருகும் போது வேப்பெண்ணெய் படி 1, விட்டு எரித்து எடுத்து வைத்துக்கொண்டு பூசிப்பிடிக்கும்போது குடைச்சல் முதல் யாவுந்தீரும்.

## 115. குடைச்சலுக்குப்பற்று, நீர். (பா-4.)

போமேநீ யிலைக்கள்ளி கொண்டுவந்து பொடிபொடியாய்க் கண்டமதாய் நறுக்கிப்போட்டு, நாமேநீ சலமது தான் பதக்குவிட்டு நலமான எட்டொன்றாய்க் குறுக்கிக் கொண்டு, தாமேநீ மறுசட்டி தனிலிருந்துத் தக்கதாய் வெள்ளாட்டு அமுரிதானும் வாமேநீ படிரண்டு கூடவிட்டு வளமாகப் பாகுபோல் நாய்ச்சிடாயே. (300)

காய்ச்சியே மேலெங்கும் பூசச்சொல்லிக் கனிவாக ஆட்டுத்தோல் கலைத்தோல் தன்னில், ஆய்ச்சியே படுத் திருக்கச் சொல்வாய்நீயும் அப்பனே சாயரட்சைதன்னிற் கேளு, வாய்ச்சியே நொச்சியிலை முடக்கற்றானும் வளமா கத் தழுதாழைமாவிலிங்கம், காய்ச்சியே மேனியுடன் தும்பைகொண்டு தயவாகப் பூவரசம்பட்டையாமே. ()

ஆமேநீயெட்டிபா வட்டைவாகை அடைவாக எருக் கம்பூ கடம்பின்பட்டை, தாமேநீ காட்டெலுமிச்சை இலையி னோடு தயவாக உத்தாமணி திருகுகள்ளி, வாமே தா னிலுப்பையுட பட்டைதானும் வளமான நெல்லுமியு மிவைகளெல்லாம், போமேதான் சலம்விட்டு வேகவைத் துப் பொங்கமுடன் மூன்றுநாள் போதவாரே. (302)

வாரேதான் அந்திசந்தி வார்த்தபோது வளமில்லாச் சூலையொடு பிடிப்புதானும், வீரேதான் கால்குடைச்சல் கைகுடைச்சல் மிகுந்ததொரு மேல்கடுப்புக்குத் தீரும், பாரேதான் சருவாங்க வாதம்போகும் பண்பான படை சூலை கரணைபாதந், தீரேதான் போகருடகடாட்சத்தாலே திறமாகப்புலிப்பாணி சொன்ன தாமே. (303)

(செ-பா.) இலைக்கள்ளிச் சமூலம் கொண்டுவந்து பொடிப் பொடியாய் நருக்கிக்கொண்டு தண்ணீர் பதக்குவிட்டு எட் டொன்றாய்க் காய்ச்சி வேறோர் சட்டியி லிருத்துக்கெண்டு வெள்ளாட்டு நீர் படி 2, கூடவிட்டு வெல்லப் பாகுபோல் காய்ச்சி மேலெங்கும் பூசச்சொல்லி, ஆட்டுத்தோல் மேலாவது மான்தோல் மேலாவது படுத்திருக்கச் செய்து, மாலையில், நொச்சியிலை, முடக்கற்றான், தழுதாழை, மாவிலங்கு, குப்பை மேனி, தும்பை, பூவரசம் பட்டை, எட்டி, பாவாட்டை, வாகை எருக்கம்பூ, கடப்பம்பட்டை, காட்டெலுமிச்சையிலை, உத்தா மணி, திருகுகள்ளி இலுப்பைப்பட்டை, நெல்லுமி இவைகளை

யெல்லாம் தண்ணீரிலிட்டு வேகவைத்து 3-நாள் வார்த்தால் சூலை, பிடிப்பு, கால்குடைச்சல், கைகுடைச்சல், மேற்கடுப்பு, குத்து சர்வாங்கவாதம், படை, சூலை, கரணை இவைகளெல்லாந் தீரும்.

## 116. மாந்ததோஷத்துக்குக் குளிகை. (பா-7.)

தாமப்பா இன்னமொன்று சொல்லக்கேளு தய வான வில்வமப்பா விளாவும்வேளை, வாமப்பா நாய்வேளை கஞ்சாங் கோரை மந்தனே சின்னியொடு காட்டுமொச் சை, தேமப்பா திருநீற்றுப் பச்சைதும்பை தெளிவான சிறுதும்பை கண்டங்கத்தரி, வாமப்பா அமுக்கராசங்கு தாங்கி வளமான நுணாவேலிப் பருத்தியாமே. (304)

ஆமேதான் முடக்கற்றான் வெண்காவேளை அடை வான சாரணையு முட்டைநாரி, தாமேதான் கொழுஞ்சி வேர் புண்ணாக்குப்பூடு தயவான பிரமியொடு சித்திர மூலம் வாமேதான் கொவ்வையுட மணத்தக்காளி வகையான கையானுங் கீழ்வாய்நெல்லி, போமேதா னிந்தவகை மூலமெல்லாம் பொங்கமுடன் வகைவகைக் குக் கழஞ்சுதூக்கே. (305)

தூக்கப்பா வசம்புடனே யோமஞ்சுக்கு துன்பமில் லாச் சதகுப்பை திரிகடுகுகூட, வாக்கப்பா தேசாவர மரத்தை கோட்டம் வளமானசாதிக்காய் வெள்ளைப் பூண்டு, ஆக்கப்பா துருசுசீரகமுங்காயம் அடர்கோரோ சனை கருஞ்சீரகமப்பா, தாக்கப்பா வகைவகைக்குக் கழஞ்சியொன்று தான்தூக்கிக் கல்வத்திலரைத்திடாயே.

அரையப்பா அப்பைசார்நாய் வேளைச்சார் அடை வான அகத்திச்சா றிண்டம்பாலும், துரையப்பா சாம மதுமயனம்போலே துருசாகரண்டுபங்கு ஆக்கியப்பா,

விரையப்பா துவரைபோ லுருட்டிப்போடு விதமாக வொருபங்கில் விபரங்கேளு, இரையப்பாசுத்திசெய்த வாளந்தானும் இதமாகக் கடுகுரோகணியும்பாரே. (307)

பாரப்பா வகைவகைக்குக் கழஞ்சுதூக்கிப் பாங்காக முன்மருந்தை யிதிலேசேர்த்து, வாரப்பா அகத்திச்சார் நிலவாகைச்சார் வளமாக விட்டரைப்பாய் சாமமூன்று, வீரப்பா துவரைபோ லுருட்டிச்சேர்த்து விதமாக நிழ லுலர்த்தி யெடுத்துக்கொண்டு, நேரப்பா குழந்தைகளின் பிணிகட்கெல்லாம் நிச்சயமாய்த் தான்கொடுக்கத் தீரும் பாரே. (308)

பாரேதான் அப்பைச்சார் நாய்வேளைச்சார் பண் பான துளசிச்சார் சிறுதும்பைச்சார், வீரேதான் எரு முட்டை நாறிச்சாரும் விதமான காட்டுமொச்சை யிலைச் சாரப்பா, கூரேதான் வயிறுகட்டிப் பிணிநோய்கண்டால் கொடுப்பாயே நேர்வாளஞ் சேர்த்ததப்பா, தேரேதான் வயிறெடுத்துப் பிணிநோய்கண்டால் செலுத்துகுளிகைச் சாரெதிலுந் தீருந்தானே. (309)

தீருமே மாந்தத்தின் வகைகள்யாவுந் திறமான தோ ஷமொடு வலிப்புகாய்ச்சல், ஆறுமே அக்கினியின் மாந்த மப்பா அன்பில்லா அநேகவித நோயும்போகும், கூறுமே சிசுவருத்தந் தீர்த்தோர்க்கெல்லாங் குற்றமொன்றும் வா ராது வறுமைநீங்கும், வீறுமே போகருட கடாட்சத் தாலே விதமாக புலிப்பாணி பாடினேனே. (310)

(செ-பா.) வில்வவேர், வேளைவேர், நாய்வேளைவேர், கஞ் சாங்கோரைவேர். சின்னிவேர், காட்டுமொச்சைவேர், திரு நீற்றுப்பச்சைவேர், பெருந்தும்பைவேர், சிறுதும்பைவேர், கண் டங்கத்தரிவேர், அமுக்கனங்கிழங்குவேர், சங்கம்வேர், மலைதாங்

கிவேர், நுணவேர், உத்தாமணிவேர், முடக்கற்றன்வேர், வெள்ளைக்கொள்ளுக்காய், சாட்டரணைவேர், எருமுட்டைப் பீநாறிவேர், கொஞ்சிவேர், பிண்ணாக்குப்பூண்டுவேர், பிரமிவேர், சித்திரமூலவேர், கோவைவேர், மணத்தக்காளிவேர், கரிசலாங் கண்ணிவேர், கீழ்வாய் நெல்லிவேர், இச்சரக்குகளெல்லாம் வகை ஒன்றுக்கு ஒன்றே கால்வராகனெடையும், வசம்பு, ஓமம், சுக்கு, சதகுப்பை, மிளகு, திப்பிலி, தேசாவரம், சந்நராஷ்டம், கோஷ்டம், சாதிக்காய், வெள்ளைப்பூண்டு, மயில்துத்தம், சீரகம் பெருங்காயம், கோரோசனம், கருஞ்சீரகம் இவைகளும் வகை ஒன்றுக்கு ஒன்றேகால்வராகனெடையும் எடுத்திடித்துச்சூரணஞ் செய்து, அப்பைக் கோவைச்சாறு, நாய்வேளைச்சாறு, அகத்திக் கீரைச்சாறு, ஈரக்கொழுந்துசாறு, இவைகளில் வகை ஒன்றுக்கு ஒன்றே கால்வராகனெடையும் எடுத்திடித்துச் சூரணஞ்செய்து, அப்பைக்கோவைச்சாறு, நாய்வேலைச்சாறு, அகத்திக்கீரைச் சாறு, ஈயக்கொழுந்துசாறு, இவைகளில் வகை ஒன்றுக்கு ஒவ் வொரு சாம மரைத்து நன்றாய் மெழுகுபதமானவுடனே இரண் டாகப்பங்கிட்டு ஒருபங்கைத் துவரையளவு மாத்திரை உருட்டி வைத்துக் கொள்ளவேண்டும். மற்றொரு பங்கோடு சுத்திசெய்த வாளம், கடுகுரோகணி இவ்விரண்டும் வகை ஒன்றுக்கு ஒன்றே கால் வராகனெடை சேர்த்து அகத்தியிலைச்சாறு, நிலாவிரைச் சாறு இவற்றால் மூன்று சாமமரைத்துத் துவரைபோலுருட்டி நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு, கோவைச்சாறு, வேளைச் சாறு, துளசிச்சாறு, தும்பைச்சாறு இவைகளில் ஒன்றில் கொடுக் கலாம், வயிறுகட்டின நோயானால் வாளஞ்சேர்ந்த மாத்திரை யும், மற்றவற்றிற்குச் சேராததுங் கொடுக்கலாம் மாந்தவகைக ளெல்லாந்தீரும். தோஷம், வலிப்பு, காய்ச்சல், அக்கினிமந்தம், இவை முதலிய பல நோய்கள் தீரும்.

## 117. தாளகபற்பம். (பா-3.)

பாடினே னின்னமொன்று சொல்லக்கேளு பாங் கான அரிதாரக் கட்டியப்பா, கூடிநீ கடுக்காய்த்தோல்

நீராலாட்டிக் குணமாக மேல்கவசம் வலுக்கச்செய்து, நாடினேன் குகையிலிட்டுச் சில்லுப்போட்டு நலமாக மண் சீலை வலுக்கச்செய்து, ஆடினே னிரண்டெருவில் புடத் தைப்போடு அடைவாகப் பற்பத்தை யெடுத்துக் கொள்ளே. (311)

கொள்ளேநீ பொடிபண்ணி வைத்துக்கொண்டு குண மாகத் தேனதிலே வராகன் கால்தான், அள்ளிநீ கொடு த்தவுடன் சுரங்ககள்யாவும் அப்பனே அகன்றோடிப் போகும்பாரு, தள்ளவே யிருமலொடு பாண்டுசோகை தயவில்லா எலிக்கடியுந் தீரும்பாரு, கள்ளேநீ பித்த மொடு மயக்கந்தீருங் கனமான போகருட கடாட்சந் தானே. (312)

தானப்பா புகையோடு புளியுந்தள்ளு தயவான வேழாநாள் நீரைவாரு, வானப்பா நீலிவேர் கியாழங் கொள்ளு வளமான மற்றுநா ளெல்லாங்கூட்டு, கோனப் பா குடிலங்க ளொன்றுமில்லை குணமாகுங் கயமுதல் சுரங்கள்போகுந், தேனப்பா போகருட கடாட்சத்தாலே தெளிவாகப் புலிப்பாணி சொன்னேன்பாரே. (313)

(செ-பா.) தாளகம் ஒரு கட்டியாக எடுத்துக் கடுக்காய்த் தோலைத் தண்ணீர் விட்டு நன்றாயரைத்து மேற்படி கட்டிக்குத் கவசஞ்செய்து குகையிலிட்டுச் சில்லுபோட்டு மண்சீலை வலி வாய்ச் செய்து இரண்டெருவிற் புடத்தைப் போட்டுக் குளிர்ந்த வுடன் எடுத்துக்கொண்டு பொடிபண்ணிக் கால்வராகனெடை தேனிற் கொடுத்தால், எல்லாச் சுரங்களும், இருமல், பாண்டு சோகை, எலிகடி, பித்தம், மயக்கம் இவை தீரும். புகை, புளி தள்ளவேண்டும். ஏழாவது நாள் எண்ணெய் தேய்க்கவேண்டும் மறுநாள் நீலிவேர்க்குடி நீர்கொடுத்து மறுநாள் எல்லாஞ் சேர்க்கலாம் க்ஷயரோகமுந் தீரும்.

## 118. குன்மம், வாந்தி, ஏப்பம், வாய்நீர், ஊறலுக்குக் குடிநீர். (பா-3.)

பாரேநீ யேலமொடு நெல்லிவற்றல் பாங்காகப் பசும் பயறு மிளகுகூடச், சேரேநீ நெற்பொரியும் வில்வவேரும் சிறப்பாக வகைக்குவகை சொல்லக்கேளு, தீரேநீ இரண் டரைதான் பலமதாகத் திறமாகத் தூளாக்கி வைத்துக் கொண்டு, கூரேநீ ரண்டுபங்கு குணமாய்ச்செய்து கொற் றவனே யிளநீரும் நேராம்ரெண்டே. (314)

இரண்டான இளநீரின் சலத்திலப்பா அணுவளவு பிசகாமல் மைபோலாட்டிக், கொண்டான பாண்டத்தி லெட்டொன்றுக்கிக் கொடுப்பாயே யீராறு வேளைதன் னில், கண்டான குன்மவகை வாந்தியேப்பங் கனிவில்லா வாய்நீரும் பொருமல்தீரும், பண்டான அன்னமது செ ரிக்கும்பாரு பாங்கான வரோசகமும் வலிப்பும்போமே.

போமப்பா பத்தியந்தான் சொல்லக்கேளு பொங்க முட னுப்பிட்ட பருப்புமாகும், ஆமப்பா பசுவின்மோர் வெந்நீராகும் அடைவான தூதுவளை பொன்னுங்காணி, தாமப்பா கொடிவிளங்காய் நெல்லிக்காயுந் தயவான பசு வினெய் தேனுமாகும், வாமப்பா ஏழாநாள் சலத்தை வாரு வளமாக எட்டாநாள் புளியைச்சேரே. (316)

(செ-பா.) ஏலரிசி, நெல்லிவற்றல், பச்சைப்பயறு, மிளகு நெற்பொரி, வில்வவேர், வகை ஒன்றுக்கு இரண்டரைப் பலம் தூளாக்கி வைத்துக்கொண்டு அதை இரண்டு பங்காகச் செய்து இரண்டு இளநீர் கொண்டுவந்து ஒவ்வொரு பங்கை ஒவ்வொரு இளநீராலரைத்து எட்டொன்றுய்ச் சுண்ட வைத்துப் பன் னிரண்டு வேளை கொடுத்தால் குன்மவகைகள், வாந்தி, ஏப்பம், வாய் நீரூறல், பொருமல், அரோசகம், வலிப்புஇவை தீரும், சோறு செரிக்கும். உப்பிட்ட பருப்பு, பசுவின்மோர், வெந்நீர்,

தூதுவளை, பொன்னுங்கண்ணி, கொடிவிளாங்காய், நெல்லிக்காய், பசுநெய், தேன் இவைகளாகும். எழாவதுநாள் எண்ணெய் தேய்த்து, எட்டாவதுநாள் புளி சேர்க்கவேண்டும்.

## 119. வயிற்றிரைச்சல், பேதிக்கு, மிளகு சூரணம். (பா-1.)

சேரேநீ யின்னமொன்று சொல்லக்கேளு செயலான மிளகுபல மிரண்டுவாங்கி, நேரேநீ வேலியிட பருத்திச்சாறு நிறையவிட்டு ஊரவைத்து வுலரப்போட்டுக், கூரேநீ வறுத்துமிகப் பொடியாய்ச்செய்து கொற்றவனே வெருகடியாய்த் தேனிற்கொள்ள, வீரேநீ வயிற்றிரைச்சல் பேதிநிற்கும் விதமான பொருமலுட வாயுபோமே.

(செ பா.) மிளகு இரண்டுபலத்தில் உத்தாமணிச்சாறு நிறைய விட்டு ஊரவைத்து உலர்த்தி வறுத்துப் பொடிபண்ணி வெருகடியளவு தேனிற் சாப்பிட்டால் வயிற்றிரைச்சல், பேதி, பொருமல், வாயு இவைகள் தீரும்.

## 120. வயிற்றிரைச்சல் இரத்தக்கடுப்புக்கு. (பா-2.)

போமேநீ யின்னமொன்று சொல்லக்கேளு பொலிவாக நீர்ப்பூண்டு பலந்தான் ரண்டு, ஆமேநீ எழுத்தாணியிலையைத்தானும் அடைவாக இரண்டுபல மெடுத்துக்கொண்டு, தாமேநீ நெய்தனிலே வதக்கிமைந்தா தயவாக ஏலமது வராகனென்று, வாமேநீ சீனிபல மொன்று கூட்டி வகையாகத் தானரைத்து எடுத்துக்கொள்ளே.

கொள்ளப்பா முள்ளிக்காய் வீதமாகக்கொற்றவனே மூன்றுநா ளாறுவேளை, தெள்ளப்பா வயிற்றிரைச்சல் கடுப்புரத்தந் தெளிவில்லா மூலத்தின் சூடுந்தீரும், அள்ளப்பா பத்தியந்தா னிதற்கோவில்லை ஐயனே தயிர்பாலும் நெய்யுங்கூட்டு, விள்ளப்பா போகருட கடாட்சத்தாலே விதமாகப் புலிப்பாணி பாடினேனே. (319)

(செ-பா.) நீர்முள்ளி பலம் இரண்டு, எழுத்தாணிப்பூண்டு பலம் இரண்டு இவ்விரண்டு இலைகளையும் நெய்யில் வதக்கி, ஏலரிசி ஒருவராகனெடை, வெள்ளைச் சர்க்கரை பலம் 1, சேர்த்து அரைத்து எடுத்துக்கொண்டு கண்டங்கத்தரிக்காயளவு மூன்றுநாள் ஆறுவேளை கொடுத்தால் வயிற்றுநோய், கடுப்பு இரத்தப்போக்கு மூலச்சூடு இவைகள் தீரும். தயிர், பால், நெய் இவைகள் சேர்த்துக் கொள்ளலாம். இதற்குப் பத்தியமில்லை.

## 121. முளை மூலத்திற்குக் கட்டு. (பா-1.)

பாடினே னின்னமொன்று சொல்லக்கேளு பண்
பான கோவையுட இலையைத்தட்டி, நாடினேன் கம்பஞ்
சோ ருக்கிப்பின்னை நலமாகத் தானுருட்டி நீரைவாரு,
கூடுகிறே னெட்டுநாள் கடந்தசோறு கொற்றவனே முன்
னிலையு மெடையாய்ச்செய்து, ஆடினே னாறுநாள் கட்டும்
போது அடியோடே முளைமூல மகன்றுபோமே. (320)

(செ-பா.) கோவைச்சாற்றில் கம்புபோட்டுச் சோறாக்கி எட்டு நாள் வரைக்கும் வெவ்வேறு நீர்மாற்றிக்கொண்டுவந்து எட்டுநாள் கடக்த சோறும் அக்கோவை இலையும் ஒரு எடையாய் சேர்த்து ஆறுநாள் கட்டும்போது முளைமூலம் அடியோடு நீக்கிவிடும்.

## 122. இராமபாண குளிகை. (பா-2.)

போமேநீ யின்னமொன்று சொல்லக்கேளு பொலி
வான வெள்ளையுடன் காவிக்கல்லு, ஆமேநீ சரியெடை
யாய் நிறுத்துக்கொண்டு அப்பனே வெற்றிலையின் சாற்று
லாட்டித், தாமேநீ நாழிகையே ழரையுமானால் தயவாக
மிளகுதுபோ லுண்டைசெய்து வாமேநீ சுக்குடைய கியா
ழந்தன்னில் வளமாக மூன்றுநாள் கொடுத்திடாயே.

கொடுத்தவுடன் சுரங்களெல்லா மோடிப்போகும்
கொற்றவனே ஏழாநாள் நீரைவாரு, அடுத்தவுடன் சிறு
கீரை மிளகுநீர் அப்பனே கியாழம்வைத்துக் கொடுப்

பாய்நீயும், கடுத்தவுடனேழாநாள் புளியைக்கூட்டுக் கழி
வில்லாச் சுரவையது காணுதப்பா, கொடுத்தவுடன் சுரக்
குளிகை ராமபாணங் துளபமணி மார்பருட சரமுமாமே.

(செ-பா.) சுத்திசெய்த வெள்ளைப்பாஷாணம், காவிக்கல்
இவ்விரண்டையும் சரி எடையெடுத்து வெற்றிலைச்சாற்றால்
ஏழரைநாழிகையரைத்து மிளகளவு மாத்திரை செய்து வேளைக்
கு ஒரு மாத்திரை சுக்குக்கஷாயத்தில் மூன்றுநாள் கொடுத்தால்
எல்லாச் சுரங்களும் தீரும்: ஏழாவதுநாள் எண்ணெயிட்டுக்
கொள்ளவும், பிறகு, சிறுகீரைவேர் மிளகு, நீலிவேர், இவைகளை
காஷாயம் வைத்துக் கொடுக்கவேண்டும். ஏழாவதுநாள் புளி
கூட்டவும். வீக்கமுண்டாகாது.

## 123. கந்தக ரசாயனம். (பா-7.)

ஆமேதான் கெந்தகத்தின் ரசாயனந்தன்னை அடவா
கச்சொல்லுகிறே னன்றாய்க்கேளு, தாமேதான் திரிகடுகு
கிராம்புஏலந் தனிலவங்கப் பட்டையுடன் லவங்கப்பத்ரி
வாமேதான் ஜாதிக்காய் தாளிச பத்திரி வளமான சிறு
நாகப்பூ பூவிேனாடு, போமேதான் விலாமிச்சம் வேரினோடு
போலுஞ்சீ ரகமும்குரோ சானி யாமே. (323)

ஆமடா சிற்றரத்தை சித்திர மூலம் அடைவான திப்
பிலிதன் மூலத்தோடு, நாமேபூ லாக்கிழங்கு யானைத் திப்
பிலி நலமான கருஞ்சீரகங் கூகை நீறும், தாமேமுந் திரி
கை சந்தனந்தக்கோலங் தயவான அதிமதுரம் முத்தக்
காசும், வாமடா சடாமாஞ்சில் கொத்தமல்லி வளமான
பேரீச்சம் பழமுமாமே. (324)

ஆமேநீ திரிபாலை சாதிபத்திரி அடைவான வெட்டி
வேர் குங்குமப்பூ, தாமேநீ நிலப்பனைவே ரசுவகெந்தி தய
வான நெருஞ்சிமுள்ளு நீர்முள்ளிவித்து, வாமேநீ பூனை

யென்ற காலிவித்து வளமாக வகைவகைக்கு வராகனுது, போமேநீ நிறுத்தெடுத்துப் பொடியாய்ச்செய்து பொங்க முடன் சுத்திகெந்தி பலமும்நாலே. (325)

நாலான பரங்கிப்பட்டை பாலில்சுத்தி நாயகனே தூளுபலமிருபதாகப், பாலான சர்க்கரைதா னப்பாகேளு பாங்காகப் பலமதுதா னிருபதாகக், கோலான சீனிசர்க் கரைதானப்பா கொற்றவனே பலமதுதான் பத்ததாகும், மேலான நீர்விட்டான் கிழங்குச்சாறு விதமாகப் படி யாறு பாண்டத்திட்டுச், சேலான பசுவினெய் படிதா னென்று சிறப்பான தேன்படிதானென்றாய்க் கூட்டே. ()

கூட்டப்பா பாகதுபோல் பதத்தைப்பார்த்துக் கொற்றவனே இறக்கிவைத்துப் பொடியைப்போட்டு ஆட் டப்பா கிளறியதை யெடுத்துக்கொண்டு அப்பனே குய்க் கலசந் தன்னில்வைத்து, நாட்டப்பா நெற்புடமும் பத்து நாள் தான் நலமாகத் தான்வைத்து எடுத்துக்கொண்டு, ஊட்டப்பா கழற்சிக்காய் வீதங்கொள்ளு உத்தமனே தீருநோய் விவரங்கேளே. (327)

கேளேநீ வாதமது எண்பதுக்குங் கெடியான பித்த மது நாற்பதுக்கும், சூளேநீ கிரிச்சரங்க ளாறுக்குந்தான் சுகமில்லாக்கிரந்தி பதினெட்டுச்சூலே, நாளேநீ குன்ம மொடுபாண்டுசோகை நலமில்லாக் கயரோகம் மேகமெல் லாம், வாளேநீ அக்கினியின் மந்தந்தீரும் வளமான பரிதி கண்ட இருள்போல் போமே. (328)

போமடா பத்துநாள் கொண்டபின்பு பொலிவான பத்தியந்தான் சொல்லக்கேளு, ஆமடா பசும்பயறு துவ ரையாகும் அப்பனே தூதுவளை மணத்தக்காளி, தாமடா கத்தரிக்காய் முருங்கைப்பிஞ்சு தயவான கொத்தமல்லிக்

கீரையாகும், வாமடா புளியுப்பு பசுவினெய்யும் வளமான
மோர்தயிரும் பாலுமாமே. (329)

(செ-பா.) சுக்கு, மிளகு, திப்பிலி, லவங்கம், ஏலரிசி, லவங்
கப்பட்டை, லவங்கப்பத்திரி, சாதிக்காய், தாளிசபத்திரி, சிறு
நாகப்பூ, விலாமிச்சம்வேர், ஓமம், குரோசானி ஓமம், சீரகம்,
சந்நராஷ்டம், சித்திரமூலம், திப்பிலிமூலம், கிச்சிலிக்கிழங்கு,
யானைத்திப்பிலி, கருஞ்சீரகம், கூகைநீறு, திராக்ஷைப்பழம், சந்
தனம், தக்கோலப்பொட்டு, அதிமதுரம், கோரைக்கிழங்கு,
சடாமாஞ்சில், தனியா, பேரீச்சங்காய், கடுக்காய்த்தோல், நெல்
லிக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், சாதிபத்திரி, வெட்டி
வேர், குங்குமப்பூ, நிலப்பனங்கிழங்கு, அமுக்கனுங்கிழங்கு,
நெருஞ்சிமுள், நீர்முள்ளிவிரை, பூனைக்காலிவிரை, இவைகள்
வகைக்கு வராகனெடை நான்கு சூரணம் பண்ணிவைத்துக்
கொண்டு, சுத்திசெய்த பறங்கிச்சக்கைத்தூள், பலம் இருபது,
இவைகளையெல்லாம் கலந்து வைத்துக்கொண்டு ஒரு பாண்டத்
தில் தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு படி ஆறு, பசுவின்நெய்
படி ஒன்று, தேன் படி ஒன்று, இவைகளை ஊற்றிப்பத்து பலம்
வெள்ளைச்சர்க்கரை போட்டெரித்துப் பாகுபதமாக வரும்
போது தூளைக்கொட்டிக்கிளறியெடுத்து மண்பாண்டத்திலிட்டு
நெற்புடத்தில் பத்துநாள் வைத்துக் கழற்சிக்காயளவு சாப்பிட்
டால், வாதம் 80, பித்தம் 40, கிரிச்சரங்கள் ஆறு, கிரந்தி, பதி
னெட்டுசூலை, குன்மம், பாண்டு, சோகை, க்ஷயரோகம், எல்லா
மேகங்கள், அக்கினி மந்தம் இவைகள் தீரும். ஒருமுறை பத்து
நாள் சாப்பிடவேண்டும். பசும்பயறு, துவரை, தூதுவளை, மணத்
தக்காளி, கத்தரிப்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு, கொத்தமல்லிக்
கீரை, புளி, உப்பு, பசுநெய், மோர், தயிர், பால் இவைகளாகும்.

## 124. வலிகளுக்குச் சாதிலிங்கக்கட்டு. (பா-4.)

ஆமேதா னின்னமொன்று சொல்லக்கேளு அடை
வாக அஞ்சண்டம் வெண்கருவை வாங்கிப், போமேநீ

வீரமது பச்சைப்பூரம் பொலிவான வெடியுப்புச் சுண்ணத் தோடு வாமேநீ வகைவகைக்கு வராகனென்று வளமா கப் பொடிபண்ணி வெண்கருவில்போட்டு, ஓமேநீ மஞ்ச ளூட கருவைப்போக்கி உத்தமனே வெண்கருவை யடைத் துவையே. (330)

வையப்பா ஆறுநாள் கடந்தபின்பு வகையாக லிங்க மது வராகன்பத்து, கையப்பா வெண்கருவில் தோய்த் துத்தோய்த்துக் கனிவாக ரவிதனிலே கணக்காய்ப்பத்து, பையப்பா கரூமத்தம் தடைமேல்சுற்றிப் பாருமணற் புடந்தான் முப்பத்திரண்டுசெய்யப்பா இந்தவிதந்தோய்த் துச் சுற்றிச் செயலாக ஒன்றெருமுப் பத்திரண்டே. (331)

இரண்டான புடந்தனக்கு உபரியொன்று ரேகிப் பாய் புடம்பத்து ஏற்றிக்கொள்ளூ, கண்டான லிங்கமது உருகிக்கட்டுங் கனிவாகத் தானதையே எடுத்துக் கொண்டு, பண்டான இஞ்சிரசந்தன்னிற்கொள்ளப் பண வெடைதான் கணக்காக வுரைத்துப்போடு, தெண்டான மூன்றுநா ளாறுவேளை திண்ணமாய்த் தான்கொடுக்கத் தீரும்பாரே. (332)

பாரேநீ முசலகண்டன் குமரகண்டன் பரிவான முசல்வலியன் குதிரைக்குட்டி, சேரேநீ காக்கைவலி புற விச் சோடு சிறப்பான உள்வீச்சு சன்னிதோஷம்; கூரேநீ வாலையென்ற கிறுக்கையோடு குணமான நெஞ்சுமுதல் வாயுவுக்குத்து, வீரேநீ இவைகளெல்லாந் தீரும்பாரு வித மான இருள்கண்ட சுடர்போல் போமே. (333)

(செ-பா.) ஐந்து கோழி முட்டையிலுள்ள வெண்கருவை மாத்திரம் ஒரு பீங்கானிலூற்றி, அதில் வீரம் வராகனெடை 1, பச்சைக்கர்ப்பூரம் வராகனெடை 1, வெடியுப்புச்சுண்ணம் வராக னெடை 1, இம்மூன்றையும் பொடிபண்ணிப்போட்டு மூடி ஆறு

நாள் கடந்தபின்னர் சுத்திசெய்த இலிங்கம், 1, பலத்தை அந்தக் கருவில் தோய்ந்துத்தோய்த்து வெயிலில் உலர்த்திப் பத்து கறுப்பு ஊமத்தையிலை அந்த இலிங்கத்தின்மேல் சுற்றி மணல் மறைவில்வைத்து முதற்புடம் 1-எரு, இரண்டாம்புடம் 2-எரு, இப்படி ஏற்றி முப்பத்திரண்டுபுடம் போடவேண்டும். ஆனால் ஒவ்வொரு புடத்திற்கும் வெண்கருவில் இலிங்கத்தைத் தோய்த்து ஊமத்தையிலை சுற்றியேபுடம் போடவேண்டும். இப்படிச் செய்தால் இலிங்கம் உருக்கிக்கட்டும். இதில் ஒரு பணவெடை இஞ்சிச்சாற்றிற்கலந்து 3-நாள் 6-வேளை கொடுத்தால் முயல கண்டவலி, குமரகண்டவலி, முசல்வலி, குதிரைவலி, காக்கை வலி, புறவீச்சு, உள்வீச்சு, சந்நிதோஷம், பயித்தியம், நெஞ்சு முதலிய இடங்களிலுண்டாகும் வாயுக்குத்து, இவைகள் தீரும்.

## 125. பறங்கிப்பட்டை ரசாயனம். (பா-4.)

போமப்பா இன்னமொன்று சொல்லக்கேளு பொலிவான சங்கம்வேர் சங்கங்குப்பி, யாமப்பா கொடிவேலி வேரிநோடு அடைவான நிலப்பனைவே ரசுவகெந்தி, தாமப்பா இருகுமிழி நெருஞ்சில்வேரு தயவான பூவரசம் பட்டையாகும், வாமப்பா செங்கத்தாரிப் பட்டையோடே வகைவகைக்குத் தூள்செய்து பலந்தானென்றே. ()

ஒன்றான திரிகடுகு ஓமம்கோஷ்டம் உத்தமனே கேசரமு மரத்தையிஞ்சி, நன்றான சிறுலவங்கப் பட்டையோடு நாயகனே லவங்கமென்ற பத்திரிகூட, பன்றான வகைவகைக்கு அரைப்பலந்தான் பாங்கான பரங்கிப்பட்டை பலந்தானைந்து, கன்றான சர்க்கரைதான் பலமோபத்து கனிவான நெய்தேனும் நாழிவாரே. (335)

வார்த்தேநீ பிசைந்துநன்றாய்க் கலசந்தன்னில் வளமாகத்தா னடைத்து வைத்துக்கொண்டு, பார்த்தேநீ நல்லநாள் தன்னிற்கோள்ளப் பாங்காக முள்ளிக்காய் வீத

மாகச், சேர்த்தேநீ யந்திசந்தி நாற்பதுநாளப்பா செய லாகக் கொண்டிடவே தீரும்நோய்கள், கார்த்தேநீ பத்தி யமோ மிளகு கடுகுமாகா கனிவான வாழையிலே கரப்பன் தள்ளே. (336)

தள்ளேயிலே மேகமெல்லாம் பறக்கும்பாரு தயவில் லாச் சூலையொடுவிரணரோகம், அள்ளேயிலே கிரந்திவகை கரப்பான்ரோகம் அடைவான குஷ்டமொடு பிரமியங்கள் தெள்ளேயிலே குன்மமொடு வாயுமூச்சை தெளிவில்லா வாய்நாற்றம் மக்கினிமந்தம், விள்ளேயிலேபரங்கிப்பட்டை ரசாயனந்தான் விண்ணவர்கள் மருந்தென்னக் கொள்ள லாகும். (337)

(செ-பா.)சங்கம்வேர் பீசங்கம்வேர், சித்திரமூலவேர், நிலப் பனங்கிழங்கு, அமுக்கிருங்கிழங்கு, குமிழம்வேர், நிலக்குமிழம் வேர், நேருஞ்சில்வேர், பூவரசம்பட்டை, செங்கத்தாரிப்பட்டை வகைக்கு ஒருபலம் உலர்த்தித்தூள் செய்து, சுக்கு, முளகு, திப் பிலி, ஓமம், கோஷ்டம், சிறுநாகப்பூ, சன்னராஷ்டம், இஞ்சி, சிறுலவங்கப்பட்டை, இலவங்கஇலை, இவை வகைக்கு அரைப்ப லம், பறங்கிச்சக்கை பலம் 5, இவைகளேயும் உலர்த்தித்தூள் செய்து இரண்டு தூள்களேயும் ஒன்ருய்க்கலந்து சர்க்கரை பலம் 10, நெய் பலம் 20, தேன்பலம் 20 இம்மூன்றையும் அச்சூரணத்தி லிட்டு நன்ருய்ப் பிசைந்து கலசத்தில் வைத்துக்கொண்டு நல்ல நாள் பார்த்துக் கண்டங் கத்தரிக் காயினளவாகக் காலே மாலே இரண்டுவேளேயும் நாற்பதுநாள் தின்ருல் மேகங்களெல்லாந் தீரும், சூலே, விரணம், கிரந்திகள், வாயில்வரும் நோய்கள், குஷ் டம், பிரமியம் குன்மம், வாயு, மூர்ச்சை, வாய்நாற்றம், அக்கினி மந்தம் இவைகள்தீரும். பத்தியம் மிளகு, கடுகு, வாழையிலே, கரப்பான் பொருள் இவைகள் ஆகா.

கொள்ளவே யின்னமொன்று சொல்லக்கேளு குண மான சீரகமோ பலந்தானேந்து, தெள்ளவே வாங்கிவந்து

பீங்கான் தன்னில் தெளிவாகத் தான்போட்டுப் பழச்சார் வாரு, அள்ளவே மிதக்கவிட்டு ஊறவைத்து அடைவாக நிழல்தனிலே யுலரப்போட்டு, விள்ளவே தானெடுத்து இந்தப்பாகம் விதமாகத் தான்போட்டு விவரம்பாரே. ()

பாரேநீ கருப்பஞ்சார் முசுமுசுக்கை பாங்காக நெல்லிக்காய்ச் சாருங்கூடச், சேரேநீ தூதுவளைக் சாற்றி னோடு செயலாக வேம்பின்பட்டைச் சாறுமாகும், தீரேநீ தும்பையிலைச் சாறுவிட்டுத் திறமாக வெவ்வேறு யுலரப் போட்டுச், சீரேநீ தூளிடித்து வடிதான்கட்டிச் சீனியது கால் பங்கு கலந்துகொள்ளே. (339)

கொள்ளப்பா அந்திசந்தி நாற்பது நாள்கொள்ளக் குணமாக வெருகடிதான் வீதம்பாரு, தெள்ளப்பா பித்த மெல்லாமகன்று போகும் தெளிவில்லாக் கிறுகிறுப்பு வாந்தி தீரும், உள்ளப்பா அக்கினியா மந்தந்தீரும் ஊஷ் ணமாகக் காங்கை யெல்லா மகலும்பாரு, விள்ளப்பா போகருட கடாட்சத்தாலே. விதமாகப் புலிப்பாணி பாடி னேனே. (340)

(செ-பா.) சீரகம் பலம் 5, பீங்கானிற்போட்டு எலுமிச்சம் பழச்சாறு மிதக்கவிட்டு ஊரவைத்து நிழலிலுலர்த்தவேண்டும். இரண்டாவது கரும்புச்சாற்றிலும், மூன்ருவது முசுமுசுக்கைச் சாற்றிலும், நான்காவது நெல்லிக்காய்ச் சாற்றிலும், ஐந்தாவது தூதுவளைச் சாற்றிலும், ஆருவது வேப்பம்பட்டைச்சாற்றிலும், ஏழாவது தும்பையிலைச் சாற்றிலுமாகத் தனித்தனி இட்டுத் தனித்தனி உலர்த்தித்தூள் செய்து வடிகட்டிக் காலை, மாலை, இரண்டு வேளையும் நாற்பதுநாள் வெருகடியளவு சாப்பிட்டுக் கொண்டுவந்தால், பித்தம்,கிறுகிறுப்பு, வாந்தி, அக்கினிமந்தம், உஷ்ணகாங்கை இவைகளெல்லாந் தீரும், பத்தியஞ்சொல்ல வில்லை.

## 126. அரிதாரபற்பம். (பா-2.)

பாடினே னரிதார பற்பந்தன்னைப் பண்பாகச்சொல்லுகிறேன் பணிந்துகேளு, நாடினே னரிதாரக் கட்டி தன்னை நலமான கற்சுண்ணந் தன்னில்நீற்றித், தேடினேன் மேனியிலை கல்லுச்சுண்ணம் சேர்த்தரைப்பாய் சமன் கொண்டு மைபோலாட்டிச், சூடினேன் கட்டியின்மேல் கவசங் கட்டிச் சுகமாக மண்சீலை வலுக்கச்செய்யே. (341)

செய்யப்பா குக்குடத்தில் நீறிப்போகுஞ் செயமான பற்பத்தை யெடுத்துக்கொண்டு, வையப்பா கயங்கள்விஷ பாகம்பாண்டு வளமான கயங்களொடு பித்தரோகம், கை யப்பா எலிக்கடியும் பயித்தியந்திருங் கருவான பற்பமது அறிந்துகொள்ளு, நிய்யப்பா போகருட கடாட்சத்தாலே நிச்சயமாய் வைத்தியத்தைச் செய்துபாரே. (342)

(செ-பா.) அரிதாரத்தைக் கல்சுண்ணம்பிற் சுத்தி செய்து குப்பைமேனியிலையும், கல்சுண்ணம்பும் சமமாகச்சேர்த்து மை போலரைத்து அரிதாரத்துக்குக் கவசஞ்செய்து மண்சீலை நா ளொன்றுக்கு ஒருசீலையாக மூன்றுசீலைசெய்து உலர்த்திப் பத் தெருவிற் புடம்போட்டால் பற்பமாகும். இதில் வழக்கப்படி கொடுக்கவேண்டிய அளவு தக்க அனுபானத்திற் கொடுத்தால் க்ஷயங்கள், விஷபாண்டு, சுரங்கள், பித்தங்கள், எலிக்கடி, பயித்தியம், இவைதீரும்,

## 127. சகல நோய்களுக்கும் சூதக்குளிகை. (பா-2.)

பாரடாரசமுந் திரிபாலைகெந்தி பண்பான மிளகு ட்னே கடுகுஞ்சேர்த்து, நேரடா பொடியாக்கிப் பனையின் வெல்லம் நேர்சேர்த்துச் சுருண்டைக்காய் போலேயுண் டை, வீரடா ஒருவுண்டையுதயந்தன்னில் விழுங்கிவிட்டுக் கடிகையா நேரஞ்சென்று, சீரடா ஆவின்பால் படியுங் கால்தான் சிறப்பாகத் தான்குடிப்பாய் திண்ணந்தானே.

தானேதா னிந்தவிதம் நாற்பத்தெட்டு தயவாக நாள் கொள்ளத் தீரும்நோய்கள், மானேதான் குஷ்டமொடு குன்மஞ்சூலை மைந்தனே பெருவயிறும் பிரமைபித்தம், கோனேதான் குலைநோவு சொரிகள்மாறுங் கொடிதான பத்தியந்தா னில்லைபாரு, நானேதான் போகருட கடாட்சத்தாலே நலமாகப் புலிப்பாணி பாடினேனே. (344)

(செ-பா.)சுத்திசெய்த இரசம், கடுக்காய்த்தோல், நெல்லிக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், சுத்திசெய்த கந்தகம், மிளகு, கடுகு இவைகளை யெல்லாம் சமமாக எடுத்துச் சூரணம் பண்ணிப்பனைவெல்லஞ் சரி சேர்த்தரைத்துச் சுருண்டைக்காயளவு காலையில் மாத்திரஞ் சாப்பிட்டு ஒரு நாழிகைசென்று காற்படி பசுவின்பால் சப்பிடவேண்டும். இப்படி நாற்பத்தெட்டு நாள் சாப்பிட்டால் குஷ்டம், குன்மம், சூலை, பெருவயிறு, பிரமை, பித்தம், குறைநோய், சொரி இவைகள் தீரும். கடும்பத்தியமில்லை.

## 128. பயித்தியத்திற்குப் பற்பம். (பா-2)

பாடினேன் நாய்மண்டை மாட்டுமண்டை பாங்கான மனுஷருட மண்டையோடு, நாடியேசரியெடையாய்க்கல்வத்திட்டு நலமான கழுதைப்பால் தன்னாலாட்டி, ஆடியேமைபோலே வழித்தெடுத்து அடைவாகப் பில்லைதட்டியுலரப்போட்டுத், தேடியே குக்குடத்திற் புடத்தைப் போடு தெளிவாகப் பற்பமது தவளமாச்சே. (345)

ஆச்சப்பா கழுதைப்பால் துட்டெடைதான் ரெண்டு அடைவான இஞ்சிச்சார் துட்டெடைதான்விட்டு, வாச்சப்பா சர்க்கரை துட்டெடைதான் போட்டு வளமான பற்பமது கழஞ்சுகூட்டி, யேச்சப்பா கொடுத்துவிடு ஈராறு வேளை யெழுந்தபித்த பயித்தியமும் பிரமையேவல் போச்சப்பா தேவதைகளுக்கோவீடு புதைபில்லி வைப்புமுதல் தீருந்தானே. (346)

(செ-பா.) நாய்மண்டை ஓடு, மாட்டுமெண்டை ஓடு, மனிதர் மண்டை ஓடு, இம்மூன்றையும் சுத்திசெய்து சம எடையாய் எடுத்துக் கல்வத்திலிட்டுக் கழுதைப் பால் விட்டு நன்றாய் மைபோலரைத்து வில்லை தட்டியுலர்த்தி அகலிலிட்டுமேல் அகல் மூடிச் சீலைசெய்து பத்து எருவிற் புடம்போட்டால் பற்பமாம். இதை எடுத்து வைத்துக்கொண்டு கழுதைப்பால் துட்டெடை, இஞ்சிச்சாறு துட்டெடை, சர்க்கரை துட்டெடை, ஆக இம் மூன்றையும் கலந்து அதில் ஒன்றேகால் வராகனெடை, இந்தப் பற்பம் சேர்த்து, நூறுநாள் பன்னிரண்டுவேளை கொடுத்தால், பித்த பயித்தியம், பிரமை, ஏவல், தேவதைகள், புதையல், பில்லி வைப்பு இவைகள் யாவும் தீரும்.

## 129. பில்லி பயித்தியத்திற்குத் தயிலம். (பா-1.)

தானென்ற கழுதையுட இடபாகத்தில் தான்வளர்ந்த
சடையுடனே பாம்புச்சட்டை, மானென்ற வேப்பெண்
ணெய் செஞ்சீலைசுற்றி மைந்தனே சுடரென்றதைலம் வாங்
கிக் கோனென்ற வுள்ளுக்குக் கரண்டிவீதங் கொடுத்திடு
வாய் மூன்றுநாளாறுவேளை, தேனென்ற மேலுக்குப் பூசு
பூசு தெளிவாகும் பில்லிபயித்திய நாளாறே. (347)

(செ-பா.) கழுதையின் இடது பாகத்திலுள்ள சடைமயிர் பாம்புத்தோல் இவை இரண்டையுஞ் சிவப்புச் சீலையிற் சுற்றி வேப்பெண்ணெய்விட்டுக் கொளுத்திச் சுடர்த்தைலம் வாங்கி மூன்றுநாள் ஆறுவேளை, ஒருகரண்டிவீதம் உள்ளுக்குக்கொடுத்து மேலுக்கும் பூசினால் ஆறுநாளில் பில்லி, பயித்தியம் இவைகள் தீரும்.

## 130. சர்வ நோய்களுக்கும் சித்திரமூல எண்ணெய். (பா-2.)

ஆறுதருட்டுக்கு எண்ணெய் சொல்வேன் அயலாக
எள்ளெண்ணெய் ஆவினெய்யுங், கூறுத வகைவகைக்குப்
படிதான்பாதி கொடிதான சித்தருட மூலப்பட்டை,

நேராகப் பலமொன்று நீர்விட்டாட்டி நேராக எண்ணெ யிலே கலக்கிப்போட்டு, மீறுதமெழுகுபதந் தனிலிறக்கி மிஞ்சாமல் துட்டெடைதான் கொண்டுபாரே. (348)

பாரேநீ நாற்பதுநாள் கொண்டபோது பாங்கான சூடெங்கே மேகமெங்கே, வீரேநீ விப்புருதி கண்டமாலை விதமான புண்புரைகள் சிரங்குந்தீருந், தீரேநீ வாயுவொடு சூலைக்குத்து திரமான செங்கிரந்தி தடிப்புமாறுஞ்,சேரேநீ பத்தியந்தா னிதற்கோவில்லை செயலான போகருட கடாட்சந்தானே. (349)

(செ-பா.) எண்ணெய், பசுவின்நெய், இவ்விரண்டும் வகைக்கு படி ½, சித்திரமூல வேர்ப்பட்டை (பச்சை) பலம் 1, இதைத் தண்ணீர்விட்டு நன்றாயரைத்து எண்ணெயிற் கலக்கிக் காய்ச்சி மெழுகுபதத்தில் இறக்கி நாற்பதுநாள் வரைக்கும் காலை, மாலை இருவேளையும் துட்டெடை சாப்பிட்டுக்கொண்டு வந்தால் சூடு, மேகம், விப்புருதி, கண்டமாலை, புண், புரைகள், சிரங்கு, சூலைக்குத்து, வாயு, செங்கிரந்தி, தடிப்பு இவைகள் தீரும் பத்தியமில்லை.

## 131. ஆக்கிராணம். (பா-5)

தானான ஆக்கிராணஞ் சொல்வேன்கேளு தயவான சுருண்டைவேர் சித்திரமூலம், வானான அழிஞ்சில்வேர் கண்டக்கத்திரி வளமான தூதுவளை முளகரணைவேளை, மானான ஆடுதொடா குப்பைமேனி வளமான வெள்ளைச் சாரணையும்வேலி, பானான வகைவகைக்கு வராகனென்று பண்பான எருக்கிலையின் சுணையும்பாரே. (350)

பாரேநீ சமுத்திரப் பழமுஞ்சுக்கு பாங்கான அக்க ராகாரம் ஓமஞ், சேரேநீ அதிவிடயம் அரத்தை காயஞ் செயலான திப்பிலியுந் திப்பிலிமூலம், வீரேநீ தேசாவரங்

கஸ்தூரிமஞ்சள் வீருன வால்மிளகு கடல்நுரையுங்கடுகு, தீரேநீ குராசானியோமம் ரோணி திறமான கருஞ்சீரகம் பேரரத்தைகாணே. (351)

காணேநீ வசம்புவேப் பரிசியோடு களிவான சாம்பி ராணி வகைவகைக்குத்,தானேநீ வராகனெடை நிறுத்துக் கொண்டு தயவாகச் சரக்கெல்லா மொன்ருய்க்கூட்டிப், பாணேநீ அத்தியின்பால் வெள்ளாட்டுநீரும் பாங்காகப் பிசரிவைத் துலர்த்திக்கொண்டு, மானேநீ பொடித்துப் பேய்ச் சுரைக்குடுக்கை மைந்தனே துளடைத்து வைத் துக் கொள்ளே. (352)

கொள்ளவே பணவெடைதா ஞசிக்கேற்றக் கொற்ற வனே சன்னியது விலகும்பாரு, அள்ளவே காகிதத்தில் வைத்துச்சுற்றி அடைவாக நிம்பஎண்ணெய்தனில் துவைத்து, மெள்ளவே கொளுத்தியதை யாற்றிப் போட்டு மேன்மையாய்ப் புகைதனியே நாசிக்கேற்றுத், தள்ளவே சிரசிலுள்ள வியாதிதீருந் தலைவலியு மொரு தலையி னிடிப்பும்போமே. (353)

போமேநீ நீர்ப்பாய்ச்சல் கயமும்பித்தம் பொல்லாத கபாலத்தின் சூலைவாயு, ஆமேநீ பீநசமுஞ் சகலதோஷம் அடைவான மண்டைக்குத்து கர்ப்பநோயும், தாமேநீ சிரசிலுள்ள வியாதியெல்லாந் தாக்கடா இப்புகையைச் சண்ணுஞ் சண்ணும், வாமேநீ யின்னமொரு சூட்சஞ் சொல்வேன் மாருதரணங்களுக்கு வழுத்துறேனே. (354)

**(செ-பா.) சுண்டைவேர், சித்திரமூலவேர், அழிஞ்சில்வேர் கண்டங்கத்திரிவேர், ஆதுவளைவேர், மிளகரணைவேர், வேலை வேர், ஆடாதோடைவேர், குப்பைமேனிவேர், வெள்ளைச் சாரணைவேர், இவைகள் வகைக்கு வராகனெடை 1, எருக்**

இலையின் சுணை, சமுத்திராப்பழம், சுக்கு, அக்கராகாரம், ஓமம், அதிவிடயம், சங்கராஷ்டம், பெருங்காயம், திப்பிலி, திப்பிலி மூலம், தேசாவரம், கஸ்தூரிமஞ்சள், வால்மிளகு, கடல்நுரை கடுகு, குரோசானி ஓமம், கடுகுரோகணி, கருஞ்சீரகம், தும்ம ராஷ்டம், வசம்பு, வெட்பாலையரிசி, சாம்பிராணி இவைகள் வகை ஒன்றுக்கு வராகனெடை 1, இவைகளையெல்லாம் ஒன்றாய் சேர்த்து அத்திப்பால் வெள்ளாட்டு நீர் இவைகள் விட்டுப் பிசரி நன்றாயுலர்த்திப் பொடிபண்ணிப் பேய்ச்சுரைக் குடுக்கையில் அடைத்து வைத்துக்கொண்டு ஒரு பணவெடை தூள் எடுத்து மூக்கிற் போட்டால் சந்நிதீரும். இந்தத் தூளிற் கொஞ்ச மெடுத்துக் காகிதத்தில் வைத்துச் சுற்றி வேப்பெண்ணெயில் நனைத்துக் கொளுத்தித் தீயாற்றிப் புகையைப் பிடித்தால் சிர சிலுள்ள வியாதிகளான தலைவலி, ஒரு தலைவலி, மண்டையிடி, நீர்ப்பாய்ச்சல், க்ஷயம், பித்தம், கபாலசூலை, கபாலவாயு, பீநசம் சகல தோஷம், இவைகள் தீரும். கர்ப்பநோய் தீரும்.

## 132. கண்டத்தின்மேலுள்ள நோய்களுக்குப் பொடி (பா-1)

வழுத்துகிறேன் கண்டத்தின் மேலேயுள்ள வாய்
முதல் கண்செவியின் நோயுந்தீரும், பழுத்துகிறேன் பற்
கிட்டு சன்னிதோஷம் பாங்கான முனிகறுப் பெதுவானு
லுங், கொழுத்துகிறேன் பணவெடை ஆக்கிராணத்தோ
டே குணமான நவாச்சார நேரேசேர்த்துச், சுழுத்து
கிறேன் கற்சுண்ணங் கொஞ்சங்கூட்டிச் சுருக்காகமத்
தித்து நாசிக்கேற்றே. (355)

(செ-பா.) முன் சொன்ன ஆக்கிராணப்பொடி பணவெடை கொண்டு அதற்குச்சரி நவாச்சாரஞ்சேர்த்துக் கற்சுண்ணம் கொஞ்சம் அதனுடன் சேர்த்து நன்றாய் மத்தித்து மூக்குக்குப் போடவேண்டும். அப்படிப் போட்டால் கண்டத்தின்மேலுள்ள வாயு, கண்நோய், காதுநோய், பல்லைக்கிட்டிக்கொள்கின்ற சந் நிதோஷம் முனி, கறுப்பன் எவையானுலுந் தீரும்.

## 133. விரணங்களுக்குப் புகை. (பா-2.)

ஏற்றேநீ ஆக்கிராணங் கழஞ்சியொன்று இதமான அரிதாரம் லிங்கம்பூரம், பார்த்தேநீ கொடிகள்ளிப் பட்டைத்தூளும் பாங்கான கழுதைலத்திப் பொடியுமப்பா, போற்றேநீ வகைவகைக்குக் கழஞ்சியொன்று பொங்கமுடன் திருகுகள்ளிப் பாலாலாட்டிச், சேர்த்தேநீ யுலரவைத்து எடுத்துக்கொண்டு செயமான புன்குபுளிதணலிற் கேளே. (356)

கேளேதான் தணலிலே பொடியேபோட்டுக் கெடியான புண்களிலே புகைதான்சாரச், சூளேதான்வெடிசூலே மேகவெட்டை சுடுகிரந்தி யரையாப்பு பௌத்திரங்கள், கோளேதான் இப்புகையில் தீரும்பாரு கொற்றவனே பொடியெடுத்து அலரிப்பாலில், நாளேதான் மத்தித்து ரணத்தில்போட நாயகனே ரணங்களெல்லாந் தீருந்தானே. (357)

(செ-பா.) முன்சொன்ன ஆக்கிராணம், அரிதாரம், இலிங்கம், பூரம், கொடிக்கள்ளிப் பட்டைத் தூள், கழுதை லத்திப் பொடி இவைகள் வகைக்கு ஒன்றேகால் வராகனெடை எடுத்து எல்லாவற்றையுந் திருகுகள்ளிப் பாலாலரைத்து உலரவைத்து எடுத்துக்கொண்டு, புன்கமரம், புளியமரம் இவைகளைச் சேர்த்து நெருப்புண்டாக்கி அந்த நெருப்பில் பொடியைக் கொஞ்சம் போட்டுப் புண்களில் புகையானது படும்படி பிடித்தால் வெடிசூலே, மேகவெட்டை, சுடுகிரந்தி, அரையாப்பு, பௌத்திரங்கள் தீரும். இப்பொடியில் கொஞ்சம் எடுத்து அலரிப்பாலிலிழைத்து விரணத்தில் தடவினாலும் விரணங்களெல்லாந் தீரும்.

## 134. சூட்டுக்குத் தாமரைத் தைலம். (பா-2.)

தானான எள்ளெண்ணெய் படிதானென்று தகமைகுளிர் தாமரைசார் படிதானென்று, பானான பதந்

தனிலே காய்ச்சியப்பா பக்குவமாய்க் கீழிறக்கித் தானே வைத்து, மானான பூலாக்கிழங்கு பச்சிலையுமப்பா வகை வகைக்கு விராகனைந்து நிறுத்துக்கொண்டு, தேனைகப் பொடிபண்ணித் தூவிப்போடு தெளிவாக வடித்திருத்து முழுகுவாயே. (358)

முழுகையிலே சூடெல்லாந் தணிந்துபோகு முன்னிலையாக் கண்ணெரிவு குளிர்ச்சியாகும், பழுகாது தேகமது பொன்போல்மின்னும் பண்பான நீர்க்கடுப்பு வினையுந் தீரும், அழுகாது விந்துவங்கே யிறுகும்பாரு அடைவாக மூலத்திற் சூடும்போகும், நழுகாது சூலையுடகரணை வாங்கு நலமான போகருட கடாட்சந்தானே. (359)

(செ-பா.) எண்ணெய் படி 1, தாமரைச்சாறு படி 1, இரண்டையும் சேர்த்துப் பதமாகக் காய்ச்சிக் கீழே இறக்கிக் கிச்சிலிக்கிழங்கு, பச்சிலை வகைக்குப்பலம் அரைநிறுத்துப் பொடிபண்ணி அவ்வெண்ணெயில் தூவிக் கொஞ்சம்பொறுத்து வடிகட்டி முழுகிக்கொண்டுவந்தால் சூடெல்லாந் தணிந்து போகும். கண்ணெரிச்சல் குளிர்ச்சியாகும் தேகம் பொன்னைப் போலப் பளபளப்பாகும் நீர்க்கடுப்பு தீரும் விந்து கெட்டியாகும் மூலச்சூடுபோம், சூலையுங் குணப்படும்.

## 135. வயித்திய முப்பூ. (பா-11.)

தானான வைத்தியமுப்பூமார்க்கம் தயவாகச் சொல்லுகிறேன் தருமமாகக், கோனான பங்குனி சித்திரையில் பூநீறு கொற்றவனே மண்படாதெடுத்துவந்து, மானான நாலுபடி பாண்டத்திட்டு மைந்தனே கடலுப்பு படிதான் ரண்டு, வானான கற்சுண்ணம் படிதான்ரண்டு வளமான அமுரியது படிதானெட்டே. (360)

எட்டதுதான் வார்த்தபின்பு எள்ளெண்ணெயப்பா இதமாகப் படியரைதா னளந்துவாரு, தொட்டதுதான்

கலக்கியதைத் தெளிவிறுத்துத் தோணவே யுப்பாகுமட் டுங் காய்ச்சி, விட்டதுதானமுரிபடி யெட்டேவிட்டு வித மாக இவ்விதமாய்ப் பத்துமுறைகாய்ச்சு, பட்டதுதான் குழம்பதுபோலாகும்பாரு பாங்கான எருச்சாம்பல் சொல்லக்கேளே. (361)

கேளேதான் எருச்சாம்பல் பரப்பிமைந்தா கெணித முடன் சல்லாவை விரித்துப்போட்டு, நாளேதான் இதில் வாரு இறுகும்போது நலமாக உண்டையா யுருட்டிப் போடு, சூளேதான் ரவியில்வைத்து எடுத்துக்கொண்டு சுகமாக நெற்பிசரி ஒரு பாண்டத்தில், வாளேதா னரைப் பாண்ட மதனில்விட்டு வளமாக அதின்மேல் மல்லிகையி னிலையே. (362)

மல்லிகையி னிலைபரப்பி யிந்தவண்ணம் மைந்தனே மேல்வைத்து இலையால்மூடி, அல்லியே யதின்மேலே நெல் லிட்டப்பா அடைவாகச்சட்டி மூடிபெரியவைநீ வல்லியே நெல்லுவெந்தபின் னெடுத்துவைத்து வளமாகச் சிப்பிறு றிறைச்சியொக்கக், கல்லிலே துவாரமிட்டுச் சொல்லக் கேளு கருத்தாகவீரம் பச்சைப்பூரந்தானே. (363)

தானனபூரமுடன் பூநீறப்பா தயவாகவகைவகைக்கு விராகன்மூன்று, கோனை இவைநாலும் பொடியாய்ச் செய்து கொற்றவனே சிப்பியிட துவாரந்தன்னில், மா னை சிப்பிதொறுங் கொஞ்சம்போடு மைந்தனே சட்டி யின்மேல் பரப்பிவைத்துப், பானைசெயநீரும் இறங்கும் பாரு பாங்காக இதையெடுத்துப் பதனம்பண்ணே. (364)

பண்ணப்பா நாதவிந்து ரண்டுதானும் பண்பான இள நீரும் சமனுய்ச்சேர்த்து, நண்ணப்பா பாடுவண்டு உரமுஞ் சூதம் நலமாகக்கருநாபி பச்சைப்பூரம், உண்ணப்பா ஆறு

புள்ளி வண்டின் முட்டை உத்தமனே சீனமுடன் சார மப்பா, வண்ணப்பா வகைவ்கைக்குப் பணவெடைதான் வீதம் வகையாகப் பொடிபண்ணி இளநீரிற்போடே. ()

போடேதான் தெளிவிறுத்து உண்டைபண்ணிப் பொங்கமுடன் இளநீரால் சாமமாட்டி, யாடேதான்வில்லை தட்டிரவியில்போட்டு அடைவாகக் காய்ந்தபின்பு சொல் லக்கேளு, நாடேதான் பேரண்டம் பொடியதாக்கி நல மான ஓட்டின்மேல் பரப்பிவைத்து, கூடேதான் அதன் மேலே வில்லைவைத்துக் குணமாக அதன்மேலே பொடி யைப்போடே. (366)

போடப்பா மேல்மூடிச் சீலைசெய்து புனிதமுடன் பத்தெருவில் புடத்தைப்போடு, காட்டப்பா இம்முறையா யைந்துபோடு கசடறவே சுண்ணமா யிருக்கும்பாரு, பாரப்பா பேரண்டஞ் சிற்றண்டத்தோடு பாங்கான சிப் பியு நண்டோடுநத்தை, மாடப்பா விவையெல்லாம் வெவ் வேறாக மைந்தனே சிற்றண்டக் கருவாலாட்டே. (367)

ஆட்டியே உலரவைத்து உலையிலூத அப்பனே அஞ் சுந் தான் சுண்ணமாகும், நாட்டியே அஞ்சுசுண்ணஞ் சம னாய்க்கூட்டி நலமாக முன்விட்ட செயநீர்விட்டு, கூட்டியே தானரைத்துக் குகைபிடித்துக் குணமாகச் சில்லுசெய்து முன் சுண்ணத்தை,வாட்டியே செய்நீரால் மைபோலாட்டி வளமாகத் தான்ரவியி லுலரப்போடே. (368)

போடேநீ அஞ்சுசுண்ணக் குகையில் வைத்துப் போதகமாயஞ்சு சுண்ணம் சில்லுப்போட்டு, ஆடேநீ சுண் ணம்புச் சீலைசெய்து அடைவாகப் புடம்போட்டு எடுத் துக்கொண்டு, நாடேநீ அஞ்சுதர மிந்தப்பாக நலமாகப் புடம்போட்டு எடுத்துக்கொண்டு, மாடேநீ நாதாக்கள் சாபந்தீர மைந்தனேயாத்தாளைப் பூசைபண்ணே. (369)

பண்ணவே சுண்ணத்தால் சுண்ணமாகும் பாங்கான செந்தூரம் மெழுகுமாகும், நண்ணவேகட்டினமு முருக்கினமுமாகும் நலமான சரக்கெல்லாம் பஸ்பமாகும், உண்ணவே லேகியங்கள் கிருதமெண்ணெய் உத்தமனே யவிழ்தமென்றவகைகட்கெல்லாம், எண்ணவே பணவெடைதான் கூட்டவேண்டு மில்லாவிட்டா லவிழ்தமது வீறில்லாதே.

(செ-பா.) பங்குனி மாசத்திலாவது, சித்திரை மாசத்திலாவது பூத்தபூநீறு 4-படி மண்படாதெடுத்து வந்து ஒரு பாண்டத்திற் போட்டு, கடலுப்பு படி-2, கற்சுண்ணம் படி-2 இவற்றையும் சேர்த்து எட்டுப்படி அமுரிவிட்டு நல்லெண்ணெய் படி-½ விட்டு வைத்து, நன்றாய்த் தெளிந்தபின் தெளிவு நீரையெல்லாமிறுத்து உப்பாகும் வரைக்கும் காய்ச்சவேணடும். மறுபடி முற்படியே அமுரிவிட்டு, விட்டுப் பத்துமுறை காய்ச்சவேண்டும். பத்தாவது முறை காய்ச்சும்போது அவ்வுப்பு குழம்பாக ஆகுஞ் சமயத்தில், எருச்சாம்பல் பரப்பி, அதின்மேல் மெல்லிய துணியைவிரித்துப்போட்டு அந்தத்துணியின்மேல் அக்குழம்பையூற்றி அது இறுகும்போது உருண்டையாய் உருட்டி வெயிலில்வைத்து உலர்ந்தபின் ஒரு பாண்டத்தில் தண்ணீரில் ஊரவைத்த நெல் பாதி பாண்டம் வரைக்கும்போட்டு, அதன்மேல் மல்லிகையின் இலைகள்பரப்பி, அதன்மேல் இந்த உருண்டையைவைத்து அதை மல்லிகை இலையாமூடி, மேலேநெல்லிட்டுச் சட்டிமூடி அடுப்பேற்றி நெல்வெந்தபின் எடுத்து வைத்துக்கொண்டு, நூறு மூடு கிளிஞ்சிற் கொண்டுவந்து அந்த நூறு சிப்பியையும் சிறுகத்தட்டினல் கொஞ்சம் வாய்விரியும், அந்த வழியாக வீரம், பச்சைக் கர்ப்பூரம், பூரம், பூநீறு இவைகள் வகைக்கு மூன்றுவராகனெடை எடுத்துப் பொடிசெய்து அந்தச்சிப்பிகளின் வழியில் ஒவ்வொன்றிற்குங் கொஞ்சங்கொஞ்சம் போட்டு அவைகளைஒரு அகன்ற பீங்கான் தட்டிலாவது, கண்ணுடித் தட்டிலாவது, பரப்பிவைத்தால் செய்நீர் இறங்கும், அந்தநீரை வேறொரு கண்ணுடி குப்பியில் வைத்துக்கொண்டு, பூநீற்று நிலத்தண்ணீர், பூநீறு

இளநீர் இந்த மூன்றையுஞ் சமனுகச்சேர்த்து அதில், பாடுவண்டு, உரம், இரசம், கருநாபி, பச்சைக்கர்ப்பூரம், ஆறுபுள்ளி வண்டினுடைய முட்டை, படிகாரம், நவாச்சாரம், இவைகள் வகை ஒன்றுக்குப் பணவெடை எடுத்துப் பொடிபண்ணி மூன் கலந்த இளநீரிற்போட்டு அதன் தெளிவையிருத்து முன்சொன்ன உண்டைக்கு விட்டரைத்துப் பில்லைதட்டி வெயிலில்வைத்து அதன்மேல் அப்பேரண்டப்பொடியைப்போட்டு மேலோடு மூடிச் சீலைமண் செய்துலர்த்திப் பத்து எருவில் புடம்போடவேண்டும். இப்படி ஐந்துபுடம்போட்டால் மலினமற்ற சுண்ணமாகும். அதை வைத்துக்கொண்டு பேரண்ட ஓடு, சுற்றண்டஓடு, மூடுகிளிஞ்சில் ஓடு, நண்டு ஓடு, நத்தை ஓடு இவ்வைந்தும் தனித்தனி சிற்றண்ட வெண்கருவாலரைத்து மூசையிலிட்டு உலையில் வைத்து ஊதினுல் அவை தனித்தனி சுண்ணும்பாகும் இவ்வைந்து சுண்ணங்களையும் தனித்தனியாகச் சமஎடை எடுத்து முன் செய்துவைத்திருக்கும் செய்நீர்விட்டரைத்து ரவியிலுலர்த்தி மேற்படி அஞ்சு சுண்ணக்குகையில் வைத்து மேல்மூடிக் கற்சுண்ணும்புச்சீலை செய்து புடம்போட்டு எடுத்துக் கொள்ளவும். இப்படி ஐந்து முறை புடம்போட்டு எடுத்துக் கொள்ளவேண்டும். இப்படி செய்து வைத்துக்கொண்டு பெரியோர்களிட்ட சாபந்தீர்வதற்கு அவர்களுடைய திருவடிகளையும், தேவியின் திருவடிகளையும் தியானஞ்செய்து வைத்துக்கொண்டால் இந்தச் சுண்ணத்தால் வேறு சுண்ணங்கள் முடிக்கலாம். செந்தூரம், மெழுகு, கட்டினங்கள், உருக்கினங்கள், பஸ்மங்கள் இவைகளெல்லாம் முடிக்கலாகும். அன்றி, லேகியம், கிருதம், எண்ணெய் முதலிய மருந்துகளுக்கெல்லாம் ஒவ்வொரு பணவெடை சேர்க்கலாம். அப்படி சேர்த்தால் ஒவ்வொன்றும் பலமடையும், சேர்க்காவிட்டால் பலமடையாது.

## 136. கர்மசாந்தி. (பா-3.)

இல்லாத நோய்கள்தான் கடத்தில்மேவும் ஏதென்றால் பஞ்சபாதகத்தால் காணும், பொல்லாத கர்மவினை தீரவேண்டிப் பூட்டுகிறேன் சாந்தியொன்று சொல்லக்

கேளு,வல்லானஓடுநீர்கலசந்தன்னில் வளமாகக்கொண்டு வந்து தர்ப்பைபோட்டு, சொல்லானகலசத்தை மேலே வைத்துச் சொகுசான அக்குமணி சேர்த்துக்கட்டே. ()

கட்டப்பாமாவிலையை மேலேவைத்துக் கனமான மஞ்சளைத்தான் அறைத்துஅப்பி, பட்டானமுக்கோணங் கலசத்துள்ளே பாங்காகத்தானிட்டுச் சிகரம்நாட்டி, மட்டான நோயாளி தன்னைத்தானு மன்னவனே முன்னை வைப்பாய் மதியந்தன்னில், வட்டப்பா தூபமொடு தீபங் காட்டி வளமான வில்வமது நூற்றெட்டாமே. (372)

ஆமப்பா ஓமென்று அர்ச்சனையுஞ்செய்து அடைவாகக் கலசநீர் சிரசில்வார்த்துத், தாமப்பா ஒருசிரங்கையுள்ளுக்கீந்து தயவாகவில்வமதுமூன்றுநாள்கொண்டால், ஓமப்பா கருக்கன்முதல் சனிநாள்மட்டு கொடுக்கமாயிப் படியே செய்தாயானல், போமப்பா பஞ்சபாதகங்களி யாவும் பொல்லாத பிரமைபிணி யேவல்போமே. (373)

(செ-பா.) ஆற்றுநீரை ஒரு மட்கலசத்தில் முகந்துகொண்டு வந்து தரையைமெழுகி மொக்கிட்டு, அதன்மேல் தர்ப்பையிட்டு, அதன்மேல் மேற்படி கலசத்தைவைத்து அக்கலசக் கழுத்தில் பலகரைகோத்துக்கட்டி, மஞ்சளரைத்து அதற்குப்பூசி மேலே மாவிலைசொருகிக் கலசத்துக்குள் முக்கோணம் போட்டுச் சிகாரம் போட்டுவைத்து நோயாளியை அதற்கு எதிரில் உட்காரச் செய்து சாம்பிராணிப்புகைகாட்டிக் கர்ப்பூரம் கொளுத்தி ஓம் என்று நூற்றெட்டு வில்வத்தால் அர்ச்சனைசெய்து கலசத்தி லுள்ள நீரைச் சிரசில் ஊற்றி உள்ளுக்கொரு சிரங்கைநீர் கொடுத்து வில்வபத்திரி 3 கொடுக்கவேண்டும். இப்படி ஞாயிற்றுக்கிழமையிலிருந்து மறு சனிக்கிழமை வரைக்குஞ் செய்ய வேண்டும், இப்படிச் செய்தால் பஞ்சபாதகங்கள், பிரமை, பிணி, ஏவல் இவைகள் தீரும்.

137. நோய்க்கும், பேய்க்கும், ஓமசாந்தி. (பா-7.)

போமேதான் ஓமத்தின் சாந்திகேளு பொங்கமுடனைந்துபடி யரிசிகொட்டி, ஆமேதான் பச்சரிசிமேலே கேளு அறிவான திரிகோணம் விந்துபோட்டு, தானேதான் ரீங்காரமுன்னேபோட்டுத் தயவாகக் கும்பமைந்தில் தனிநூல்சுற்றி,வாமேதான் சலமதுதா னிறையவிட்டு வளமான சொர்னமொன்று கூடப்போடே. (374)

போடப்பா இருபத்தைந்தறையுமாறிப் பொங்கமுடன் மாவிலையுந் தேங்காய்வைத்து, ஆடப்பா சந்தனத்தைக் கறைத்துச் சாத்தி அட்சதையுஞ் சுகந்த பரிமளங்கள் பூசி, நாட்டப்பா பட்டுவஸ்திரங்கள்சாத்தி நலமான புட்பமர்ச் சனையேசெய்து, ஈட்டப்பா பழந்தேங்காய் தாம்பூலங்கள் இதமான பலகாரமிள நீர்பாலே. (375)

பாலுடனே பானக்கம் வஸ்துவோடு பரமான்னம் அவலுடனே சுத்தியண்டம், ஏலுடனே பொரிகடலை சர்க்கரை மாவிளக்கு இதமான வெண்ணெய்பொங்கல் பசும்பருப்பு, சேலுடனே யித்தனையுமிலைதான்போட்டுச் செப்பமுடன் பறிமாறித் தூபம்போட்டு, மாலுடனே யோமகுண்டஞ் சமிதைகேளு மைந்தனே மாவிலிங்கம் விளாத்தியாமே. (376)

ஆமேநீ வில்வமொடு எட்டிநொச்சி அடைவான மாவோடுஓமம்நெய்யாம், தாமேநீரம் அக்கினிநமாவென்றேதான் தயவாகச் சமித்துக்காயிரத் தெட்டோதி, போமேநீ யெள்ளுழுந்து கடலை மொச்சை பொலிவான துவரைபசும்பயற்றி னோடு,வாமேநீ காராமணியும் அரிசி கோதுமைவளமாக ஒன்பதையும் ஓமம்பண்ணே. (377)

பண்ணப்பா தேன்பாலுவஸ்துசுத்தி பாங்கான பழந்தேங்காய் பலகாரங்கள், நண்ணப்பா இளநீர் சர்க்

கரைபானக்கம் நலமான தயிர்சோறு நெற்பொறியுங்கூட, வண்ணப்பா அக்கினிக்காகுதியேபண்ண வஞ்சனையு முறைப்பாடுந் தேவக்குற்றம், ஒண்ணப்பா அசுத்த கண மும்பூதம் உத்தமனே பஞ்சபாதகமும்போமே. (378)

போமடா பில்லிவஞ்சனையும் ஏவல் பிரமையோடு வியாதிமுதல் பசாசுபேயும், ஆமடா முனிகறுப்புலாடன் காட்டேரி அடைவான பேய்ச்சிகந்திருவர்மூர்த்தி, தாமடா சாத்தனோடு இருவனையன் தயவில்லாச்சப்பாணி யிரு தலையின்கொள்ளி, ஓமடா இன்னம்வெகு பிசாசானாலும் ஓமத்தில் ஓடிவிடுங் கண்டுபாரே. (379)

கண்டுநீ கும்பமைந்துந் தூபதீபங் கனிவாகத்தான் கொடுத்துச் சோடசமுஞ்செய்து, பண்டுமுன்னே நோயாளி தனக்குமப்பா பாங்காகக் கலசநீர் சிரசில்வார்த்துக், கொண்டுவல்லோ அவிழ்தங்கள் கொடுக்கச்செய்நீ குற்றமெல்லாந் தான்தீர்ந்து வியாதிபோகும், தொண்டு செய்வா ரனைவோருஞ் சமர்த்தனென்று தொல்லுலகில் செல்வமதாய் வாழ்வார்தானே. (380)

(செ-பா.) பூமியைச் சுத்திசெய்து மெழுகி மொக்கிட்டு அதன்மேல் பச்சரிசி ஐந்துபடி கொட்டி, அதன்மேல், முக்கோணமும் விந்துவும் போட்டு அதற்குள் ரீங்காரம்போட்டு 5 கும்பங்களில் தனித்தனி நூல்சுற்றி அவற்றில் ஒவ்வொன்றிலும் சுத்த ஜலம் நிறையவிட்டு ஒரு பொன்துண்டு அதில் போட்டு ஒவ்வொன்றிற்கும் மாவிலை தேங்காய்வைத்து சந்தனந்தெளித்து சுகந்தபரிமளவஸ்துகள் தெளித்து அவைகளை இருபத்தைந்தறை கீறி அதின்மேல் வைத்து, பட்டுவஸ்திரங்கள் சுற்றிப் பூவினால் அர்ச்சனைசெய்து, பழம், தேங்காய், தாம்பூலம், நல்ல பலகாரம், இளநீர், பால், பானகம், வஸ்து, (சாறுயம்) அன்னம், அவல் மாமிசம், கோழிமுட்டை, பொரி, கடலை, சர்க்கரை, மாவிளக்கு, வெண்ணெய், பொங்கல், பச்சைப் பருப்பு, இவைகளை யெல்லாம்

வாழையிலை பரப்பி அதில்வைத்து சாம்பிராணிப்புகை காட்டி மாவிலிங்கச்சுள்ளி, ஊழலாற்றிச்சுள்ளி, வில்வச்சுள்ளி, எட்டிச் சுள்ளி, நொச்சிச்சுள்ளி, மாஞ்சுள்ளி இவைகளால் நெய்விட்டு ஓம், ரம், அக்கினிநமஃ என்று ஒவ்வொரு சமித்துக்கும் ஆயிரத் தெட்டுமுறை சொல்லி ஓமம் செய்து கடைசியாக எள், உளுந்து, கடலை, மொச்சை, துவரை, பசும்பயறு, காராமணி, அரிசி, கோதுமை, இவ்வொன்பதாலும் ஓமம் பண்ணி, தேன், பால், மது, பழம், தேங்காய், பலகாரங்கள், இளநீர், சர்க்கரை, பான கம், தயிர்ச்சோறு, நெற்பொரி இவைகளையும் அக்கினிக்கு ஆகு திசெய்து முடித்தால், வஞ்சனை, பொறாமை, தெய்வக்குற்றம், அசுத்தகணம், சுத்தகணம், பூதம், பஞ்சபாதகம், பில்லி, ஏவல், பிரமை, வியாதி, பசாசு, முனி, கறுப்பன், லாடன், காட்டேரி, பேய்ச்சி, சாத்தான், இருளன், ஐயன், சப்பாணி, இருதலைக் கொள்ளி, இவைகளும் இவைபோன்ற எப்படிப்பட்ட பிசாசு களா யிருந்தாலும் இவ்வோமத்தால் ஓடிப்போய்விடும். பிறகு 5-கும்பத்துக்கும் தூபதீபங்கள்காட்டிச் சோடசோப சாரஞ் செய்து எடுத்து நோயாளி தலையில் அதிலுள்ள நீரை வார்த்து உள்ளுக்குங் கொள்ளச்செய்தபிறகு மருந்து சாப்பிடச்செய்தால் சர்வ நோய்களுந் தீர்ந்து போய்விடும்.

## 138. கழிப்பு செய்யும் விதம். (பா-9.)

தானென்ற கழிப்புக்குச் சொல்லக்கேளு தயவாகப் பச்சைமாப் பாவைசெய்து, வானென்ற புதுமுறத்துக் குள்ளேவைத்து வளமாக ஆபரணந் தன்னைப்போட்டு, கோனென்ற முப்பத்திரண்டு தீபங்குறையாமல் நவரத்தி னம்சொர்னம்வைத்து, வானென்ற வஸ்திரங்கள் பரி மளங்கள் சாத்திமைந்தனே சுகந்தபுட்பம்வாடைதூவே.

தூவடா ரத்தசாமுண்டி சக்கரந்துலங்கவே பாவை முன்னே எண்கோணம்போட்டு, மாவடாதானெடுத்து ரேகைபோட்டு மைந்தனே எட்டறையில் கரியேதூவ,

நாவடாநாலறையினுட் கோணத்தில் நலமான திருச் சூரணந் தன்னைத்தூவு, வாமடா உட்சதுரமஞ்சள்தூவு வளமான முக்கோணம் பச்சையாமே. (382)

ஆமேதான் முக்கோணம் ஸ்ரீங்காரம்போட்டு அடைவான நாலறையில் அம் ஓம் தும் தும்மென்று, தாமேதான் நாலறையில் ஒங்காரம் கட்டித் தலைசுழித்துச் சூலமிட்டுத் தயவதாக, வாமேதான் கறுப்புவண்ண அறைகளெட்டும் வளமாக அ ஆ இ ஈ எ ஏ என்ன,போமேதான் எட்டுமுனை சூலம்போடு பொங்கமுடன் களபமுதல் சுகந் தஞ்சாத்தே. (383)

சாத்தப்பா எட்டுமுனைச் சக்கரத்தில்மூன்று சார்வான பழந்தேங்காய் தாம்பூலங்கள், மாத்தப்பா பல்கார வகையுமன்னம் வஸ்துசுத்திகடலை பெரியண்டத்தோடு, போத்தப்பா இளநீர்தேன் பானகப்பால் பொங்கமுடன் மஞ்சள்நீர் கரிதண்ணீரும், ஏத்தப்பா கடலைமொச்சை பயறுசுண்டல் இதமாக வெண்ணெயுஞ் சர்க்கரையும்வையே. (384)

வையப்பா பச்சைமாவிளக்கினோடு வளமாக இத்தனையும் முன்னேவைத்துக், கையப்பா புதுப்பானை வாயைத் தட்டி கனிவான சுண்ணும்பைமேலேபூசி, வையப்பாகரிபோட்டு மேலேகுத்தி பாங்காகப் புழுங்கலரிசி சோற்றைப்போட்டு, மையப்பா உழுந்தென்ற பருப்புங் கூட மைந்தனே கத்தரிக்காய் கருவாடாமே. (385)

ஆமேநீ முருங்கைக்காய் மொச்சைச்சாறு அடைவான புண்ணாக்குக் கீரையோடு, வாமேநீ வஸ்துவுடன் சுத்திகூட வளமான பஞ்சவண்ணச் சோறும்வைத்துத், தாமேநீ பழந்தேங்காய் தாம்பூலஞ்சுற்றித் தயவாக ஒட்டி-

விட்டுப் பாவைமுன்பு, போதேநீ யெட்டிமா விலிங்கம் ரண்டும் பொங்கமுடனிம்ப எண்ணெய்மிள காயாமே. ()

ஆமப்பா சொர்னபுஷ்ப மவர்க்குவைத்து அடைவாகத் தூபமொடு தீபங்காட்டித், தாமப்பா சோடசோபசாரஞ்செய்து தயவான நைவேத்தியமானபின்பு, வாமப்பா பாவையைத்தான் தலையைச்சுற்றி வளமாக ஒட்டையுந்தான் தலையைச்சுற்றி, போமப்பா காடுதன்னில் மயானந்தன்னில் பொங்கமுடன் முப்பலியுங் கொடுத்துவையே. (387)

வைத்தவுடன் பில்லிசூனியங்கள்ஏவல் வலுவான பேய்பூதங்கறுப்புமாடன், இத்தமுடன் முனிவீரன் இருள் காட்டேரி இதமானமலக்குடனே சின்னுபீரும், பத்தவுடன் பிரமராட்சதையும்பேயும் பாங்கான சாத்தனொடு மாடன்பின்னும் கத்தவிட னிருதலையின் கொள்ளியோடு கருமுறையுங் தேவதைகளோடிப்போமே. (388)

போமேநீ சிதம்பரத்தை யெழுதிக்கட்டப் போகுமடா நோய்பிணியும் பஞ்சபாவம், ஆரேநீ பிராமணர்க்கு அன்னம்போடு அபிடேகம் சங்கரர்க்குத் தீபமேற்று, தாமேநீ மஹேஸ்வரற்குப் பூசைசெய்நீ தயவுடனே நந்திக்குச் சலத்தைவாரு, வாமேநீ அரசுடனே வேம்புசுற்றி வைரவர்க்கு வடைமாலை சாத்தநன்றே. (389)

(செ-பா.) பச்சரிசி மாவினால் பாவை 1-செய்து புதுமுறத்தில் வைத்து அதற்கு நகைகள்போட்டு 32-மாவிளக்கு, நவரத்னத்தூள் வைத்து வஸ்திரம்போட்டு வாசனைப்பொடி தூவி, வேறேவைத்து அப்பாவைக்கு முன்னர் தரையில் பசுவின் சாணத்தால் மெழுகிமாவினால் எண்கோணம் போட்டு, எட்டறைகளிலும் கரித்தூள்போட்டு அக்கரித்தூளின் மேலேயே நாலறையில் திருசூரணம்போட்டு உள்சதுரத்திற்கு மஞ்சள் தூள்போட்டு

உள்முக்கோணத்துக்குப் பச்சைத்தூள்போட்டு, அந்த முக்கோணத்தூள் ஸ்ரீங் என்று போட்டு, நான்கு அறைகளில் அம், ஓம், தும், தும், என்றும், நான்கு அறைகளில் ஒம் என்றும் போட்டு ஒவ்வொரு கோணத்தின்மேலும் சூலம்போட்டு எட்டு அறைகளிலும், அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, என முன்மந்திர எழுத்துகளுடன் போட்டு சந்தனந் தெளித்து, அந்தச் சக்கரத்தின் முனையில் பழம், தாம்பூலம், சோறு, சாருயம், கடலை நெற்பொரி கோழிமுட்டை, இளநீர், தேன், பானகம், பால், மஞ்சள்நீர், கரித்தண்ணீர், மொச்சைக்கொட்டை, பச்சைப்பயறு இவற்றின் சுண்டல், வெண்ணெய், சர்க்கரை, பச்சைமாவிளக்கு, இவைகளையெல்லாம்வைத்து, ஒரு புதுப்பானை கொண்டுவந்து, அதன் வாயைத் தட்டிவிட்டு அதன்மேற் சுண்ணாம்பு பூசி, கரிபோட்டு வைத்து அதில் புழுங்கலரிசி உளுத்தம்பருப்பு சேர்த்துச் சமைத்தசோறு, கத்தரிக்காய், கருவாடு, முறுங்கைக்காய் மொச்சைக் கொட்டை இவைகள் சேர்த்துக் காய்ச்சிய குழம்பு புண்ணாக்கு கீரைதுவட்டல், சாருயம், ஐந்து தினுசு சோறு, பழம், தேங்காய், தாம்பூலம், இவைகளெல்லாம் அவ்வேட்டில் வைத்து, அவ்வோட்டை அவ்விடம் வைத்து அதற்கெதிரில் எட்டி, மாவிலிங்கு இந்தச் சுள்ளிகளால் வேப்பெண்ணெய் விட்டுக் கொளுத்தி அதில் மிளகாய்போட்டு தக்ஷணைவைத்துத் தூபதீபங்காட்டி நைவேத்தியங்காட்டிச் சோட சோபசாரஞ் செய்து பிறகு அந்தப் பாவையையும் ஓட்டையும் முன்பின்னாக எடுத்து நோய்கொண்டவன் தலையைச் சுற்றி எடுத்துக்கொண்டு சுடுகாட்டில் முப்பலி கொடுத்து வைத்து விடவேண்டும். இப்படிச் செய்தால், பில்லி, சூனியங்கள், ஏவல், பேய், பூதம், கறுப்பு, மாடன், முனி, வீரன், இருள், காட்டேரி, மலக்கு, சின்னி, பீர், பிரமராக்ஷதை, சாத்தான், மாடன், இருதலைக்கொள்ளி, தேவதைகள் இவைகளெல்லாம் ஓடிப்போய்விடும். இவைகள் செய்தானபிறகு செம்புத்தகட்டிலாவது, தங்கத்தகட்டிலாவது சிதம்பர சக்கரம் எழுதிக் குளிசங்கட்டிப் பிராமணர்களுக்குச் சாப்பாடு போட்டு, சிவபெருமானுக்கும் அபிடேகஞ் செய்து விளக்குகள்வைத்து அரசு,

வேம்புகளைச் சுற்றி வயிரவனுக்கு வடைமாலை கட்டித் தரிக்க வேண்டும்.

139. பில்லி வஞ்சனை நோய்களுக்குக் குளிநீர். (பா-3.)

நன்றான பில்லிவஞ்சனையுநோயும் நாயகனே தீர்ப்ப தற்குச் சொல்லக்கேளு, குன்றான்மாவிலிங்கங் குப்பை மேனி குணமாக முடக்கற்றான் இவைதான்மூன்று, பண் டான வகைவகைக்குப் பலம்பத்தாகப் பாண்டத்தி லதனையிட்டுத் தூணிநீரில் துண்டாக வேகவைத்து விரல் பொறுக்கத் தும்பை மலர் மேலிடவே பிணிகள்போமே.

போமேநீ பூவரசு ஆலின்பட்டை பொங்கமுடன் கடப்பம்பட்டை மூன்றுமாக, ஆமேநீ வகைவகைக்குப் பலந்தான்பத்து அடைவாகத்தூணிநீர் தண்ணீர்காய்ச் சித், தாமேநீ மேலிடவே பிணிநோய்தீருந் தயவான பில்லி வஞ்சனையும் தீரும், போமேநீ அறுகம்புல் சம்பு கோரை புகழ்பெறவே முன்போலே பிணிகள்போமே.

போமடா கண்டங்கத்திரியின்மூலம் பொங்கமுடன் காட்டுச்சீரகத்தின்மூலம், வாமடா பிரமராட்சதையின் மூலம் வகைவகைக்குப் பலம்நூறு நிறுத்துக்கொண்டு, தாமடா வெவ்வேறு பாண்டத்திட்டுத் தயவான தூணி நீர் தன்னைவார்த்து, நாமடா வெந்திறக்கித் தினமொன் றாக நலமாகத்தான்வார்க்க ஏவல்போமே. (392)

(செ-பா.) மாவிலிங்கம் இலை, குப்பைமேனியிலை, முடக்கற் றான் இலை வகைக்குப் பலம்-10, தும்பைப்பூ-10, இவைகளைத் தூணிநீரிட்டுத் தண்ணீர் காய்ச்சி விரல் பொறுக்கும்படி ஊற் றினாலும், பூவரசம் பட்டை, ஆலம் பட்டை, கடப்பம் பட்டை வகைக்குப் பலம்-10, நறுக்கித் தூணிநீரால் போட்டுக்காய்ச்சி ஊற்றினாலும், அறுகம்புல், சம்பங்கோரை இவைகள் வகைக்குப்

பலம் 10, தூணிநீரில் போட்டுக் காய்ச்சி ஊற்றினாலும், கண்டங்கத்திரியின் வேர், காட்டுச் சீரகத்தின்வேர், பிரமராகாசி வேர் வகைக்குப் பலம் நூறு இவைகள் வெவ்வேறு பாண்டங்களிலிட்டுத் தனித் தனியாகக் காய்ச்சி ஊற்றினாலும் முன் சொன்ன வியாதிகள் தீர்ந்து சுகமாகும்.

## 140. இரத்தசாமுண்டி மந்திரம் (பா-1.)

போமப்பா ரத்தசாமுண்டி மந்திரம் பொங்கமுடன் முன்னாகச்சொல்லவில்லை, ஆமப்பா ஓம்ரீயும் ரத்தசாமுண்டி துருதுருமடிமடிசித்திகுரு சுவாகாளென்று அடைவாக சக்கரத்தி லாயிரந்தானோது, -நாமப்பாபில்லி வஞ்சனையும் நோயும் நலமான தேவரொடு கணங்கள்பூதம், வாமப்பா பஞ்சபாதகங்கள்யாவும் வலுவான ராட்சதையும் விலகுந்தானே. (393)

(செ-பா.) ஓம், ரீயும், இரத்த சாமுண்டி, துரு, துரு, மடி, மடி, சித்தி, குரு, குரு சுவாஹாஃ என்று முன்சக்கரங்கீறி ஆயிர முறை ஓதினால் முன்சொன்ன நோய்கள் தீரும்.

## 141. ஆடாதபேய் ஆடத் தூபம். (பா-1.)

தானென்ற பேய்மிரட்டியிலையின்தூளுந் தலைப்பிள்ளைக் கொடித்தூளுஞ் சமனாய்ச்சேர்த்துப், பானென்ற இவையுடன் சாம்பிராணிசேர்த்துப் பாங்காகப் புகைபோடப் பசாசு ஆடும், கோனென்ற ஓ வா வா வென்று ஓதக்கொற்றவனே பூதமெல்லா மாடும்பாரு, தேனென்ற போகருட கடாட்சத்தாலே தெளிவாகப் புலிப்பாணி பாடினேனே. (394)

(செ-பா.) பேய்மிரட்டி யிலையின்தூளும், தலைப் பிள்ளை கொடித்தூளுஞ் சாம்பிராணியுஞ் சேர்த்துப் புகை போட்டால் ஆடாத பேய்களெல்லாம் ஆடும்.

142. கணங்கள், பில்லி, வஞ்சனைகள் போகத்தீபம் (பா-1)

பாடினேன் மேனிவேர் முட்டையோடு பாங்கான கழுதையுட தண்டுங்கூட்டி, நாடினேன் கரிச்சீலைதனில் சுருட்டி நற்கழுதை நெய்யாதல் வேப்பெண்ணெயாதல், கூடினேன் சிரசோடு கிளிஞ்சியாதல் குணமாகத் தீப மிட்டுப் பார்க்கும்போதும், ஓடினேனென்று சொல்லிக் கணங்கள் யாவும் உத்தமனே பில்லிவஞ்சனையும்போமே.

(செ-பா.) குப்பைமேனிவேர் எருமுட்டை பீநாரிவேர் கழுதைத்தண்டு இவைகளைத் தூளாக்கிக் கறுப்புத்துணியில் போட்டுச் சுருட்டித் திரியாக்கிக் கழுதை நெய்யாவது, வேப் பெண்ணெயாவது மண்டையோட்டிலாவது, கிளிஞ்சியிலாவது விட்டு மேற்படி திரியைப்போட்டுக் கொளுத்தி அத்தீபத்தைப் பார்த்துக்கொண்டிருந்தால் கணங்கள், பில்லி, வஞ்சனை, இவை கள்போம்.

143. பயித்தியத்திற்கு. (பா-1.)

போமடா கோசலமும் பசுவின்பாலும் பொங்க முடன் கரிப்பான்சார் முசுமுசுக்கை, தாமடா வகை வகைக்குப் படிதானென்று தயவான எள்ளெண்ணெய் படிதானென்று, ஆமடா கடுகுபதந்தன்னிற்காய்ச்சி அடை வாகமூழ்கிவரப் பிரமைபித்தம், சாமடா பயித்தியஞ்செய் வினையுந்தீருஞ் சற்குருவாம் போகருட கடாட்சந்தானே.

(செ-பா.) பசுவின்நீர், பசுவின்பால், கரிசலாங்கண்ணிச் சாறு, முசுமுசுக்கைச் சாறு, எண்ணெய், இவைகள் வகைக்குப் படி 1-கலந்து கடுகு திரளக்காய்ச்சி தலைமுழுகிவந்தால் பிரமை, பித்தம், பயித்தியம், ஏவல் இவைகளெல்லாம் தீரும்.

144. சகல பேய்க்குங் குளிசம். (பா-2.)

தானப்பா பிரமராட்சதையின்பூடு தயவாக வெள்ளி நாள் காப்புகட்டி, வானப்பா பஞ்சவண்ண நூலினாலே

வளமாகத்தான் கட்டிக் கோசலத்தைவாரு, மானப்பா எட்டுநாளந்திசந்தி மைந்தனே வார்க்கையிலே தியான மோது, ஆனப்பா அரிபிரமராட்சதை நீயென்றும் ஆனந்தவல்லியென்று நூற்றெட்டோதே. (397)

ஓதடா முப்பலியும்பொங்கலிட்டு உத்தமனே நடுச் சாமந்தன்னில் தானும், வாதடா நிருவாண ரூபங் கொண்டு வண்மையுடன் ஆணிவேரறுமல்நீயும், ஆதடா வெடுத்து வந்து குளிசங்கட்ட அடைவான பிரமராட் சதையுமேவல், நாதடா முனிகறுப்பு பேயும்பூதம் நல மான தேவனேடோடிப்போமே. (398)

(செ-பா.) பிரமராகாசிப்பூண்டை வெள்ளிக்கிழமையில் ஐந்து வர்ண நூலினல் காப்புக்கட்டி எட்டுநாள் வரைக்கும் அப்பூண்டுக்குப் பசுவின்நீர் வார்த்து மறு வெள்ளிக்கிழமை இரவு அரிபிரம ராக்ஷதைநீ, ஆனந்தவல்லி நீ என்று நூற்றெட்டு முறைசொல்லி, முப்பலி கொடுத்து, பொங்கலிட்டு, நடுச்சாமத் தில் நிர்வாணமாய் ஆணிவேரறுமற் பிடுங்கிவந்து குளிசங்கட்டி ஞல் பிரமராக்ஷசு, ஏவல், முனி, கறுப்பு, பேய், பூதம், தேவன் இவைகள் ஓடிப்போம்.

### 145 பேய், பூதம் ஓடிப்போக மை. (பா-4)

போமடா இன்னமொரு மையைக்கேளு பொங்க முடன்பன்றியுட மூஞ்சியொன்று, ஆமடா நாய்ப்பல்லு புலி புண்ணுக்கு அடர்கழுதை மண்டைகரும்பூனையீரல், வாமடா மனுஷர்மலந் தீட்டுச்சீலை வளமாக நொறுக்கி யப்பா பாண்டத்திட்டு, தாமடாகுழித்தைல மாவரை காஷ்டத்தாலெரித்துக் குப்பியிலே அடைத்துக் கொள்ளே. (399)

கொள்ளப்பா மயானத்தில் பாழ்வீடாதல் கோரி விடு குட்டிச்சுவர் தன்னிலாதல், வள்ளப்பா வஸ்துவுடன்

நெற்பொரியும் வைத்து வளமில்லா எருக்கம்பூ அரும்பி ஞலே, மெள்ளப்பா நூற்றெட்டு உருத்தாஞேதி மேன் மையாய் ஆத்தாளைத் தியானித்துநீ, அள்ளப்பா தூம்தூம் தூசிதூசி சீசீ போவென்று அடைவாகத்தைலத்தி னருமைபாரே. (400)

பாரேநீ திலதமிடப் பில்லிவஞ்சனை பறக்குமடா தேவரோடு கணங்கள்பூதம், நேரேநீ முனிகறுப்பு பேய் பிசாசு நேரில்லாச்செய்வினையும் பயித்தியந்தீரும், சீரேநீ நெறிகட்டில் வாசல்மேலே செயலாகப்பொட்டிடச் சொப்பனங்கள்கோடி, வேறேநீ வெடியிடுக்கில் தடவி ஞக்கால் வீருனகுறிமுகந்தான் சொல்லநன்றே. (401)

சொல்லானவெடிப்பிருந்த பொட்டிஞலே சொற் பெரிய சொப்பனங்கள் தீரவேண்டில், அல்லானபொட் டைமிகச்சுரண்டியப்பா அடைவாகமுறந்தனிலே சிந்தா மற்ருன், வல்லான சாணியிட்டு மெழுகிநன்ருய் வளமாகப் பசுவின்பால் கொண்டுதேய்நீ, சொல்லான வெல்லார் கால் படாநிலத்தில் சூரையாய்க் கொட்டிவிடு சொப்ப னங்கள்போமே. (402)

(செ-பா.)பன்றித்தலை, நாய்ப்பல், புலியின்உள்நாக்கு, கழுதைமண்டை, கரும்பூனை ஈரல், மனிதர்கள் மலம், தீட்டுச்சீலை இவைகளையெல்லாம் இடித்து ஒரு பானையில்போட்டு ஆவாரைக் குச்சு நெருப்பினல் குழித்தயில மிறக்கி வைத்துக்கொள்ள வேண்டும். பிறகு, சுடுகாட்டிலாவது, பாழ்வீட்டிலாவது, குட்டி சுவற்றிலாவது இத் தயிலபுட்டியை வைத்து வாலையை எழுந்தருளப் பண்ணி அதற்கு எருக்கம்பூமொக்கு மாலைபோட்டு, நெற் பொரி, சாருயம் வைத்து, தூம், தூம், தூசி, தூசி, சீ, சீ, போ, போ என்று நூற்றெட்டுமுறைசொல்லி அம் மையில் கொஞ்சந் தொட்டுப் பொட்டிட்டால், பில்லி, வஞ்சனை, தேவர், கணங் கள், பூதம், முனி, கறுப்பு, பேய், பசாசு, ஏவல் பயித்தியம்

இவைகள் தீரும். வீட்டு வாசல்படி சந்தில் தடவினுல் சொப்ப னங்கள் உண்டாகும். இடக்கில் தடவினுல் குறிசொல்லலாகும். இச்சொப்பனங்கள் தீரவேண்டுமானுல் பொட்டைச் சுறண்டிச் சிந்தாமல் முறத்தில் வாங்கிக் காட்டில் கொட்டிவிட்டு அம் முறத்தையும் அவ் விடத்தையும் சாணியிட்டு மெழுகிப் பசுவின் பாலால் தேய்க்கவேண்டும்.

## 146. அக்கினி பிளாஸ்திரி (பா-2.)

போமென்ற அக்கினி பிளாஸ்திரியைக்கேளு பொங் கமுடன் மெழுகுதுவும் விராகன்பத்து, ஆமென்றபாண் டத்திலிட்டுமைந்தா அடைவாக வீரமைந்துபொடித்துப் போட்டுத், தாமென்று உருகையிலே விளக்கெண்ணெய் விட்டுத்தா னுருக்கிவடிகட்டிச் சலத்தில்வாரு,வாமென்று தனையெடுத்துச் சிமிழில்வைத்து வளமாகச் சல்லாமேல் தடவிவையே. (403)

தடவியே கைகால் குற்றெடுக்குந்தேகந் தயவாக எலுமிச்சம்பழச்சார்பூசி, அடவியே சாரத்தைப்பொடித் துத்தூவி அடைவான பிளாஸ்திரியை அளவாய்ப்போட்டு மடவியே கட்டிடவே பொறுக்கொணுது மயக்கமுஞ் சோபங்கொண்டா லவிழ்த்துப்போடு, தடவியே கொப் பளித்துச் சலமதாகுங் கத்திரித்துவிட்டுவிடு நீருபோமே.

(செ-பா.) மெழுகு பலம்1 ஒரு பாண்டத்தில் இட்டு வீரம் பலம்½ பொடி பண்ணிப்போட்டு அப்பாண்டத்தைத் தீயிலேற்றி இவ்விரண்டுங் கலந்துருகும்போது விளக்கெண்ணெய் கை பாகமாகக் கொஞ்சம் விட்டு உருக்கி வடிகட்டித் தண்ணீரி லூற்றி அதைக் கைபடாமல் ஆயுதத்தால் வழித்துச் சிமிளில் வைத்துத் துணியில் தடவி வைத்துக்கொண்டு கைகால் குற்ற லெடுக்குந் தேகத்தில் எலுமிச்சம்பழச் சாறு பூசி அதன்மேல் நவாசாரப்பொடி போட்டுப் பிளாஸ்திரியை அளவாய்க் கிழித் துப்போட்டுக் கட்டி, மயக்கமும், சோபமும் கண்டால் அவிழ்த்

துவிட்டால் கொப்பளங்காணும். அக்கொப்பளத்தைக் கீறிப்பிழிந்துவிட்டால் தண்ணீர் போய் வலிகுற்று இவைகள் தீர்ந்து போகும்.

## 147. இரணமாறுகிற பிளாஸ்திரி (பா-2.)

போமேநீ வலிகுற்று தீர்ந்துபோகும் பொங்க முடன் ரணமாறப் பிளாஸ்திரி சொல்வேன், ஆமேநீ வெள்ளையென்ற குங்குலியந்தன்னை அடைவாக மெழு குடனே சமனாய்ச்சேர்த்து, வாமேநீ பாண்டத்தி லுருகும் போது வளமான தேங்காயின் நெய்யைவார்த்து, நாமேநீ யுருக்கிவடி கட்டிநீரில் நலமாகத்தான் வார்த்து எடுத்துக் கொள்ளே. (405)

கொள்ளப்பா சிமிழ்வைத்துப் பதனமாகக் கொற்ற வனே சல்லாவஸ்திரத்தில்பூசி, அள்ளப்பா அனல்தனிலே காட்டிக்கட்ட அடைவில்லா ரணங்களெல்லா மாறிப் போகு, மெள்ளப்பா சிரங்குபுண்ணில் பிளாஸ்திரிபோட மேன்மையா யொடுங்கியஃ துதிர்ந்துபோகும், தெள்ளப் பா போகருட கடாட்சத்தாலே தெளிவாகப் புலிப்பாணி பாடினேனே. (406)

(செ-பா.) வெள்ளைக் குங்கிலியம், தேன்மெழுகு இவை இரண்டும் சமனாய்ச்சேர்த்து தேங்காய் நெய்விட்டுருக்கி வடிகட் டித் தண்ணீரிலூற்றி வழித்தெடுத்துச் சிமிளில்வைத்துத் துணி யிற்பூசி அனலில்காட்டி விரணங்களின்மேற் போட்டால் விர ணங்க ளெல்லாம் ஆறி உலர்ந்துபோகும்.

## 148. பிளாஸ்திரி. (பா-1.)

பாடுகிறேனின்னமொரு பிளாஸ்திரிகேளு பாங் கான விளாம்பிசினுங் கருங்குங்குலியம், நாடுகிறேன் சமன் கொண்டு உருகும்போது நலமான விளக்கெண் ணெய் கூடவிட்டு, ஆடுகிறேன் வடிகட்டிக் கலயந்தன்னில்

[illegible]த்துத் துணியில்பூசி, சூடுகிறேன் ரணங்கள் மேல் போட ஆறும் சுகமாக அனல்காட்டிப் போட்டிடாயே. (407)

(செ-பா.) விளாம்பிசின், க[illegible]ப்புக் குங்கிலியம், சமன்கூட்டி விளக்கெண்ணெய் விட்டுருக்கி வடிகட்டிச் சிமிளில் வைத்துத் துணியிற்பூசி அனல்காட்டி விரணங்களின்மேற் போட்டால் ரணங்கள் தீரும்.

## 149. இதுவுமது. (பா-1.)

போட்டிடவே யின்னமொரு பிளாஸ்திரி சொல்வேன் புகழ்பெரிய மரத்துவெள்ளை பலந்தானைந்து, கூட்டிடுபாய் பூரம் எடை விராகனைந்து கூட்டியேதான ரைத்துப் பொடியாய்ச்செய்து, மாட்டுவாய் தென்னங்கா யெண்ணெயாலே மைந்தனே தானரைத்துத் தண்ணீர் விட்டு, ஆட்டிடுவாய் தவளம்போ லாகுமட்டும் அப்பனே புண்மேலே போடப்போமே. (408)

(செ-பா.) வெள்ளைக்குங்கிலியம்பலம்5. ரசகர்ப்பூரம்பலம்$\frac{1}{2}$ இரண்டையும் பொடிபண்ணித் தேங்காய் எண்ணெயாலரைத்துத் தண்ணீர்விட்டுத் தவளம்போலாகுமட்டு நன்றாயரைத்துச் சீலையில் தடவிப் புண்ணின்மேற் போட்டால் சகல விரணங்களுந் தீரும்.

## 150. மேகராஜாங்கத்து நெய். (பா-8.)

போமென்ற மேகராஜாங்கத்தெண்ணெய் பூட்டுகிறே னன்றாகப் புகலக்கேளு, ஏமென்ற ஏரண்டத்தெண்ணெய் படிநாலு இதமாக ஈருள்ளிச்சாறு படிரண்டு, ஆமென்ற கழுதைலத்தைச்சாறு படிரண்டு அடைவாக வரிக்கு மட்டிச்சாறு படிரண்டு, வாமென்ற கையான் புளியாரை சங்குவல்லாரை பிரமிபொடுதலை செருப்படியே. (409)

படியான கருநொச்சி பொன்னுங்காணி பாரிநுணு ஆதொண்டை கிரந்திபூண்டு, செடியானவெள்ளறுகு சிவனார்வேம்பு செயலாக வகைவகைக்குப் படிதான்ரண்டு, கெடியானசாரெல்லா மெட்டொன்றாக்கிக் கெணிதமாய் வேருவகை சொல்லக்கேளு, பிடியான கொடிவேலி பூவரசம் வேரும் பொங்குநிலவாகை சுடுதூரத்தம் வேரே. ()

வேரான கிளிமூக்கின் கிழங்கினோடு விதமான அப்பையுட கிழங்குங்குப்பி, சீரானவகைவகைக்குப் பலமதாகச் சேர்த்திடித்துக்குறுணி நீரெட்டொன்றாக்கிக், காரான எண்ணெயிலே விட்டுமைந்தா கடைச்சரக்கதிற்போடக் கருத்தாய்க்கேளு, பேரானசாதிக்காய் கிராம்புமேலம் பேதமில்லாச் சிறுலவங்கப்பட்டைவால்மிளகே. (411)

மிளகுடனே அதிமதுரங்கோஷ்டந் திப்பிலி மிதமான திப்பிலியின் மூலத்தோடு, அளகான வெங்காரம் குரோசானி யோமம் அடைவான தான்றிக்காய் கடுக்காய்காயம், அளமான கருஞ்சீரகங்கார்போகங் கஸ்தூரி அரத்தைசுக் கதிவிடய மக்கராகாரம், புளகானகடுகுரோகணியுமாஞ்சில் பொங்கமுடன் தாளிசபத்திரியுமாமே. (412)

ஆமென்ற கசகசா ஓமங்கஞ்சா அடைவான வலம்புரிக்காய் பறங்கிப்பட்டை, வாமென்ற சேனுமரப்பட்டையோடு வளமான வாலுழுவைசிறுநாகப்பூ, ஊமென்ற தக்கோலம் வசம்புசுக்கு முத்தமனே யபினிவசுவாசிசீரம் போமென்ற யானைத்திப்பிலி குங்குமப்பூ, பொங்கமுடன் வாளஞ்சேங் கொட்டைதானே. (413)

தானென்ற எவாச்சாரஞ் சத்திசாரந் தயவான நவாச்சாரஞ் சாஸ்திரபேதி, ஆனென்றவரைவகைக்கு விராகனுலும் அடைவாகப் பொடித்துநீ எண்ணெய்தனிற்

பேர்ட்டு, வானென்ற மெழுகுபதந்தனிலிறக்கி வண்மை பெறக் கணபதியைப் பூசைசெய்து, தேனென்றகுருப தத்தை மனதிலுன்னித் தென்புபெற ஒருகரண்டி யுள்ளே கொள்ளே. (414)

கொள்ளப்பா அந்திசந்தி கொண்டபோது கொடிதான பத்தியந்தா னெதுவுமாகா, தெள்ளப்பா மூன்று நாளாறுவேளை தெளிவாக ஏழாநாள் நீரைவாரு, வெள்ளப்பா வறுத்தவுப்பும் பருப்புமாகும் மேன்மையாய் மற்றுநாள் புளியைக்கூட்டு, சுள்ளப்பா கிரந்தியரையாப் புச்சூலை சுகமில்லா விப்புருதி கண்டமாலைபோமே. ()

போமேநீயிருபத்தோர் மேகமுந்தான் பொங்குகின்ற குஷ்டமொடு சோகைபாண்டு, தாமேதான் கழல்வாதம் அண்டவாதந் தயவில்லாக்கால்வாதம் பட்சவாதம், ஆமேதான் பவுத்திரமுமூலப்புற்று மடைவான மண்டையுடசூலை வாயு, தீமேநீரணங்களொடு சூலைதீருந் திறமான போகருட கடாட்சந்தானே. (416)

(செ-பா.) சிற்றாமணக்கு நெய் படி 4, வெள்ளை வெங்காயச் சாறு படி 2, கழுதைலத்திச் சாறு படி 2, துமட்டிக்காய்ச் சாறு படி 2, கரிசலாங்கண்ணி, புளியாரை, சங்கு, வல்லாரை, பிரமி, பொடுதலை, செருப்படி, கருநொச்சி, பொன்னாங்காணி, நுணா, ஆதொண்டை, கிரந்திநாயகம், வெள்ளறுகு, சிவனார்வேம்பு இவைகளும் வகைக்குச்சாறு படி 2, இவைகளையெல்லாம் ஒன்றாய் வார்த்து அடுப்பேற்றி எட்டிலொன்றாகக் குறைத்து குறைந்த அச்சமயத்தில் சித்திரமூல வேர்ப்பட்டை, பூவரசம் வேர்ப்பட்டை, நிலவாகை, சித்திரப்பாலை, கற்றாழைவேர்ப் பட்டை, கோவைக்கிழங்கு, இசங்கு இவைகள் வகைக்குப் பலம் 1, சேர்த்து நன்றாயிடித்துக் குறுணி நீர் விட்டு எட்டுக்கொன்றாக்கி மேற்படி எண்ணெயில் விட்டு, சாதிக்காய், லவங்கம், ஏலரிசி, சன்னலவங்கப்பட்டை, வால்மிளகு, அதிமதுரம், கோஷ்டம்,

திப்பிலி, திப்பிலிப்பட்டை, வெங்காரம், குரோசானி, ஓமம், தான்றிக்காய்த்தோல், கடுக்காய்த் தோல், காயம், கருஞ்சீரகம், கார்போகரிசி, கஸ்தூரிமஞ்சள், சந்நராஷ்டம், சுக்கு, அதிவிடயம், அக்கராகாரம், கடுகுரோகணி, சடாமாஞ்சில், தாளிசபத்திரி, கசகசா, ஓமம், கஞ்சா, வலம்புரிக்காய், பறங்கிச்செக்கை அழிஞ்சிற்பட்டை, வாலுழுவை, சிறுநாகப்பூ, தக்கோலம், வசம்பு, அபினி, வசுவாசி, சீரகம், யானைத்திப்பிலி, குங்குமப்பூ, வாளம், சேராங்கொட்டை, எவாச்சாரம், சத்திசாரம், நவாச்சாரம், சாஸ்திரபேதி வகை ஒன்றுக்கு வராகனெடை 4-பொடிசெய்து எண்ணெயிற்போட்டுக் காய்ச்சி மெழுகுபதத்திலிறக்கி வடிகட்டிக் கணபதியைக் குருவைத் தியானம் பண்ணி ஒருகரண்டியளவு நாளொன்றுக்கு இரண்டுவேளையாக மூன்றுநாள்கொண்டு மற்ற மூன்றுநாளும் பத்தியமாக இருந்து 7-வது நாள் காலையில் எண்ணெயிட்டுக் கொள்ளவேண்டும். 6-நாள் உப்பில்லாப்பத்தியம் 7-வது நாள் வறுத்த உப்பும் துவரம்பருப்புமாகும். எட்டாவதுநாள் புளி சேர்த்துக்கொள்ளலாம். இப்படி செய்தால் கிரந்தி, அரையாப்பு, சூலை, விப்புருதி, கண்டமாலை, இருபத்தொரு மேகம், குஷ்டம், சோகை, பாண்டு, கழல் வாதம், அண்டவாதம், கால்வாதம் பக்ஷவாதம், பவுத்திரம், மூலப்புற்று, மண்டைச்சூலைவாயு, ரணசூலை இவைகள் தீரும்.

### 151. அஞ்சேண்ணெய்த் தைலம். (பா-5.)

தானான வெள்ளெண்ணெயே ரண்டத்தெண்ணெய் தயவான இலுப்பெண்ணெய் வேப்பெண்ணெய்தான், மானான புன்கெண்ணெ யைந்துந்தானு மைந்தனே வகை வகைக்குப் படிதானென்று, தானான பாண்டத்தி லளந்து விட்டுத் தயவாகக் கியாழவகை சொல்லக்கேளு, கோணை ஆதொண்டை மூலம் பத்ரி கொற்றவனே செம்புடைய மூலங்கேளே. (417)

கேளேநீ தழுதாழை காட்டாமணக்கு கெணிதராய்த் திருகுகள்ளி வேலேமேனி, நாளேநீ மாவிலிங்கம்

ஆவிநொச்சி நலமானவேம்பு புன்குவெள்ளைநொச்சி, சூளைதான் கொடிவேலிகார் முருங்கைசங்கு சுகமாகஊர் முருங்கை தூதுவேளை, ;வாளைநீ மாம்பட்டை மூலிகை தான் மூலம் வகைவகைக்குப் பலமைந்து நிறுத்துக் கொள்ளே. (418)

கொள்ளப்பா இவையெல்லா மிடித்துப்போட்டுக் குணமாகத்தூணிநீ ரெட்டொன்றாக்கித், தெள்ளப்பா எண்ணெயிலே யிறுத்துவாரு தெளிவாகச் சரக்குவகை சொல்லக்கேளு, மெள்ளப்பா அரத்தைசுக் கோமந்திப் பிலி மேன்மையாய்த் திப்பிலியின் மூலத்தோடு, அள் ளப்பா ஆனைத்திப்பிலியுங்காயம் அடைவாகக்கருஞ்சீர கஞ் சதகுப்பைதானே. (419)

தானென்றதேசா வரங்குரோசானியுள்ளி தயவாக வெள்ளிச்சியென்ற பிசிணியோடு, வானென்ற வசம்புடனே தேக்குமிஞ்சி மைந்தனே சடாமாஞ்சில் கிராம்பு குக்குல், தேனென்ற வகைவகைக்குப் பலங்காலாகத் தெளிவாக வரைத்திட்டு மெண்ணெயிலே போட்டுக், கானென்ற மெழுபதந்தன்னில் காய்ச்சிக் கணபதிக்குப் பூசைசெய் தெடுத்துக்கொள்ளே. (420)

கொள்ளப்பா தயிலங்காசெடைதானுண்டு குண மாக மேலெங்கும் பூசிநக்கால், கள்ளப்பா சந்நியெங்கே தோஷமெங்கே கடிதான வலிப்பேழும் அண்டவாதம், சுள்ளப்பா வாதமென்ற வகைகளெல்லாஞ் சுழன்றெழுந் தோடிவிடு மெதிர்நில்லாது மெள்ளப்பா மூன்று நாளாறு வேளை மேன்மையாயேழாநாள் நீரைவாரே. (421)

(செ-பா.) எண்ணெய், சிற்றாமணக்கு நெய், இலுப்பை நெய், வேப்பநெய், புன்குநெய் இவ்வைந்தும் வகைக்குப் படி 1

ஒருபாண்டத்தில்வார்த்து ஆதொண்டைவேர், ஆதொண்டை யிலை, கோவை, தழுதாழை, காட்டாமணக்கு, திருகுகள்ளி, நல் வேளை, குப்பைமேனி, மாவிலிங்கம், ஆவி, கருநொச்சி, வேம்பு புன்கு, வெள்ளைநொச்சி, சித்திரமூலம், தவசுமுருங்கை, சங்கு ஊர்முருங்கை தாதுவேளை, மாம்பட்டை இவைகளின் வேர் வகைக்குப் பலம் 5, எடுத்திடித்து ஒரு பாண்டத்திலிட்டுத் தூணிநீர்விட்டு எட்டொன்ருய்க் குடிநீர்காய்ச்சி வடிகட்டி எண் ணெயில்விட்டுச் சிந்நராஷ்டம், சுக்கு, ஓமம், திப்பிலி, திப் பிலிக்கட்டை, யானைத்திப்பிலி, காயம், கருஞ்சீரகம், சதகுப்பை தெசாவரம், குரோசாணிஓமம், வெள்ளைப்பூண்டு, வெளிச்சைப் பிசின், வசம்பு, கண்டுபாரங்கி, இஞ்சி, சடாமாஞ்சி, லவங்கம், மைசாட்சி இவைகள் வகைக்குப் பலம் $\frac{1}{4}$, ஆக எடுத்திடித்து எண்ணெயில் போட்டுக் காய்ச்சி மெழுகுபதத்திலிறக்கி வடி கட்டிக் கணபதிக்குப் பூசைசெய்து காசெடையளவாக உள்ளுக் குச் சாப்பிட்டு மேலுக்கும் பூசிஞல் சந்நி, தோஷம், ஏழுவகை வலிப்பு, அண்டவாதம், எண்பது வாதங்கள் தீரும். இதை 3-நாள் 6-வேளை சாப்பிட்டு மறு மூன்றுநாளும் பத்தியமிருந்து 7-வதுநாள் எண்ணெய்த் தேய்த்துக்கொள்ளவேண்டும்.

## 152. விஷமுஷ்டி தைலம். (பா-9.)

வாரேதான் விஷமுட்டி தைலமொன்று வளமாகச் சொல்லுகிறேன் நன்ருய்க்கேளு, சேரேதான் ஏறழிஞ்சி யெட்டிசங்கு செயலான வன்னிபுன்கு செண்பகப்பூ, சாரேதான் சங்கங்குப்பி கடம்புசின்னி சார்வான வெள் ளறுகு ஆவிப்பட்டை, தீரேதான்மருக்காரை இண்டு கொத்தான் திறஞ்செந்நாயுருவி காஞ்சோரியாமே. ()

ஆமேதான் குன்றிமணி கறுத்தகண்ணி ஆவாரை சிவன் வேம்புகழுதைமுள்ளி, தாமேதான் மருதோன்றி புரசுகருங்காலி தயவானவூமலாற்றி கிளுவைவாகை, போமேதான் புனலிண்டு கருவூமத்தை பொங்கமுடன்

கொடுவேலி முத்தக்காசு, வாமேதான் அமுக்கராவிடத் தாரிப்பூ வரசுடனே சின்னபலாக்குமரிதானே. (423)

தானனமிளகருணை கொன்றையாத்தி தயவானகழற் கொடியுஞ்செங்கத்தாரி, வானனபெருமரமும் அவிரி கட்டு வளமாகச்சமனறுக்கியுலர்த்திக்கொண்டு, பானன குழித்தயிலமாகவாங்கிப் பக்குவமாய்த் தானெடுத்துப் பதனம் பண்ணு, மானனசீவசெந்து வகையைச்சொல் வேன் மைந்தனே மூஞ்சூறுங்காகமாமே. (424)

ஆமேதா னழுங்கோடு கழுகோமையாந்தை அடர் பச்சோந்தியுங் கூகைதேவாங்கு, தாமேதான் பசுந்தவளை பெருவிரியன் தயவான மனிதன்மண்டை கழுதை மண்டை, போமேதா னெருமைக்கொம்பரிக் குளம்பி னோடு பொலியானைலத்திமுதல் புழுக்கைதானும், வாமே தான் ஒட்டகத்தின் லத்திகூ டவன்பன்றிக் கழுதையுட லத்திதானே. (425)

தானப்பா வெள்ளாட்டுப் புழுக்கையோடுதயவாகச் சமன்கொண் டிடித்துலர்த்திப், பாணப்பா குழித்தயில மாகவாங்கிப் பாங்கான இத்தயிலஞ்சமனைச் சேர்த்துக், கோணப்பா செங்கொட்டைத்தயில மரைப்படி கொற்ற வனே தயிலத்தின்கூடவாரு, வானப்பா கறுப்புடைய குங்குலியம் தளர்திசையின் பூட்டுடைய பூச்சிதானே.

தானடாகருஞ்சீரம் கஸ்தூரிமஞ்சள் தனித்தேதான் மாசிக்காயிரசகர்ப்பூரம், மானடாசேனமரப் பட்டை யோடு மைந்தனே வகைவகைக்குப் பலந்தானென்று, வானடா பறங்கிப்பட்டை பிரப்பங்கிழங்கு வளமாகப் பலமிரண்டு நிறுத்துப்போட்டுப், பானடா வலம்புரிக் காய் கடுக்காயோடு பாங்காகப் பலமொன்று நிறுத்துக் கொள்ளே. (427)

கொள்ளேதான் ஒதியம்பட்டை சித்திரமூலச்சாறு குணமாகச் சரக்கெல்லாமரைத்துப்போட்டே, அள்ளே தான் மயிலெண்ணெய் வேப்பெண்ணெயிரண்டும் அடைவான தைலத்தில் நேரேசேர்த்துத், துள்ளேநீ துழாவி மிகப் பதத்தில் காய்ச்சிச் சுகமான கணபதிக்குப் பூசை பண்ணு, தெள்ளே தான் துவளேயிடு தேகமெங்கும் தெளிவாக நோய் தீரும் விபரம்பாரே. (428)

பாரேதான் கால்முடங்கை முடமுந்தீரும் பாங்கான சூலேயொடு குஷ்டநோயும், சேரேதான்புடையன்செவ்வட்டைமர வட்டைசெய்யான் வண்டுகடிபில்லிவஞ்சனையும் போகும், தீரேதான் பூதமுதல் பசாசுபேதாளம் திறமான பிரமராட்சதையுங்கூட, வாரேதான் மற்றுநாள் வேது தண்ணீர் வீறுனத்நாயறிந்து தண்ணீர்வாரே. ()

வாரடாகைப்போடு புளிபுகையுந்தள்ளு வளமான உப்பைநன்றாய் வறுத்துக்கூட்டு, பாரடா பாசிப்பயறு கொடிக்காலின்பஞ்சு பாங்காக முருங்கையதன் பிஞ்சுமாகும், கூரடா ஆவின்பால் நெய்யுமாகுங் குணமான் துவரையிடபருப்புமாகும், சீரடாவிரயதியுட குறியுங் கண்டு சிறப்பாகப் பத்தியத்தைச்சீராய்க்கூட்டே. (430)

(செ-பா.) எறழிஞ்சில், எட்டி, சங்கு, வன்னி, புன்கு, சண்பகம், சங்கங்குப்பி, நிலக்கடம்பு, சிறுசின்னி, வெள்ளறுகு, ஆவிப்பட்டை, மருக்காரை, ஈயக்கொழுந்து, கொத்தான்கொடி, செந்நாயுருவி, சிறுகாஞ்சொரி, குன்றிமணி, கரிசலாங்கண்ணி, ஆவாரை, சிவனார்வேம்பு, கழுதைமுள்ளி, மருதோன்றி, காட்டுமுருக்கு, கருங்காலி, ஊமத்தை, கொடிவேலி, கோரைக்கிழங்கு, அமுக்கிறாக்கிழங்கு, விடதாரிப்பூ, அரசுகுட்டிப்பலா, கற்றாழை, மிளகரணை, கொன்றை, ஆத்தி, கெச்சைக்காய்க்கொடி, செங்கத்தாரி,

பெருமரம், அவிரி, சிறுகட்டுக்கொடி இவைகளெல்லாவற்றையும் சமமாக எடுத்திடித்து ஒரு சில்லியிட்ட பாண்டத்திலிட்டு விதிப்படி குழித்தயிலமிறக்கி வைத்துக்கொண்டு, மூஞ்சூறு, கருப்புக் காக்கை, ஆமை, கழுகு, ஆந்தை, பச்சைஓணான், கூகை, தேவாங்கு, பச்சைத்தவளை, விரியன், மனுஷன் மண்டை கழுதைமண்டை, எருமைக்கொம்பு, குதிரைக்குளம்பு, யானை லத்தி, முதலைப்புழுக்கை ஒட்டைலத்தி, பன்றிமலம், கழுதை லத்தி, வெள்ளாட்டுப்புழுக்கை இவைகளையெல்லாம் சமனாக எடுத்திடித்துலர்த்தி விதிப்படி குழித்தயிலமிறக்கி முன்செய்த குழித்தயிலமும், இந்தத்தயிலமுஞ் சமனாய்ச்சேர்த்து அத்துடன் சேராங்கொட்டைத் தயிலம் படி ½ சேர்த்து இவைகளை எல்லாம் ஒன்றாய்க்கூட்டிக் கருங்குங்கிலியம், திகைப்பூடு என்னும் பூச்சி கருஞ்சீரகம், கஸ்தூரிமஞ்சள், மாசிக்காய், இரசகர்ப்பூரம், அழிஞ்சிற்பட்டை இவைகள் வகைக்குப் பலம்-1. பறங்கிப் பட்டை, பிரப்பங்கிழங்கு இவைகள் வகைக்குப் பலம்-2. வலம் புரிக்காய், கடுக்காய்த்தோல் இவைகள் வகைக்குப் பலம்-1. இந்தக் கடைச்சரக்குகளையெல்லாம் ஒதியம்பட்டைச் சாற்றாலும் சித்திரமூல இலைச்சாற்றாலும் நன்றாயரைத்துப்போட்டு, மயி லெண்ணெய் வேப்பெண்ணெய் இவை இரண்டும் முன்தயிலத் திற்குச் சமமாகச் சேர்த்துக்காய்ச்சிப் பதத்தில் வடித்து வைத் துக்கொண்டு கணபதிக்குப் பூசைசெய்து சீரமெங்கும் துவளை செய்தால், கால்முடம், கைமுடம், சூலை, குஷ்டம் புடையன், செவ்வட்டை, மரவட்டை, செய்யான், வண்டு இவைகள் கடித்த காணாக்கடிகள், பில்லி, வஞ்சனை, பூதம், பசாசு, வேதாளம், பிரமராக்ஷசு இவைகள் தீரும் தயிலம் துவளையிட்டமறுநாள் நோயறிந்து முன்சொன்ன வேதுதண்ணீர் விடவேண்டும். இதற்கு பத்தியம் கைப்பு, புளிப்பு, புகைகுடித்தல் இவைகள் நீக்கவேண்டும். வறுத்த வுப்பு, பச்சைப்பயறு, முருங்கைப்பிஞ்சு, பசுவின்பால், பசுநெய், துவரம்பருப்பு இவைகளை நோய்க்குறி யறிந்து கூட்டவேண்டியவைகளைக் கூட்டித் தள்ளவேண்டிய வைகளைத் தள்ளவேணடும்.

## 153. விஷங்களுக்கு வரிக்குமட்டிமெழுகு. (பா-1.)

கூட்டப்பா வரிக்குமட்டிப் பழச்சாறுவாங்கிக் குண மாகப் பாண்டத்தில் மைபோல்கிண்டி, மாட்டப்பாசிமிள் தனிலே யடைத்துக்கொண்டு மைந்தனே பசும்பயறு மள வாய்த்தானும், மீட்டப்பா நாவுதனில் தடவிப்போடு மிகுந்ததொரு விஷங்களெல்லா மிறங்கிப்போகும், ஆட் டப்பா போகருட கடாட்சத்தாலே அடைவாகப் புலிப் பாணி பாடினேனே. (431)

(செ-பா.) வரிக்குமட்டிக்காயை யிடித்துச் சாறுபிழிந்து ஒரு பாண்டத்தில் ஊற்றி மைபோற் கிண்டி ஒரு சிமிளில் வைத்துக்கொண்டு அதில் பச்சைப்பயறு அளவு எடுத்து நாக் கில் தடவினால் சர்வவிஷங்களும் இறங்கிப்போகும்.

## 154. அக்கினி மந்தத்திற்கு லேகியம். (பா-1.)

தானென்ற திரிகடுகுஓமம் வாய்விலங்கம் தயவாக வகைவகைக்கு வராகனைந்து, போனென்ற பொடிபண் ணிச் சர்க்கரைநேர் சேர்த்துப் பொங்கிய தேன்படிகால் நெய்படிகால் வார்த்து, கோனென்று பிசைந்துமே வைத் துக்கொண்டு குணமாக நெல்லிக்கா யளவுகொள்ள, வா னென்ற வாயுஅக் கினியின்மந்தம் வாங்குமடா போக ருடகடாட்சந் தானே. (432)

(செ-பா.) சுக்கு, மிளகு, திப்பிலி, ஓமம், வாய்விளங்கம் இவைகள் வகை 1-க்கு பலம்-$\frac{1}{2}$ இடித்து வஸ்திரகாயஞ்செய்து சர்க்கரை 4-பலம் பாகாக்கி அதில் தூளைக்கொட்டித் தேன்படி $\frac{1}{4}$ நெய் படி $\frac{1}{4}$ வார்த்துப் பிசைந்து வைத்துக்கொண்டு வேளை க்கு நெல்லிக்காயளவு சாப்பிட்டால் கைகால் குத்தல்குடைச் சலாக இருக்கிற வாயுக்களும் அக்கினிமந்தமும் தீரும்.

## 155. சுத்தபலாதி எண்ணெய். (பா-5)

தானப்பாசுத்த பலாதி எண்ணெய் தயவாகச் சிற்று முட்டி மூலத்தோடு, ஆனப்பா பலமது முப்பத்து ரண்டு அடைவாகத் தாணிடித்து இருதூணி நீரில், பாணப்பா நாலிலொன்று காய்ச்சி வாங்கிப் பாங்காக ஐங்தெண் ணெய் ஒரு படிதான் வாரு, வானப்பா கெந்தியதி மதுரங் கோட்டம் வளமாகச் சாதிக்காய் சாதிபத்திரி. (433)

பத்தான ஏலமுடன் லவங்கப்பட்டை பாங்கான அரத்தைசுக்கு அக்ரார்காரம், முத்தான மாஞ்சை தாளி சயாம்பத்திரி முடுக்கான வாய்விளங்கம் யானைத்திப்பிலி, சித்தான திப்பிலி கடுகுரோகணியுந் திருக்கைநீர் வாலின் மிளகு மோமம், வித்தான குங்குமப்பூ கறுப்புசீரகம் வித மான கடுக்காயுந் தான்றிக்காயே. (434)

காயான செண்பகப்பூ கொத்துமல்லி கருவானவா லுழுவை சிறுநாகப்பூ,மாயானசெவ்வியமது கழஞ்சுநாலு மைந்தனே பொடிபண்ணி எண்ணெயிலேபோட்டுத், தாயானபழச்சாறு பசுவின்பாலு தயவாக வகைவகைக் குப் படிதான்வாரு, சேயான மெழுகுபதந் தனில்வடித் துச் செயமான புழுகுடனே கஸ்தூரிபோடே. (435)

போடேதான் வகைவகைக்குக் கழஞ்சுதானும் பொங்கமுடன் கணபதிக்குப் பூசைபண்ணு, நாடேதான் காசெடைதா னெண்ணெய்கொள்ள நாசியிலே யொரு துளியு மேலேபூச, சாடேதான் முகவாத மண்டைவாதம் சடிதான பித்தமொடு நீலகாசம், சூடேதான் பீநசமும் வாயுசூலை சுகமில்லாச் சொரிமுதலாய்த் தீரும்பாரே. ()

பாரேநீ மூன்றுநாளாறுவேளை பாங்காகக் கொள் கையிலே பத்தியத்தைக்கேளு, சேரேதான் சியக்காய்

வெந்நீருவாரு சிறப்பான பசும்பயறு உப்புங்கூட்டு,
தீரேதான் நாலாநாளெல்லாங்கூட்டுத் தீர்க்கமாயிப்படி
மூன்றுகெடுவே கொள்ளு, வீரேதான் சொன்னபிணி
தீரும்பாரு விதமான போகருட கடாட்சந்தானே. ()

(செ-பா.) சிற்றாமுட்டிவேர் பலம் 32, இடித்து 2-மரக்கால் தண்ணீர்விட்டு 4-ல் ஒன்றாய்க்காய்ச்சி ஐந்தெண்ணெய் ஒவ்வொன்றில் ஒவ்வொருபடிவிட்டுச் சந்தனத்தூள், அதிமதுரம், கோஷ்டம், சாதிக்காய், சாதிபத்திரி, ஏலரிசி, இலவுங்கப்பட்டை, சந்நராஷ்டகம், சுக்கு, அக்கராகாரம், சடாமாஞ்சல், தாளிசபத்திரி, வாய்விளங்கம்,யானைத்திப்பிலி, திப்பிலி, கடுகுரோகணி, வால்மிளகு, ஓமம், குங்குமப்பூ, கருஞ்சீரகம், கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், சண்பகப்பூ, கொத்துமல்லி, வாலுழுவை, சிறுநாகப்பூ, செவ்வியம் இவைகள் வகைக்கு அரைப்பலம் பொடிபண்ணி எண்ணெயிலே போட்டு எலுமிச்சம்பழச்சாறு படி 1, பசுவின்பால் படி 1, விட்டு மெழுகுபதத்தில் வடித்துப் புனுகு, கஸ்தூரி இவ்விரண்டும், வகைக்கு $1\frac{1}{4}$-வராகனெடை வடிகடத்தில் போட்டுக் கணபதிக்குப் பூசைபண்ணி ஒருகாசெடை எண்ணெய் உள்ளுக்குச்சாப்பிட்டு நாசியில் ஒருதுளி விட்டு மேலும் பூசினால் முகவாதம், மண்டைவாதம், பித்தம், நீலகாசம், பீநசம், வாயு, சூலை, சொரி இவைகள் 3-நாள் 6-வேளை கொள்ளும்போதே தீர்ந்துவிடும். சீயக்காய்தேய்த்து வெந்நீரில் ஸ்நாநஞ்செய்யவேண்டும் பச்சைப்பயறு, உப்புசேர்க்கவேண்டும் நான்காவதுநாள் முதல் எல்லாஞ்சேர்த்துக் கொள்ளலாம். இப்படி மூன்றுமுறை சாப்பிடவேண்டும்.

156. ஈளை, காசம், மூத்திரக்கிரிச்சரம், நீரடைப்பு, பெரும்பாட்டுக்கு நெய். (பா-7)

தானான வரிக்குமட்டிவேர் பலமும்பத்து தயவான
கடுக்காய்வேர் நெல்லிவேரும், மானான தான்றிக்காய்
வேரினோடு மைந்தனே பத்திராட்சியினல்வேரும், கோ

ஞன வெட்டிவேர் வில்வவேரும் குணமான விலாமிச்சை தூதுவளைநாரி, வாஞன மாதளைதாங்கி சிறுகாஞ்சோரி வளமான நெய்தலொடு செங்கழுநீர்க்கிழங்கே. (438)

கிழங்குகாசுமல்லி நிலப்பனையும் வாகை கிருபை யுடன் கண்டங்கத்திரியின்மூலம், புளங்கமப்பா வகை வகைக்குப் பலந்தாஞென்று போட்டிடித்துத் தூணிநீ ரெட்டொன்ருக்கி, விளங்கப்பா பசுவின்பால் படிநாலு விட்டு விதமான சரக்குவகை சொல்லக்கேளு, முளங்கப் பா சாதிக்காய் சாதிபத்திரி, முடியான கிராம்பேலம் வாலுடையமிளகே. (439)

மிளகான சிறுலவங்கம் மந்திட்டிகோட்ட மிகுந்த நல்லசந்தனமும் கரியசீரகம், அளவான சதகுப்பைவாய் விளங்கம் அடைவான சாஸ்திர மாம்பேதியோடு, புள தானதாளிசபத்திரி தேவதாரம் புனிதசீரகமிளகு சிறு நாகப்பூ, இளதான அதிமதுரம் காஞ்சினியும் ஈமவாலு ழுவைசிங்கியாமே. (440)

ஆமேதான் கஸ்தூரிமஞ்சளோடு அடைவானதிப் பிலியுந் திப்பிலியின்மூலம், போமேதான் ரோகணியும் நெருஞ்சில்முள்ளு பொங்கமுடன் குரோசானிமுத்தக் காசு, தாமேதான் கடுக்காயுநெல்லிக்காயுந் தயவான குங்குமப்பூ மாதலையின்பிஞ்சி, வாமேதான் வகைவகைக் குக் கழஞ்சுநாலுவளமாகப் பசுவின்பால்தன்ஞலாட்டே.

ஆட்டியே கியாழமது தன்னிற்போட்டு அடைவாக ஆவின்பால் நெய்படிநால்விட்டு, நாடியே செவ்விளநீர் பழச்சாறுதானும் நலமான வல்லாரைச்சாறுகூட, மூட் டியே வகைவகைக்குப் படிதான்ரண்டு, முசியாத சீனியது பலந் தானிரண்டு கூட்டியே நல்லவெல்லம் பலந்தா ஞறுகூடவிட்டு மெழுகுபதந் தன்னிற்காய்ச்சே. (442)

காய்ச்சியே வடிகட்டிக் கலசத்திட்டு கணபதிக்குப் பூசைசெய்து நெற்புடந்தான் திங்கள், ஆச்சியேயெடுத்து நீ வைத்துக்கொண்டு அடைவாகமுக்கழஞ்சு அந்திசந்தி, தாய்ச்சியே கொண்டிடவே ஈளைகாசந் தயவல்லாத் தலை நடுக்கம் பித்தமேகம், ஆச்சியே வலிப்போடு கல்லடைப் பும் அளவில்லாமூத்திரத்தின் கிரிச்சியோடு, பேச்சியே பெரும்பாடு மேலெரிவுகாந்தல் பேதமில்லா நீர்ச்சிரிப்பு வாயுபோமே. (443)

போமடா மலடிக்குப் பிள்ளையுண்டாம் பொங்கியே கைப்புபுளி தயிருமாகா, வாமடா நெய்விட்டா லெல்லா மாகும் வளமானதேகமது காந்தியுண்டாம், பாமடா பவளபற்பம் நெய்யிற்கூட்டிப் பாங்காகக்கொண்டிடவே நோய்களெல்லாம், சாமடாகைகறுப்பு மாறிப்போகும் தயவான போகருட கடாட்சந்தானே. (444)

(செ-பா.) வரிக்குமட்டிவேர் பலம் 10, கடுக்காய்வேர், நெல்லிவேர், தான்றிவேர், பத்திராட்சிவேர், வெட்டிவேர், வில்வவேர், விலாமிச்சம்வேர், தூதுவளைவேர், நன்னாரிவேர், மாதளம்வேர், மலைதாங்கிவேர், சிறுகாஞ்சோரிவேர், நெய்தற் கிழங்கு, செங்கழுநீர்க்கிழங்கு, நாகமல்லிவேர், நிலப்பனங்கிழங்கு நிலாவிரை, கண்டங்கத்திரியின்வேர் இவைகள் வகைக்குப் பலம் 1, இவைகளை யிடித்துப் பெரியமண்பாண்டத்திலிட்டு இரண்டு மரக்கால் தண்ணீர்விட்டு ஒரு படியாகச் சுண்டக்காய்ச்சி வடி கட்டி அதில் பசுவின்பால் படி 4-விட்டு, சாதிக்காய், சாதிபத்திரி, இலவங்கம், ஏலரிசி, வால்மிளகு, சிறுவலங்கப்பட்டை, மந்திஷ்டி கோஷ்டம், சந்தனம், கருஞ்சீரகம், சதகுப்பை, வாய்விளங்கம், சாஸ்திரபேதி, தாளிசபத்திரி, தேவதாரிசக்கை, சீரகம், மிளகு, சிறுநாகப்பூ, அதிமதுரம், மஞ்சள், வாலுழுவை, கண்டுபாரங்கி, கடுக்காய்ப்பூ, கஸ்தூரிமஞ்சள், திப்பிலி, திப்பிலிக்கட்டை, கடுகு ரோகணி, நெருஞ்சிமுள், குரோசானிஓமம், கோரைக்கிழங்கு

கடுக்காய்த்தோல், நெல்லிக்காய்த்தோல், குங்குமப்பூ, மாதுளம் பிஞ்சு இவைகள் வகைக்குப் பலம் $\frac{1}{2}$, இவைகளை யெல்லாம் பசுவின், பாலாலரைத்துக் கஷாயத்தில்போட்டு நெய் படி 4. செவ்விளநீர், எலுமிச்சம்பழச்சாறு, வல்லாரைச்சாறு, வகைக்குப்படி 2, சீனுசர்க்கரை பலம் 2, நல்லவெல்லம், பலம் 4, இவைகள் சேர்த்துக்காய்ச்சி மெழுகுபதத்தில்வடிகட்டிக் கணபதிக்குப் பூசைசெய்து ஒருமாதம் நெற்புடம்வைத்துப் பிறகு எடுத்துக் காலை மாலை இரண்டுவேளையும் முக்கழுஞ்சுநெய் சாப்பிட்டால், ஈளை,காசம், தலைநடுக்கம், பித்தம், மேகம், வலிப்பு, கல்லடைப்பு, மூத்திரக்கிரிச்சரம், பெரும்பாடு, மேலெரிவு, காந்தல், நீர்ச்சிறுப்பு, வாயு இவைகள் நீங்கும். மலடிக்குப் பிள்ளையுண்டாகும். இதற்கு கசப்பு, புளிப்பு, தயிர் இவைகள் ஆகா. நெய் சாப்பிட்டு ஆய்விட்டால் எல்லாமாகும். தேககாந்தியுண்டாகும். இந்த நெய்யுடன் பவழபற்பஞ்சேர்த்துச் சாப்பிட்டால் கைகறுப்பு தீர்ந்துவிடும்.

## 157. பீநசத்துக்கு எண்ணெய். (பா-4.)

தானப்பா பீநசத்துக் கெண்ணெய்கேளு தயவாக எள்ளெண்ணெய் படிதான்ரண்டு, வானப்பா கரிசாலை பொன்னுங்காணி வளமான வெற்றிலை யவுரிமுசுமுசுக்கை மானப்பா மூக்குரட்டை அத்திப்பட்டை மைந்தனே வகைவகைக்குப் படிசார்விட்டுக், கோனப்பா ஆதொண்டையிலைச் சாறுதானுங் கொற்றவனே படியிரண்டளந்து வாரே. (445)

வாரப்பா பீநசமாம் பூண்டுமூலம் வகையுடனே இடித்தசார்படிதானென்று, வீரப்பா பசுவின்பால் படி தானென்று வித்தகனே யடுப்பேற்றி வேகும்போது, சீரப்பா மிளகுடனே கஸ்தூரிமஞ்சள் சிறுகடுக்காய்நெல்லிவித்து நிம்பவித்துங், காரப்பா கருஞ்செம்பைப் பூவுந்தானுங் கனமான வகைவகைக்குப் பலந்தான்வாங்கே.

வாங்கியே பொடித்திட்டு முன்னெய்யிற்றூவி வகையுடனே மெழுகுபதமானபோது, தூங்கியேபோகாதே யிறக்கிக்கொண்டு துய்யமிகு கணபதியைப்பூசைசெய்து, தீங்கில்லாத் தைலமதைத் தினமுநான்கில் தீவரமாய் மூழ்கிவரத்தீரும்ரோகம், ஏங்கியேதிரியாதே புளிப்புகைப்பு எள்ளெண்ணெய் மாங்கிஷமு மீனுகாதே. (447)

ஆகாது பெண்போக மாகாதப்பா அப்பனே வறுத்தவுப்பு துவரையாகும், வேகாதபண்டங்க ளொன்று மாகா வெந்நீருமுருங்கைக்கா யவரைப்பிஞ்சும், நோகாத வழுதலங்காய் வற்றலாகும் நோயாளி கண்டறிந்து பத்தியஞ்செய்தால், போகாதபீநசங்கள் பறந்துபோகும் போகருடகடாட்சத்தாற் பாடினேனே. (448)

(செ-பா.)எண்ணெய்படி 2, கரிசலாங்கண்ணி, பொன்னுங்கண்ணி, வெற்றிலை, அவுரி, முசுமுசுக்கை, மூக்குரட்டை, அத்திப்பட்டை, இவைகள் வகை 1-க்கு சாறுபடி 2, ஆதொண்டையிலைச்சாறுபடி 2, பீநசப்பூண்டுச்சாறுபடி 1, பசுவின்பால்படி1, இவைகளையெல்லாம் கலந்து அடுப்பேற்றி இவை வேகும்போது மிளகு, கஸ்தூரிமஞ்சள் சிறுகடுக்காய்தோல், நெல்விவிரை வேப்பம்விரை, கருஞ்செம்பைப்பூ இவைகள் வகைக்குப்பலம்$\frac{1}{4}$,பொடிசெய்து முன் நெய்யில்தூவி நன்ருய்ப் பதமானபோது இறக்கிக் கணபதிக்குப் பூசைசெய்து நான்குநாளுக் கொருதரம் முழுகிவந்தால், விடாத பீநசங்களெல்லாம் விட்டுப்போம். புளிப்பு, கைப்பு, எண்ணெய்,கறி,மீன்,பெண்போகம், வேகாதபண்டங்கள் இவைகளாகா. வறுத்த உப்பு, துவரை, வெந்நீர், முருங்கைக்காய், அவரைப்பிஞ்சு, கத்திரிக்காய்வற்றல் இவைகளாகும்.

### 158. மேகங்களுக்குத் தீப்புகை. (பா-6.)

பாடுவேன் மேகமென்ற ரோகந்தீரப் பாரிலுள்ள பண்டிதரே பகரக்கேளு, நாடுவேன்பூரமது வராக

னென்று நலமான சூதசெந்தூரமொன்று, கூடுவேன் தேன்மெழுகு பலமோகாலு குறியாகக் கறண்டியிலே உருக்கிக்கொண்டு, ஆடுவேன் முன்சரக்கைப்பொடித்துத் தூவி அப்பனே இறக்கியைந்து திரியிலூட்டே. (449)

ஊட்டியேரோகிதனை அறையில்வைத்து உத்தமனே திரியொன்றைத் தீபமேற்றி, நாடியே கண்சிரட்டை யெதிரில்வைத்து நலம்பெறவே ரோகியின்மேல்போர்வை யிட்டுத், தாட்டிகமாய்த் திரியெரிந்து அணையுமட்டுந் தானிருந்து வேர்வையெல்லாந் துடைத்துப்போட்டு, ஆட்டியே ஆவின்பால் உழக்குள்தந்து அப்பனே பாலன்னம் பின்னர்க்கொள்ளே. (450)

கொள்ளவே உப்பாகா மூன்றுநாளும் குணமாகப் பாலன்னங் கொள்ளவேண்டும், தள்ளவே மற்றொன்று மாகாதப்பா தண்மையுட னன்காநாள் வெந்நீரோடு, மெள்ளவே நீருமுள்ளி சமூலங்கொண்டு மிதக்கவிட்டுக் காய்ச்சியபின் னறவிட்டு, அள்ளியே ஓமமிட்டு நீரை வார்த்து அப்பனே செம்மறியின் மிளகுநீரே. (451)

நீரிலே மிளகாகும் உப்புமாகும் நிச்சயமாயன்று தொட்டுக்காரசார, மாறியே நெய்யோடு பாலுமாகும் மைந்தனே ஆட்டிறைச்சி மச்சமாகும், பாரிலே பெண்ணுகா புளியுமாகா பாலகனேவாய்நீரை ஆற்றலாகா, வீரியமா யிருபதாநாளோமங்தேய்த்து விருப்பமுடன் விளக்கெண்ணெய் முப்பதிலேமூழ்கே. (452)

முப்பதுடன் பத்துநாளாகுமுன்னே முக்கியமாய்த் தீருகின்ற வியாதிகேளு, தப்பதுடன் பீநசங்களேழுந் தீருந் தலைப்பிளவை உச்சிபுற்று கண்டமாலை, கப்பதுடன் கன்னப்புற்று லிங்கப்புற்று கனமான அண்டப்புற்று

யோனிப்புற்றும் இப்பதுடன் பல்லரணைசந்தப்புற்று இப
லான மார்பிளவை கொறுக்கைபோமே. (453)

போகுமே அரையாப்பு ஆசனத்தின்புற்று பொல்
லாதபவுத்திரங்கள் மேகவெடிசூலை, சாகுமே குஷ்டவெடி
துடையில் வாழை சலக்கண்ணி அழுகண்ணி சதைவளர்த்
தல், ஏகுமேதவளைசொறி ஆனைச்சொறி பீலியியலில்லா
ரணங்களெல்லா மெளிதில்போகும், ஆகுமே போகருட
கடாட்சத்தாலே அவனிதனிற் புலிப்பாணி ஆடினேனே.

(செ-பா.) ரசகர்ப்பூரம்வராகனெடை 1, ரசசெந்தூரம்வராக
னெடை 1, தேன்மெழுகு பலம் $\frac{1}{4}$, இம்மெழுகைமாத்திரம் கரண்
டியிலிட்டுருக்கி அதில்முதல் இரண்டு சரக்குகளையும் பொடி
செய்துபோட்டு இறக்கி ஐந்துதிரிசீலையில் நனைத்துத் திரியாக்
கிக்கொள்ளவேண்டும். அடியிற்கண்ட நோய் உள்ளவர்களை ஒரு
அறையில் உட்காரவைத்து அந்தத்திரியிலொன்றைக் கொளுத்
திவைத்து அதின்மேல் மூன்றுகண் கொட்டாங்கச்சியைக் கண்
திறந்து மூடி நோயாளியைப்போர்த்துவிட்டு வேது பிடிப்பது
போல் திரியணைந்துபோகும் வரைக்கும் இருந்து பிறகு போர்
வையை எடுத்துவிட்டு வேர்வையைத் துடைத்து விட்டு $\frac{1}{4}$-படி
பசுவின்பால் கொடுத்துப் பிறகு பாலுஞ்சாதமுங் கொடுக்க
வேண்டும். மூன்றுநாள் வரைக்கும் உப்பாகாது. பாலுஞ் சாத
முந்தான் சாப்பிட வேண்டும். நான்காவது நாள் நீர்முள்ளி
சமூலம்போட்டுக் காய்ச்சின தனிவெந்நீராற்றி ஓமம் தேய்த்து
தலைமுழுக்கு செய்யவேண்டும். அன்றுமுதல் செம்மறியாட்டி
றைச்சி, உப்பு, காரம், சாரம், நெய், பால், மீன், இவைகளாகும்
பெண் ஆகாது. புளியாகாது வாய்ப்பிடித்த வேகத்தை ஆற்றக்
கூடாது. மறுபடி இருபதாவதுநாள் ஓமஸ்நானமும், முப்பதாவ
துநாள் விளக்கு நெய்ஸ்நானமும் செய்யவேண்டும். நாற்பது
நாட்களுக்குள் 7 பீநசம், தலைப்பிளவை, உச்சிப்புற்று, கண்ட
மாலை, கன்னப்புற்று, லிங்கப்புற்று, அண்டப்புற்று, யோனிப்
புற்றுபல்லரணை, சந்தப்புற்று, மார்பிளவை, கொறுக்கு, அரை

யாப்பு, ஆசனப்புற்று, பௌத்திரங்கள், மேகவெடி, சூலே, குஷ்ட வெடி, துடைவாழை, சலக்கண்ணி, அழுகண்ணி, சதைவளர்ச்சி, தவளைச்சொறி, யானைச்சொறி, பிலீகம் மற்றுமுள்ள விரணங்க ளெல்லாந் தீரும்.

## 159. அண்டமெழுகு. (பா-2.)

ஆடியே சிற்றண்டமெழுகிதப்பா அப்பனே சொல் லுகிறேன் வில்வவேறு, தேடியே வீசைபத்து கொண்டு வந்து சேர்த்ததனை நறுக்கியபின் நிழலுலர்த்தி, வாடியே போகாமல் பாண்டத்திட்டு வாய்மூடிச்சீலைசெய்து குழித் தயிலம் வாங்கி, நீடியேதலை அண்டம்பீங்கானிலிட்டு நில வரமாய்த் தைலமதை நிறையவாரே. (455)

வார்த்தபின்பு நாற்பதுநாள் ரவியில்வைத்து வற்ற வற்றத் தைலமதை வார்த்துவந்தால், பார்த்திருந்த பண் டிதர்கள் மாயமாகப் பசுமையுள்ள மெழுகாகும் பகரக் கேளு, தூர்த்துவந்தவாதமெல்லாந் துலைந்துபோகுஞ் சுண்டைக்காயளவெடுத்துத் தேனிலீந்தால், ஆர்த்திருந்த சூலையெல்லா மயர்ந்துபோகு மளவாகப் புலிப்பாணி அறைந்திட்டேனே. (456)

(செ-பா.) வில்வவேர் வீசை 10, நருக்கி நிழலிலுலர்த்திக் குழித்தயிலமிறக்கிக் கன்னிக்கோழிமுட்டை ஒருபீங்கானிலிட்டு தயிலத்தை நிறையவார்த்து நாற்பதுநாள் வெயிலில்வைத்துத் தயிலம் வற்ற வற்ற வார்த்துக்கொண்டு வந்தால் அது பசுமை யுள்ள மெழுகாகும். இதில் சுருண்டைக்காயளவு தேனில் கொடுத்தால் மாகா வாதரோகங்கள், சூலைநோய்களும் தீர்ந்து போகும்.

## 160. இலவணசேந்தூரம் (பா-3.)

அறைகிறேன் லவணத்தின் செந்தூரங்கேள் அப் பனே கல்லுப்பு பலந்தானுலும், கறைகிறேன்சூதமது

பலந்தானென்று கல்வத்தில் தானிட்டு வில்வத்தின்சாற்றால், மறையவே தானரைத்திரண்டுசாமம் மார்க்கமாய்க் குகையில் வைத்துச் சொல்லக்கேளு, விரைகிறேன் போகருட கடாட்சத்தாலே விபரமுடன் புலிப்பாணி விளம்பக்கேளே. (457)

கேளேதான் உலேயில்வைத்துப் பழுக்கவூதக் கிருபையுடனுருகியது மணிபோலாகும், கோளேதான்வாராமல் ஆறவிட்டுக் கொற்றவனே கல்வமிட்டுப்பொடியாய்ச் செய்து, நாளேதான் அந்தர தாமரையின் சாற்றால் நால் சாமந்தானரைத்துப் பில்லேதட்டிப், பானேதான் போகாமல் காயவைத்துப்பக்குவமாய்ச் சில்லிட்டுப் புடமுழுமாமே. (458)

ஆமேநீ முன்போலே ஐந்துபுடம்போட்டால் அப்பனே செந்தூரமாகும்பாரு, தாமேநீயெடுத்ததனைச் சிமிழில்வைத்துத் தயவாகப் பணவெடைதான் தேனிற்கொள்ளப் போமேநீ குன்மமென்ற தெட்டுந்தீரும் பொல்லாத நெஞ்செரிவு சூலேரோகம், வாமேநீ சூதகத்தின் வாயுதீரும் வல்லமையால் புலிப்பாணி வகுத்திட்டேனே. (459)

(செ-பா) சல்லுப்பு பலம் 4, இரசம் பலம் 1, இவ்விரண்டையுங் கல்வத்திட்டு வில்வ இலேச்சாற்றால் இரண்டுசாமம் வரைக்கும் இரசம் நன்றாய் மறையும்படி யரைத்துக் குகையிலிட்டுச் சீலேமண்செய்து உலேயிலிட்டுப் பழுக்கவூதினல் அது உருகி மணிபோலாகும். அதை ஆறவிட்டுக் கல்வத்திட்டு ஆகாச தாமரைச் சாற்றால் நான்குசாமமரைத்து முழபுடம் போடவேண்டும். இப்படி 5-புடம் போட்டால் செந்தூரமாகும். இதில் ஒருபணவெடை தேனில் இருவேளேயும் கொடுத்தால் எண் வகைக் குன்மம், நெஞ்செரிவு, சூலேரோகம், சூதகவாயு இவைகள் தீரும்.

161. நமஞசமேழுகு. (பா-5.)

வகுத்திடவே நமஞசமெழுகுதன்னை வளமாகச் சொல்லுகிறேன் மைந்தாகேளு, தொகுத்திடுவேன் லிங்க மொடு தாளகமுஞ்சிங்கி சொற்பெரிய மனோசிலையுங் கௌரி வெள்ளை, பகுத்திடுவேன் சூதங்கெந்தி வீரம்பூரம் பாங்கான துரிசியுடன் வகைக்குத்தானும், மகத்திடுவாய் விராகனிடை யொன்றேதானும் மாசற்ற வாளமது பதி னென்றுமே. (460)

ஆமேதான் சரக்கெல்லாங் கல்வத்திட்டு அப்பனே அன்னக் காடியினா லாட்டித், தாமேதான் நாற்சாமமான பின்பு தயவாக மெழுச்சீலை அதில் பரப்பிப், போமேதான் திரித்ததனைக் காயவைத்துப் பொங்கமுடன் ஆவினெய் பலமெட்டாகும், தீமேதா னில்லையடா சுடர்த்தயிலமா கத் தீவிரமாய் மூன்றுமுறை மடக்கிச் செய்யே. (461)

செய்தபின்பு தயிலமதை எடுத்துக்கொண்டு செப் பரிய பனைவெல்லம் பலமூன்று, கொய்தசுக்கு சூடனு முன் தயிலங்கூடக் கொற்றவனே விராகனிடை சேர்த்து வைத்துக் கைதவமாய்ச் சுண்டைக்காய் அளவுகொள்ளக் கடத்திலுள்ள வாதமெல்லாங் கதிகெட்டோடும், பைத முடன் மாதமொன்றுக் கைந்துநாள்தான் பக்குவமாயிப் படிமூன்று முறையேதானே. (462)

தானகத் தீருகின்ற வியாதிகேளு தகைமையில்லாக் குன்மமெட்டு சூதகத்துவாயு, மானகத் திமிர்வாதங் குட லின்வாதம் மன்னவனே பக்கமென்ற வாதம் போகும், வானகப் பத்தியந்தான் சொல்லக் கேளு வண்மையுள்ள பசுவின்பால் பசுநெய்யாகும், மீதனகப் பசும்பயறு வறுத்த வுப்பாந் தெளிவுடன் பத்தாநாள் விளக்கெண் ணெய் மூழ்கே. (463)

மூழ்கியபின் மதுபானம் பெண்ணுகாது முக்கியந் தொண்ணூறுநாளாகுமட்டும், மாழ்கிநீ போகாதே மனம் விடாதே மதிகெட்டு நில்லாதே மருந்தேறுது, காழத்த பண்டந்தின்னுதே காலைமாலை காலாறநீ நடந்துதிரும்ப நன்று, வாழ்த்துவார் போகருட கடாட்சத்தாலே வகையாகப் புலிப்பாணி வசனித்தேனே. (464)

(செ-பா.) இலிங்கம், தாளகம், மிருதார்சிங்கி, மனோசிலை கௌரி, வெண்பாஷாணம், இரசம், கந்தகம், வீரம், பூரம், மயில் துத்தம் ஆகிய இவைகள் பதினொன்றும் சுத்திசெய்து வகைக்கு வராகனெடை 1, சுத்திசெய்த வாளம் வராகனெடை 11, இவைகளையெல்லாம் அன்னக்காடியினு லரைத்து நாற்சாம மான பின்பு ஒருமுழச் சீலையில் தடவித் திரித்துக் காயவைத்துப் பசுவின்நெய் பலம் 8-ல் சுடர்த் தயிலமாக மூன்றுமுறை மடக்கிச் செய்து பிறகு இத்தயிலம் பலம் 1, சுக்குத்தூள் பலம் 1, கர்ப்பூரம் பலம் 1, பனைவெல்லம் பலம் 3-ஆக இவைகளைச் சேர்த்தரைத்து வைத்துக்கொண்டு சுண்டைக்காயளவாக நாள் ஒன்றுக்கு இரண்டுவேளையும் மாதம் ஒன்றுக்கு 5-நாள் வீதம் மூன்றுமுறை சாப்பிட்டால் குன்மம் 8, சூதகவாயு, திமிர்வாதம் குடல்வாதம், பாரிசவாதம் இவைகள் தீரும். பசுவின்பால், பசுநெய், பச்சைப்பயறு, வறுத்த உப்பு ஆகும். பத்தாவதுநாளில் விளக்கெண்ணெய்தேய்த்து முழுகவேண்டும். முழுகினபிறகு 3-மாதம் வரைக்கும், மதுபானம் பெண்போகம் இவைகள் ஆகா. காரவஸ்துக்கள் கூடாது. காலை மாலை கொஞ்சதூரம் காலாறி வரவேண்டும்.

## 162. ஆனைக்கால் தீர லேகியம். (பா-2.)

வசனித்தேன் கருங்குருவை மாப்படிகால்தான் வகையாகத் திருகுகள்ளிப்பாலரைக்கால், நசனித்த பசுப் பால்தானரைக்காலாகும் நறுந்தேனும் படியரைக்கால் நவிலக்கேளு, தசனித்தமதனிலே கலந்துகொண்டு தய

வாக அடுப்பேற்றி லேகியமாய்க்கிண்டி, அசனித்து ஆற விட்டுக்கல்லிலாட்டி அப்பனே கலசத்தில்பதனம்பண்ணே.

பண்ணப்பா கழற்சிக்கா யளவாகக்கொள் பக்குவ மாயைந்து தினமிருநேரந்தான், நண்ணப்பா இம்முறை யாய் மூன்றுமாதம் நன்மையுடன் கொள்வதற்குப் பத்தி யங்கேள், உண்ணப்பா நெய்பால் பசும்பயறுகும் உத்த மனே வறுத்தவுப்பு மிகவுமாகும், கண்ணப்பா மறுபத்தி யமிருந்து விளக்கெண்ணெயால் மூழ்கு கருணையுள்ள போகருட கடாட்சந்தானே. (466)

(செ-பா.) கருங்குருவை அரிசிமா படி $\frac{1}{4}$, திருகுகள்ளிப் பால் படி $\frac{1}{8}$, பசுவின்பால் படி $\frac{1}{8}$ தேன் படி $\frac{1}{2}$, இவைகளை யெல்லாங் கலந்து அடுப்பேற்றி லேகியமாய்க்கிளறி யாற்றிக் கல்வத்திட் டரைத்து ஒருகலசத்தில் வைத்து நாளொன்றுக்கு இரண்டுவேளையாக ஐந்துநாள் கழற்சிக்காயளவு சாப்பிட வேண்டும். இப்படி மூன்றுமாதஞ் சாப்பிடவேண்டும். நெய் பால், பச்சைப்பயறு, வறுத்தஉப்பு இவைகளாகும். மறுபத்தியம் இப்படியே யிருந்து விளக்குநெய்தேய்த்து முழுகவேண்டும். மேற்படிநோய் தீர்ந்துவிடும்.

### 163. அர்த்தனாரீசுர மாத்திரை. (பா-2.)

தானென்ற அர்த்தனாரி மாத்திரையைச் சொல் வேன் தனிவெள்ளைப் பாஷாணம் வராகனென்று, கோ னென்ற கோரோசனை வராகனென்று கொற்றவனே முலைப்பாலால் சாமமாட்டிப், பானென்ற பசும்பயர்போ லுண்டைசெய்து பக்குவமாய் வலமுலைப்பால்தன்னிலீய, வானென்ற போகருட கடாட்சத்தாலே வண்மையுள்ள சுரம்நீங்கி அர்த்தமாமே. (467)

அர்த்தமென்ற இடமுலைப்பால்தன்னில் ஈந்தால் அப் பனே இடப்புறத்துச் சுரம் நீங்கியொருபுறமாய் நிற்கும், அர்த்தமென்ற விரண்டு முலைப்பாலிற்றந்தால் வகைகெட்

டுச் சுரமதுதா னுடனேநிற்கும், கர்த்தனென்று உனைத் துதித்து லோகமெங்கும் கால்விழுந்து கும்பிடுவார் கதி தாவென்று, விர்த்தனென்ற போகருட கடாட்சத்தாலே விபரமுடன் புலிப்பாணி பாடினேனே. (468)

**(செ-பா.) வெள்ளைப்பாஷாணம் வராகனெடை 1, கோரோசனம் வராகனெடை 1, முலைப்பாலால் ஒருசாமமரைத்துப் பச்சைப் பயறுபோல் மாத்திரைசெய்து வலதுபக்க முலைப் பாலிலிழைத்துக் கொடுத்தால் அப்பக்கத்தின்சுரம் தீரும். இடதுபக்க முலைப்பாலால் கொடுத்தால் இப்பக்கத்தின்சுரம் தீரும். இரண்டு முலைப்பாலும் கலந்ததிற் கொடுத்தால் சுரங்களெல்லாம் உடனேநிற்கும்.**

## 164. அமிர்த சஞ்சீவி மாத்திரை. (பா-3.)

ஆமென்ற அமிர்தசஞ்சீவிமாத்திரை அடைவாகச் சொல்லுகிறே னப்பாகேளு, தாமென்ற சாஸ்திரபேதி யேலந்தனிக் கோட்டங்கிராம்புடனே சாதிபத்திரி, காமென்ற சந்தனமுங் கடுகுரோணி கனமான இலுப்பைப்பூ நன்னாரி விலாமிச்சை, வானென்ற இருவேலிகடுக்காய் தான்றி வற்றல்நெல்லிதிப்பிலியு மதுரமாமே. (469)

மதுரமென்ற திராட்சையொடு முத்தக்காசு மைந் தனே பேரீச்சங்காய் வகைவகைக்குச், சதுரமென்ற விராகனெடை நிறுத்துக்கொண்டு சலியாமல் கல்வமிட்டுப் பழச்சாற்றாலே, அதிரம்போலரைத்திடுவாய் சாமநாலு அப்பனே கடலைபோ லுண்டைசெய்து, நதிவரண்டு சுர மிஞ்சியதிகமானால் நன்முலைப்பால் வெந்நீரிலீயநன்றே.

நன்றாகுஞ்சன்னிமுதல் தோஷமெல்லாம் நன்மையாம் பிள்ளைபிணிநலியுந்தீரும், பன்றாகும் நாவரட்சி பறக் கும்பாரு பரிதிகண்டபனிபோலாம் நசமுள்ளோர்க்குக், கன்றாத பத்தியமாய்க்காருகாரு, கதிகெட்டால் வியாதி

யது கதித்துக்கொல்லும், குன்றுகும் போகருட கடாட்சத்தாலே குணமாகப் புலிப்பாணி கூறினேனே. (471)

(செ-பா.) சாஸ்திரபேதி, ஏலரிசி, கோஷ்டம், இலவங்கம், சாதிபத்திரி, சந்தனம், கடுகுரோகணி, இலுப்பைப்பூ, நன்னாரி வேர், விலாமிச்சம்வேர், வெட்டிவேர், கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிவற்றல், திப்பிலி அதிமதுரம், திராக்ஷைப்பழம், கோரைக்கிழங்கு, பேரீச்சங்காய் இவை வகைக்கு வராகனெடை ஒன்று நிறுத்துக் கல்வத்திட்டு எலுமிச்சம்பழச் சாற்றினால் நான்கு சாமமரைத்துக் கடலையைப்போல் மாத்திரைசெய்து முலைப்பாலிலாவது, வெந்நீரிலாவது கொடுத்துப் பத்தியமாயிருந்தால் சுரம், சன்னி, தோஷம், பிள்ளைகளுக்குண்டாகும் நோய்கள்; நாவரட்சி இவைகளெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கும். பத்தியம் தவறினால் கெடுதியுண்டாகும்.

## 165. அக்கர சஞ்சீவி மாத்திரை. (பா-3.)

கூறுவேன் அக்கரசஞ்சீவி மாத்திரை குணம்பெறவே சொல்லுகிறேன் குறிப்பாய்கேளும், கோறுகிறேன் அதிமதுரங்கோஷ்டஞ்சுக்கு குணமுள்ள சாதிக்காய் கொடுக்காய் சீரகம், ஊறுவேன் லவங்கப்பட்டை திப்பிலிமூலம் உத்தமனே கடுக்காயும் அசமதாகம், தேறுவேன் கொத்தமல்லி கஸ்தூரி மஞ்சள் திறமுள்ள பழம்புளியுஞ் சீனிகாணே. (472)

காணவே அரத்தைரண்டு இந்துப்போடு கருஞ்சீரகம் வகைவகைக்கு விராகனென்று, தோணவே முலைப்பாலிரண்டு சாமந் தொகுத்திடவே தானரைத்துத் துவரைபோல, மாணவே யுண்டைசெய்து நிழலுலர்த்தி மைந்தனே குப்பியிலே அடைத்துக்கொண்டு, நாணவே நாவரட்சி நங்கைதோஷம் நலமில்லாச் சன்னிமுதல் சுரங்கள் போமே. (473)

போகுமே முலைப்பாலில் கொடுக்கநன்று புனித முள்ள அனுபானந் தன்னில்ஈவாய், ஆகுமே பிள்ளைப் பிணி அனந்தம்போகும் அப்பனே பத்தியமாயி ருக்கச்செய்து, பாகமா யேழுநாள் கொண்டபின்னர் பாலகனே வாரமதாய் நீரைவாரு, சோகமாய் வியாதி கண்டு மருந்தைஈவாய் சொற்பெரிய போகருட கடாட் சந்தானே. (474)

(செ-பா.) அதிமதுரம், கோஷ்டம், சுக்கு, சாதிக்காய், கொடுக்காய்ப்புளி, சீரகம், இலவங்கப்பட்டை, திப்பிலிமூலம், கடுக்காய்த் தோல், ஓமம், தனியா, கஸ்தூரிமஞ்சள், பழம்புளி, சர்க்கரை, சிற்றரத்தை, பேரரத்தை, இந்துப்பு, கருஞ்சீரகம் வகை ஒன்றுக்கு வராகனெடை ஒன்று முலைப்பாலால் இரண்டு சாமமரைத்துத் துவரையளவு மாத்திரைசெய்து வேளைக்கு ஒரு மாத்திரை முலைப்பாலில் 7-நாள் கொடுத்து இச்சாபத்தியம் வைத்து மறுவாரம் எண்ணெய் தேய்த்தால் நாவரட்சி, ஜலதோஷம், பெண்தோஷம், சந்நி, சுரம், இவைகள்தீரும்.

## 166. பிள்ளைகட்குப் பேதி மாத்திரை. (பா-2.)

தானென்ற பிள்ளைகட்கு விரேசனந்தான் தயவாகச் சொல்லுகிறேன் லவங்கமேலம், மானென்ற சன்னபட்டை மதுரங்கோட்டம் மைந்தனே சண்பகத்தின் மொட்டுதா னும், வானென்ற வராகனெடை நிறுத்துக்கொண்டு வாளமது சுத்திசெய்து வராகனென்று, தேனென்ற, பழச்சாற்றால் மூன்றுசாமந் தெளிவாகத்தானரைத்துச் செப்பக்கேளே. (175)

கேளப்பா மிளகதுபோல் குளிகைசெய்து கெடியாக நிழலுலர்த்திச் சிமிழில்வைத்துக், கோளப்பா இல்லையடா சர்க்கரையாதல் கொற்றவனே நல்லவெல்லங் கதலிதன் னில், நாளப்பா பிள்ளைபல மறிந்துநீயும் நன்மணியி

லொன்றிரண்டு நல்கியபின், ஆளப்பா மிளகுநீர் சாதமீ
வாய் அந்தியிலே சுக்கு சீரகமுமாமே. (476)

(செ-பா.) இலவங்கம், ஏலரிசி, சிறுலவுங்கப்பட்டை, அதி
மதுரம், கோஷ்டம், சண்பகமொக்கு இவைகள் வகைக்குவராக
னெடை ஒன்று, சுத்திசெய்தவாளம் ஒன்று, எலுமிச்சம்பழச்
சாற்றால் மூன்று சாமம் அரைத்து மிளகுபோல் மாத்திரை
செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு, குழந்தைகள்
பலா பலமறிந்து காலையில் மாத்திரம் ஒரு மாத்திரையாவது,
இரண்டுமாத்திரையாவது சர்க்கரையிலாவது, நல்ல வெல்லத்
திலாவது, வாழைப்பழத்திலாவது கொடுத்து மிளகு நீர்சாதம்
கொடுக்கவேண்டும். மாலையில் சுக்குஞ் சீரகமுங் குடிநீர் காய்ச்
சிக் கொடுக்கவேண்டும்.

## 167. கட்வோதி மாத்திரை. (பா-2.)

ஆமேதான் கியாழமிட்டுக் கொடுப்பாயப்பா அறை
கிறேன் கட்டுவாதி தன்னைக்கேளு, தாமேதான் சாதிக்
காய் சாதிபத்திரி தகமையுள்ள மாசிக்காய் கடுக்காய்ப்
பூவும், நாமேதான் சீரகமும் விடையங்கிராம்பு நலமுள்ள
வெக்தயமும் பினிதானும், போமேதான் கசகசாவுங்
கோரோசனையுங் கொற்றவனே வராகனெடை நிறுத்து
வாங்கே. (477)

வாங்கியே முலைப்பாலால் அரைத்துநீயும் வண்மை
யுள்ள மிளகதுபோலுண்டைசெய்து, தாங்கியே நிழலு
லர்த்திப்பதனம்பண்ணு தாரணியில் கிராணிவகை எல்
லாம் போக, ஓங்கியேதேனதிலும் வெண்ணெயிலுங்
கொள்ள ஓடிவிடும் பேதிமுதல் ரத்தக்கிராணி, தீங்கில்
லாப்போகருட கடாட்சத்தாலே திறமாகப் புலிப்பாணி
திறஞ் சொன்னேனே. (478)

(செ-பா.) சாதிக்காய், சாதிபத்திரி, மாசிக்காய், கடுக்காய் பூ, சீரகம், அதிவிடயம், இலவங்கம், வெந்தயம், அபினி, கசகசா கோரோசனை இவைகள் வகை ஒன்றுக்கு வராகனெடை ஒன்று, இடித்துக் கல்வத்திட்டு மூலைப்பாலாலரைத்து மிளகு போலுருட்டி நிழலிலுலர்த்தித் தேனிலாவது, வெண்ணையிலாவதுகொள்ள எல்லாக்கிராணிகளும் தீரும்.

## 168. பச்சைக்கர்ப்பூர மாத்திரை. (பா-2.)

சொன்னதொரு பச்சைக்கர்ப்பூரமாத்திரை சொல்லுகிறேன் பச்சையென்ற கர்ப்பூரந்தான், மன்னென்ற வீரமுடன் பூரம்லிங்கம் மைந்தனே சூதமுடன் ரசசெந்தூரம், வின்னமில்லாச் சுத்திசெய்து வகைவகைக்குவிராகனெடை தானெடுத்துக் கல்வத்திட்டு, அன்னநடை மின்னார்கள் காமப்பாலால் அப்பனே நாற்சாமம் அரைத்து வாங்கே. (479)

வாங்கியே குன்றிமணி போலுருட்டி வண்மையுடனிழலுலர்த்தி வரிசைகேளு, தீங்குற்ற சூலைதிரி கிரந்தி தோஷம் தின்றிடவே ஏழுநாளில் தீர்ந்துபோகும், ஓங்கியே வந்துற்ற சன்னிஓடும் ஒருநொடியில் சூடெழுந்தோங்கி நிற்கும், பாங்குற்ற பத்தியங்களிச்சாபத்தியம் பண்பான போகருட கடாட்சந்தானே. (480)

(செ-பா.)பச்சைக் கர்ப்பூரம், வீரம், பூரம், லிங்கம், இரசம் இரசச்செந்தூரம் இவைகளைச் சுத்திபண்ணி வகை ஒன்றுக்கு வராகனெடை ஒன்றாகக் கல்வத்திட்டு முலைப்பாலால் நான்கு சாமமரைத்துக் குன்றிபோலுருட்டி நிழலிலுலர்த்தி 7-நாள் இருவேளையும் மூலைப்பாலில் கொடுத்தால் சூலை, 3-வகை கிரந்தி, ஏழுவகை தோஷம், மஹாசன்னி இவைகள் தீரும். கொஞ்சநேரத்தில் சூடெழும்பும். இச்சா பத்தியம். (வாய்நீண்டும், ஜாக்கிரதையாய்க்கையாளவேண்டும்.)

## 169. சிறுபிள்ளைகளுக்குக் கட்டுவாதி மாத்திரை (பா-2)

*தானென்ற சாதிக்காய் தனைக்குடைந்து தன்மை யுள்ள அபினிபணவெடைதானிட்டு, கோனென்றகுளவிந் தமரைத்துக்காய்மேல் கொற்றவனே கவசமிட்டுக் குண மதாக, மானென்ற வேதுபுடமாகவிட்டு மைந்தனே கவச மதை மாற்றிப்பின்பு, தேனென்ற முலைப்பாலால் அரைத் துமைபோல்தெளிவாக உழுந்ததுபோலுண்டைசெய்யே.*

*செய்த உண்டைதனை யெடுத்து முலைப்பால்தேனில் செயம்பெறவே கொடுத்துவரத் தீரும்நோய்கள், நொய்ய வந்தரத்தக்கொட்டல் ரத்தபோதி நொடிக்குமின்னே ஓடி விடும் நோய்தீரும்பார், பய்யவந்தபேதி முதல்கட்டுங்கட் டும் குவமாய்ப்பத்தியங்கள் பாகஞ்செய்வாய், ஐயரெனும் போகருட கடாட்சத்தாலே அன்பாகப் புலிப்பாணி அருளினேனே.* (482)

(செ-பா.) சாதிக்காய் ஒன்று எடுத்து அதைச் சிறு துளை செய்து அத்துளையில்பணவெடை அபினிசேர்த்து மஞ்சளரைத் துக் காய்மேலப்பி வேதுபுடம்போட்டுக் கவசத்தைப்பிரித்து அதை முலைப்பாலாலரைத்து உளுந்துபோல் மாத்திரைசெய்து அதில் வேளைக்கு ஒன்று முலைப்பாலிலாவது, தேனிலாவது கொடுத்தால் ரத்தங்கொட்டல், ரத்தபேதி, பலவகைப்பேதிகள் இவைகள் கட்டிவிடும். பத்தியம் தக்கவா றிருக்கவேண்டும்.

## 170. இரத்தக்கோட்டலுக்கும் சீதபேதிக்குஞ் சூரணம்.

*அருளுவேன் கர்க்கடகசிங்சியப்பா அடைவான கிராம்புடனே கருவாப்பட்டை, உருளவே பிரட்டிச்சிறு வறுப்பதாக்கி உத்தமனே வகைவகைக்கு வராகனென்று மருளவே சூரணித்து மைந்தாகேளு மயக்கமில்லை ஆறு பங்காய்ச் செய்துகொண்டு, குருவாகப் போகரை நீ*

தொழுது எத்திக்கொடுத்துவிடு வெண்ணெயிலே குலைந்து போமே. (483)

(செ-பா.) கடுக்காய்ப்பூ, இலவங்கம், இலங்கப்பட்டை இம் மூன்றும் வகை ஒன்றுக்கு வராகனெடை ஒன்று தனித்தனி இளவறுப்பாய் வறுத்துச் சூரணம் பண்ணி ஆறு பங்குபண்ணி வெண்ணெயில் 3-நாள் 6-வேளைகொடுத்தால் மேற்படி நோய் தீரும்.

## 171. அமிர்த சஞ்சீவி குளிகை. (பா-2.)

போமேதான் அமிர்தமென்ற குளிகை சொல்வேன் புகழுங்கோ ரோசனையும் ஏலந் தானும், தாமேதான் அதிமதுரம் சண்பகப்பூ-தலையான சாஸ்திரமாம் பேதியோடு, நாமேதாம் வகைவகைக்கு வராகனென்று நலம் பெறவே கல்வத்தி னன்றாயாட்டி, ஆமேதான் வெட்டிவேர் விலாமிச்சவேரும் அடைவாகக்கியாழமிட்டுஅரைத் திடாயே. (484)

அரைத்திடுவா யிருசாம மானபின்பு அப்பனே குன்றியைப்போ லுண்டைசெய்து, நிரைத்தனமாய் நிழலிலுலர்த்தி நினைவாய்க்கேளு நீமகனே முலைப்பாலில் நுணிக்கிவைக்கில், உரைத்துவந்த மாந்தமெட்டு நீர்ப்படுவன்றானும் உத்தமனே அஸ்திசுரம் வெப்புந்தீரும், மறைபுகழும் போகருடகடாட்சத் தாலே மகிழ்வாகப் புலிப்பாணி மனம்விட்டேனே. (485)

(செ-பா.) கோரோசனம், ஏலரிசி, அதிமதுரம், சண்பகப்பூ சாஸ்திரபேதி வகை ஒன்றுக்கு வராகனெடை ஒன்று கல்வத்திலிட்டு, வெட்டிவேர், விலாமிச்சம்வேர் குடிநீர் இட்டு இரு சாமமரைத்துக் குன்றி போலுருட்டி நிழலுலர்த்தி முலைப்பாலில் 1 மாத்திரை நுணுக்கிவைத்து வார்த்தால் மாந்தம் எட்டும் நீர்ப்படுவான், அத்திசுரம், வெப்பு இவைகள் தீரும்.

## 172. சிறுபிள்ளைகள் காதில் சீக்குரவித் தயிலம் (பா-1.)

விட்டதோர் கல்நண்டு வராகன்பத்து வெள்ளுள்ளி குளவிந்தம் வராகனைந்து, திட்டமுற வெள்ளைக்காக் கணஞ்சாற்றாலே திறமாகத் தானரைத்துத் தேங்காய் நெய்யில், சட்டமுடன் தான்பிசைந்து ரவியில் வைத்துச் சாதகமாய் மூன்றுநா ளானபின்பு, இஷ்டமுடன் வடி கட்டி எடுத்துக்கொண்டு, என்மகனே செவியிலிடச் சீத் தான் போமே. (486)

(செ-பா.) ஒற்றைக்கால் நண்டு பலம் 1 வெள்ளைப்பூண்டு, மஞ்சள் வகைக்குப் பலம் $\frac{1}{2}$ இவைகளை வெள்ளைக்காக்கணஞ் சாற்றாலரைத்துத் தேங்காய் எண்ணெய்யிற்பிசைந்து வெயிலில் 3-நாள் வைத்து வடித்த தயிலத்தை எடுத்து வைத்துக்கொண்டு காதில் விட்டால் தீரும்.

## 173. சிறுபிள்ளைகள் பெருக்க நெய். (பா-2.)

தானென்று தேறாத பிள்ளைகட்குத் தயவாகச்சொல் லுகிறேன் தண்ணீர்மிட்டான், மானென்ற சாறும்வெள் ளாட்டின்பாலும் மைந்தனே ஆவின்பால் தேங்காய்ப்பா லும்,தேனென்ற ஆவின்நெய்திறமாய் வாங்கித்தேசிகனே வகைவகைக்குப் படி காலப்பா, கோனென்ற சீனியதுகற் கண்டோடு கொற்றவனே பலமைந்து கொண்டுசேரே. ()

சேர்ந்தபின்பு அடுப்பேற்றித் தீயைமூட்டிச் சிறுக எரிமெழுகுபதஞ் சிவக்கும்போது, கோர்த்தெடுத்து வடி கட்டிக் கொண்டு தானும் கொற்றவனே கரண்டிவீதங் கொடுத்தா யானால், கார்த்திருந்த கணம்நீங்கிக் கரும்பு போலாம் கட்டழகு பிள்ளைகட்குக் களையுமுண்டாம், பூத் தமறை போகருட கடாட்சத் தாலே புலிப்பாணி புவி தனிலே பூட்டினேனே. (488)

(செ-பா.) தண்ணீர்மிட்டான் கிழங்குச்சாறு; வெள்ளாட்டுப் பால், பசுவின்பால், தேங்காய்ப்பால், பசுவின் நெய் இவைகள் வகைக்குப் படி $\frac{1}{4}$, சீனைகற்கண்டு பலம் 5, இவைகளைச் சேர்த்து எரித்து மெழுகு பதத்தில் வடிகட்டி வேளைக்கு 1-கரண்டிவீதம் கொடுத்துவந்தால் கணச்சூடெல்லாம் நீங்கி அழகுள்ள குழந்தைகளாகும்.

## 174. குழந்தைகள் வாந்தி நிற்க. (பா-1.)

பூட்டுகிறேன் குழந்தைகட்கு வாந்தி கண்டால் பூ வென்ற கிராம்புமதி விடையந்திப்பிலி, நாட்டுகிறேன் மயி லிறகு சுட்டசாம்பல் நன்முகப் பொடிசெய்து தேனில் சேர்த்து, ஊட்டவே வாந்தியது ஒழிந்து போகும் உண் மையிது தவருது உறுதி மெத்த, ஆட்சிமிகு போகருட கடாட்சத்தாலே அன்பாகப் புலிப்பாணி அறைந்திட் டேனே. (489)

(செ-பா.) இலவங்கம், அதிவிடயம், சிறுதிப்பிலி, மயிலிறகு சுட்டசாம்பல் சமமாகத் தூள்செய்து தேனில் குழைத்துக் கொடுத்தால் வாந்தி தீரும்.

## 175. குழந்தைகள் சிங்குக்கு (பா-2.)

அறைகின்றேனின்னமொரு எண்ணெயப்பா அனல் மீறிக் குழந்தைகட்டு அங்கமெல்லாம், நிறையவே சொரி சிரங்கு நின்றதானல் நிலவரமா யாமணக் கெண்ணெ யோடு மறைவான மேனியுடன் மணித்தக்காளி மைந் தனே முடக்கற்முன் வகைப்படிக்கால், குறையாமல் மூக் குரட்டை யரைத்த சாந்து கூட்டிடுவாய் எலுமிச்சம் பழத்தில்வாரே. (490)

வாராகக் காய்ச்சிவடித் தெடுத்துக்கொண்டு வகை யாகக் கரண்டிமுறை கொடுப்பாயப்பா, நேராகப் பத்தி யந்தா னிச்சாபத்தியம் நிச்சயமா யைந்துநா ளேழுநா

ளாம், சீராகத் தலைமுழுகி வருவராகில் சிறுசிரங்கும் பெரு சிரங்கும் நில்லா தோடும், பேருகப் போகருட கடாட் சத்தாலே பேசினேன் புலிப்பாணி பேசினேனே. (491)

(செ-பா.) சிற்ருமணக் கெண்ணெய், குப்பைமேனிச் சாறு மணத்தக்காளிச் சாறு முடக்கற்ருன் சாறு, வகைக்குப்படி கால் மூக்கிரட்டை யரைத்தவிழுது, எலுமிச்சங்காயளவு கலந்து காய்ச்சி வடிகட்டிக் காலையில்மாத்திரம் 5, அல்லது 7-நாள் கொடுத்து இச்சாபத்தியம் வைத்துப் பிறகு தலைமுழுக்கிட்டு வருவாராளுல் சிறுசிரங்கு பெருசிரங்கு இருவகையுந் தீரும்.

## 176. சிரங்குக்கு மேற்பூசுந் தயிலம். (பா-1.)

பேசுகிறேன் மேல்பூசுந் தயிலமொன்று பெரியாம் பல் கிழங்குடனே செங்கத்தாரி, மாசறவே எடைக் கெடைதா னெடுத்துக்கொண்டு மைந்தனே அவுரிச்சார் தன்னுல் ஆட்டி, நாகமென்ற நிம்பளண்ணெய் தன்னில் கூட்டி நான்குநாள் பூசிவரச் சிரங்கு போகும், தேசிகனுர் போகருட கடாட்சத்தாலே தெளிவாகப் புலிப்பாணி பாடினேனே. (492)

(செ-பா.) அல்லிக்கிழங்கு, சுருள்பட்டை இவை இரண்டும் சமமாயெடுத்து அவுரிச்சாற்ருலரைத்து வேப்பெண்ணெயிற் கலந்து நான்குநாள்வரைக்கும் பூசிக்கொண்டுவந்தால் சிரங்கு தீர்ந்துவிடும்.

## 177. பிள்ளைபெறமாட்டாதவர்க்கு. (பா-2.)

பாடியேபிள்ளை வெளிகாணுத பேர்க்குப் பண்பான கீழ்க்காயி னெல்லிமூலம், வாடியே போகாமல் வளையமாட்டி வசமான இடக்கால் பெருவிரலில் போடே, நீடியேபிள்ளை வெளிகாணுமப்பா நினைவாக இன்னமொரு வேரைக்கேளு, சூடியே முன்னைவேர் தனை யெடுத் துச் சுரபியெனும் பசுவின்பால் தனிலரைத்தே. (493)

அரைத்தெடுத்து உள்ளுக்குக் கொடுத்தால்பிள்ளை அப்பனே கீழ்விழுந்து அழுகும்பாரு, மறைத்தபொரு ளென்றுநீ மயங்கவேண்டாம் மகாகோடி புண்ணியங்க ளுனக்குண்டாகும், துரைத்தனமாய் நீயலைந்து திரிய வேண்டாம் தூய்யமெனும் நூல்களெல்லாந் துணிந்து பாரு, உரைத்தகுரு போகருட கடாட்சத்தாலே உரைத் திட்டேன் புலிப்பாணி யுலகில்தானே. (494)

(செ-பா.) கீழ்வாய் நெல்லிவேர் வதங்காமல் எடுத்து வளை யஞ்செய்து பெண்ணின் இடதுகால் பெருவிரலில் போடப் பிள்ளை பிறக்கும்.

178. பசுமுன்னை வேரைப்பசுவின் பாலிலரைத்து உள்ளுக் குக் கொடுத்தால் பிள்ளைகீழ் விழுந்தழும் மெய்யானவித்தை.

## 179. கற்றாழை நாற்றந்தீரக்கூட்டு. (பா-1.)

உலகினிலே மானிடர்க்குக் கற்றாழைநாற்றம் ஓடி விடச்சாந்தொன்று உரைக்கக்கேளு, நல்நாரிகரந்தையுட வேருங் கூட நன்னாரிவேருடனே முத்தக்காசு, குலமில குங் கஸ்தூரி மஞ்சள் தானுங் கூட்டியே வகைவகைக்கு வராகனைந்து, கலகமில்லை யரைத்ததனை முகட்டில் பூசக் கண்டோடுங் கற்றாழை நாற்றமென்னே. (495)

(செ-பா.) நன்னாரிவேர், சிவகரந்தைவேர், கோரைக்கிழங் கு, கஸ்தூரிமஞ்சள் இந்நான்கும் வகை ஒன்றுக்கு ஐந்து வராக னெடை சேர்த்து வெந்நீராலரைத்து அக்குளில் பூசிக் கொண்டால் கற்றாழை நாற்றந் தீரும்.

## 180. தலைப்பேனுக்கு மாரணம் (பா-1.)

எண்ணவே தலையிலுள்ள பேன்கள்சாவ எடுத்துரைப் பேன் சூதமொரு கழஞ்சுவாங்கி, நண்ணவே மேனிச்சா றிட்டு ஆட்டு நன்னூலில்தான் புரட்டி நவிலக்கேளு, திண் ணவே சிகையில் சிக்கம்போல் சொருகச் சிரசிலுள்ள

பேண்களெல்லாஞ் செத்துப்போகும், கண்ணவே போக ருட கடாட்சத்தாலே கலையறிந்து புலிப்பாணி காட்டி னேனே. (496)

(செ-பா.) ஒன்றேகால் வராகனெடை இரசத்தைக் குப்பை மேனிச் சாற்றாலரைத்து நூலில் புரட்டிக்கொண்டு தலைமயிரில் ஒரு வலைபோல் சொருகிவைத்தால் தலையிலுள்ள பேன்களெல் லாம் இறந்துபோம்.

## 181. முப்பூ சிறப்பு. (பா-1.)

காட்டினேன் முப்புவே கலனில்லாமல் கண்டறிந்து செய்தொழிலில் கலந்துகொள்ள, நாட்டினேன் கஷ்ட மொன்றுமில்லையப்பா நன்மையுடன் நீயடாநாதனென் பார் பூட்டினேன் கெவுனமுதலிதிலேயாகும் புண்ணிய னே வாதமொடு வைத்தியமாடும், காட்டினேன் போக ருட கடாட்சத்தாலே கனமாகப் புலிப்பாணி கலையில் தானே. (497)

(செ-பா.) முப்பூவைச்செய்கிற தொழில்களிலெல்லாம் சேர்த்துக்கொண்டால் கவுனமுதல் சித்தியாம், வாதம், வயித் தியம் இவைகள் யாவுஞ் சித்தியாகும்.

## 182. நூற்றெட்டுப்பு. (பா-1.)

கலையிலே பதினாறும் இருபத்தைந்துங் கனமான வைம்பதுடன் னூறும்பாரு, நிலையிலே சன்முகத்தின் பூசைமார்க்கம் நீமகனே சாலமிரு நூறும்பாரு, மலையிலே பலதிரட்டு முந்நூறப்பா மைந்தனே சோதிடமு முந் நூறப்பா குலையிலே கொக்கோக முந்நூறுதானுங் குரு வான போகருட கடாட்சமாமே. (498)

(செ-பா.) பதினாறு, இருபத்தைந்து, ஐம்பது, நூறு, சண் முகபூசை இருநூறு, பலதிரட்டு முந்நூறு, சோதிடம் முந்நூறு, கொக் கோகம் முந்நூறு இவைகள் என்னாற் செய்யப்பட்ட நூற்களாம்.

## 183. வயித்தியர்க்குப் புத்தி கூறல். (பா-1.)

ஆமேதான் பண்டிதரே யறையக்கேளீர் ஆதரையி லெளியோர்க்கு அவிழ்தமீந்து, தாமேதானன்னமிட்டு வஸ்திரமீந்து தயவாகத் தன்னுயிர்போ லவரைக்காத் துத், நீமேதான் சேராமல் புண்ணியவானுய்த் தீர்க்க முள்ள வைத்தியராய் இருந்துவாழ்வீர், நாமேதான் போகருடகடாட்சத்தாலே நலமாகப் புலிப்பாணி நவின் றிட்டோமே. (499)

(செ-பா.) வயித்தியர்களா யுள்ளவர்கள் ஏழைகளுக்கு மருந்து கொடுத்து அன்னமிட்டுத் துணிகொடுத்து அவர்களைத் தன்னுயிர் போற்காத்துப் பாவத்திற்சேராமற் புண்ணிய வானுய் வாழவேண்டும்.

## 184. நோயாளிகட்குப் புத்திகூறல். (பா-1.)

நவின்றிட்டோம் புவிதனிலேவைத்திய மார்க்கம் நன்ருகச் சொல்லிவைத்தே னிந்நூல்வேண்டும், பவின் றிட்ட நோயாளர் வைத்தியோர்க்குப் பண்பாகத்தொழு தேத்தித் தாம்பூலமீந்து, இவின்றிட்ட மவையெல்லா மவர்க்குச்சொல்லி இதம்பெறவே செய்தபின்பு அவிழ் தங்கொள்வாய், கவின்றிட்ட போகருட கடாட்சத்தா லே காசினியில் புலிப்பாணியைந் நூறுமுற்றே. (500)

(செ-பா.) நோயாளிகளா யுள்ளவர்கள் வயித்தியர்களைத் தொழுது தாம்பூலங் கொடுத்து இதமாக உள்ள நோய்களைச் சொல்லி அவர்கள் கொடுக்கும் மருந்துகளைப் பெற்றுச் சாப் பிட்டு நோய் தீர்த்துக்கொள்ள வேண்டும்.

## புலிப்பாணி முனிவர் வயித்தியம் 500

மூலமும் - உரையும்

முற்றுப்பெற்றது.



PRINTED AT THE SRI "BHARATHI" PRESS, CHOOLAI, MADRAS

மூற்றிலும் வியப்பு! முற்றிலும் வியப்பு!!

# கமலவல்லி அல்லது கன்னியின்சமர்த்து

இஃது ஓர் சிறந்த துப்பறியும் நாவல். மனந் திடுக்கிடக் கூடிய அநேக சம்பவங்களும் செறிந்து கிடக்கின்றன.

கன்னிகையான கமலவல்லியை நாகபூஷணம் என்பான் மணந்து கொள்ளப் பலகடுமையான சூழ்ச்சிகள் செய்தும் கமலவல்லி தப்பித்துக் கொள்ளும் சாமர்த்தியத்தைப் படிக்குந்தோறும் யாவரும் பரவசமடைவார்கள். மேஜர்ஜெயராம் மீனுவதியின் அறையில் வீரகேசரியால் கொல்லப்பட்டது மிகவும் பரிதாபத்தை யுண்டாக்கும். குறிசொல்லும் கிழவி யொருவள் கமலவல்லியைப் பலஇடையூறுகளினின்றும்காப்பாற்றுவது மிகுந்த ஆச்சரியத்தையுண்டாக்கும் கமலவல்லியின் மேல் இச்சைகொண்டிருக்கும் நாகபூஷணத்திற்கும் தேவசுந்தரிஎன்னும் மற்றோர் மாதுக்கும் உள்ள ரகசியங்களும் அவர்களின்சரித்திர முடிவில் விவரித்துள்ள வெள்ளை ரோஜா மலரின் மர்மமும், அதனால் கஷ்டமடைந்த தேவசுந்தரியின் சரித்திரமும் படிப்பவருள்ளத்தைப் பதைக்கச் செய்யும். இடையிடையே விவரித்திருக்கும் காந்தாமணி, கருணம்பாள், தாட்சாயணி, கோமளாம்பாள், முதலியவரின் சரித்திரங்கள் ஆச்சரியந் தருவன.



இதிலடங்கியுள்ள விஷயங்கள் அபாரமானதால் இதைத் தனித்தனி இரண்டு பாகங்களாக அச்சிடப்பட் டிருக்கின்றன.

பாகம் 1-க்கு ரூ. 1 12 0 பாகம் 2-க்கும் ரூ. 3 8 0